MAHAGANAPATI

# SAHASRANAMASTOTRA

With

## Commentary 'Ganesapriya'

by

**Prof V. S. V. Guruswamy Sastrigal**



*Published by*

SREE AZHAHIA KANNI VINAYAKAR KOVIL TRUST

T. C. 35/867
Sabapathi Kovil Street
Chalai, Trivandrum - 695023
(KERALA).
1976

Price-5-Rs.

Price 2 Rs.

'கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்
கபடு வாராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணி இலாத உடலும்

சலியாத மனமும் அன்பு அகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்

தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு
துன்பம் இல்லாத வாழ்வும்
துய்ய நின் பாதத்தில் அன்பும் உதவிப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்;

அலையாழி துயிலும் மாயனது தங்கையே!
ஆதிகடவூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!

# MAHAGANAPATHI SAHASRANAMASTOTRAM

[DISCRIBED IN GANESAPURANA]

WITH THE COMMENTARY, GANESAPRIYA, IN TAMIL


by

Sahityavisarada Sahityavedanta siromani

**V. S. V. GURUSWAMYSASTRIGAL**

Rted. Professor of VEDANTA Govt Sanskrit College, Trivandrum and Recepient of the Certificate of Honour from The President of India for Eminent Scholorship in Sanskrit





Published

by

**Sree Azhahiya Kanni Vinayakar kovil Trust**
**35/867. Sabhapathy kovil Street Chalai**
**Trivandrum 695023**
**Kerala**





1975


Price-5-Rs

Price Rs. 2/-

श्रीः

# महागणपति सहस्रनाम-स्तोत्रम्

(गणेशपुराणान्तर्गतम् ।)

गणेशप्रियाख्यया द्राविडीव्याख्यया समेतम् ।

ஸ்ரீ:

# மஹாகணபதி ஸஹஸ்ரநாமஸ்தோத்ரம்

பாரத ராஷ்டிரபதி அவர்களால் ஸம்ஸ்கிருதப்புலமைக்கு
வெகுமதிபத்திரம் பெற்ற-பேராசிரியர்-ஸாஹித்ய வேதாந்த சிரோமணி

V. S. V. குருஸ்வாமி சாஸ்திரி களால்

இயற்றப்பட்ட

## கணேசப்ரியை

(என்ற தமிழ் விரிவுரையுடன் கூடியது)

ஸ்ரீ அழகிய கன்னி விநாயகர் கோவில் டிரஸ்ட்
35/867 சபாபதிகோவில் தெரு சாலை
திருவனந்தபுரம் 695023
கேரளம்



1975



தமிழ்நாடு குமரிஜில்லா தோவாளையில் குடிகொண்டு விளங்கி அருள் பாலித்துவரும் ஸ்ரீ அழகிய கன்னி விநாயகப் பெருமானின் திருவுருவம்.

''உருவம் பெரிததனில் உள்ளம் பெரிது
தரு நல் வரமும் பெரிதே—பருவமதில்
பெய்யும் பெருமழைபோல் பெய் கருணைதான் பெரிதால்
ஐய! பெரிதுன் அருள்''.

# உரை ஆசிரியரின் அறிவிப்பு

ஸ்ரீ கணேச புராணம் உபாஸன கண்டத்தில் விளங்கும் "மஹா கணபதி ஸஹஸ்ரநாமம் என்ற துதி நூலானது, "கத்யோதம்" எனப்படும் வடமொழி உரையைத் தழுவியதும், விரிவானதுமான "கணேசப்ரியை" எனப்படும் தமிழுரையுடன் வெளியிடப்படுவது இதுவே முதலாவதாகும்.

1. "மஹாகணபதி ஸஹஸ்ரநாமம்" என்ற பெயரே பொருத்தமானது:—

இந்த துதி நூலின் முடிவில் அதன் பயனைக் கூறுமிடத்தில், "இவ்விதம் விநாயகருடைய ஆயிரம் திருநாமங்கள்" "इति वैनायकं नाम्नां सहस्रम्" என்றும், "இந்த கணபதியின் ஸ்தோத்திரம்" "स्तोत्रं गणपतेरिदम्" என்றும், "மஹாகணபதியின் ஸ்தோத்திரம்" 'महा– गणपतेः स्तोत्रम्" என்றும், "கணேசருடைய ஆயிரம் நாமாக்கள்" 'गणेशसहस्रनाम्नाम्' என்றும், அவருடைய நான்கு விதமான பெயரைச் சேர்ததுக் கூறி இருப்பதால் இந்த துதிநூலே, விநாயக ஸஹஸ்ரநாமம், கணபதி ஸஹஸ்ரநாமம், மஹாகணபதி ஸஹஸ்ர-நாமம், கணேச ஸஹஸ்ர நாமம் என்று நான்கு விதமாக அழைக்க-லாம். எனினும், மஹாகணபதி ஸஹஸ்ர நாமம் என்று அழைப்பது இந்த நூலுக்கு மிகவும் பொருத்தமுள்ளதாகும். அதற்குரிய காரண-ங்கள் பின்வருமாறு:—

(i) நூலின் தொடக்கத்தில், "மஹாகணபதி நேராகவே தன்னுடைய ஆயிரம் திருநாமங்களை சிவபெருமானுக்குக் கூறினார்." "महागणपतिःस्वयं । ततस्तस्मै स्वकं नाम्नां सहस्रमिदमब्रवीत्" என்று ஆரம்பிககப்பட்டிருக்கின்றது. (ii) துதிநூலின் நடுவே மஹா-கணபதி என்ற நாமம் முப்பத்து ஏழாவதாக மொழியப்பட்டுள்ளது. (iii) நூலின் முடிவிலும் "महागणपतेः स्तोत्रम्" என்று குறிக்கப் பட்டிருக்கிறது. (iv) இந்த துதி நூலைப் பாராயணம் செய்-வதற்குச் சக்தி இல்லாத பக்தனுக்கும், அப்பயனை அளிக்க விரும்பும் மஹாகணபதி, தன்னுடைய ஒப்புயர்வற்ற இருபத்து ஒன்று திரு-நாமங்களை, ஆயிரம் திருநாமங்களுக்குப் பதிலாக பாராயணம்

செய்வதற்கு உபதேசித்திருக்கிறுர். அந்த நாமாக்களுள் மஹாகணபதி என்ற திருநாமம் ஐந்தாவதாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. எனவே நூலின் முதலிலும், நடுவிலும், முடிவிலும் முக்கியமான நாமாக்களின் வரிசையிலும் குறிப்பிடப்படும் நான்கு விதமான பெருமை மஹா-கணபதி என்ற திருநாமத்திற்கு மட்டுமே இருப்பதனுல், அந்நாமத்-துடன் சேர்த்து துதிநூலைக் குறிப்பிடுவது மிகவும் பொருத்தமான-தாகும்.

2. ''மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்தின் தனிச்சிறப்பு:-

பெரும்பாலும் எல்லா தெய்வங்களுக்கும் ''ஆயிரம் திருநாமங்கள்'' இதிஹாஸ புராணங்களால் படிக்கப்பட்டுள்ளன. அந்தந்த தெய்வ-ங்களின் திருநாமங்களை அந்தந்த தெய்வங்களே உபதேசித்தன என்பதில்லை. மஹாவிஷ்ணுவின் ஸஹஸ்ர நாமத்தை ராஜரிஷியான பீஷ்மர் தர்மபுத்ரருக்கு உரைத்ததாக மஹாபாரதம் கூறுகின்றது. ஸ்ரீ லலிதாதேவியின் ஸஹஸ்ரநாமத்தை ஹயக்ரீவ முனிவர் அகஸ்த்ய மாமுனிவருக்கு அருளியதாக ப்ரும்மாண்ட புராணம் பகருகின்றது. மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்தை மஹாகணபதியே உபதேசித்ததாக கணேசபுராணம் மொழிகின்றது. மேலும் மஹாபுராணங்களுள் ஒன்ருன பிரம்ஹாண்டபுராணம், பூர்வகண்டத்தில் 47 முதல் 53 வரையுள்ள அத்தியாயங்களால் வியாஸமுனிவரே உபபுராணங்களுள் ஒன்ருன கணேச புராணத்திலுள்ள இந்த மஹாகணபதி ஸஹஸ்ர-நாமத்திற்கு சுலோக ரூபத்தில் உரை செய்திருக்கிறுர் என்பது இதன் மேன்மைக்கு எடுத்துக்காட்டாகும். திரிபுராஸுரனை வெற்றி கொள்வதற்கும், போரில் இடையூறுகள் நேராதிருப்பதற்கும் மஹா-கணபதியின் திருநாமங்களை தேவர்களுள் சிறந்த மஹாதேவனும் தந்தையுமான பரமசிவன் செவியுற்ருர் என்பதும் இதன் மிகுந்த மேன்மையைக் குறிப்பதாகும்.

''தச்சு விடுத்தலும் தாமடியிட்டலும்
அச்சு முறிந்ததென்று உந்தீபற
அழிந்தன முப்புரம் உந்தீபற''

(திருவாசகம் பா 296) என்று மாணிக்கவாசகரும் திருபுரனை வெற்றி கொள்வதற்குப் பரமசிவனுக்கு அருள் புரிந்ததைச் சுட்டிக் காட்ட மஹாகணபதியின் பெருமையைப் பாடியிருப்பது கவனத்திற்-குரியதாகும்,

மஹாகணபதி தன்னுடைய திருநாமங்களுக்குப் பலனைக் கூறு-மிடத்தில், "பெண்களும் அந்தணரல்லாதவர்களும், கொடிய பாவத்தைச் செய்தவர்களும், ஒருதடவை உறுவிட்டதனாலேயே எல்லா-விதமான நலனையும் தருகின்ற இந்த ஸஹஸ்ர நாமத்தை, நலம்பெற ஜபிக்கவேண்டும்"

ஸக்ருத் பாடேந

"सकृत्पाठेन संसिद्धः स्त्रीशूद्रपतितैरपि ।
सहस्रनाममन्त्रोऽयं जपितव्यः शुभाप्तये ॥

189 - 2வரி
190 - 1வரி

என்று உரைத்திருக்கிறார். ஏனைய ஸஹஸ்ரநாமங்களுடைய "பலச்ருதி"ப் பகுதியில் இங்ஙனம் மனித இனத்தில் பிறந்த அனை-வருக்கும் நாமங்களைப் படிப்பதற்கான உரிமையைத் தெளிவாகக் குறிப்பிடவில்லை. எனவே மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்திற்கு இது ஒரு குறிப்பிடத்தக்க விசேஷாம்சமாகும்.

"திரு பாஸ்கரராயர்":—

"கத்யோதம்" எனப்படும் மஹாகணபதி ஸஹஸ்ர-நாமத்தின் உரையின் ஆசிரியர் பாஸ்கரராயரைப் பற்றிச் சில வார்த்-தைகள் கூறிவிட்டு அவ்வுரையைப்பற்றிப் பேசுவோம்.

திரு. பாஸ்கரராயர் கி. பி. பதினேழாவது நூற்றாண்டில் மஹா-ராஷ்ட்ரதேசத்தில் 'விஜயா' மாவட்டத்தில் 'தனுஜா' எனப்படும் கிராமத்தில் கம்பீரராய பாரதீ அவர்களுக்கும், கோணமாம்பாளுக்கும் புதல்வராகத் தோன்றினர். பாஸ்கரராயர், தன் இளமைப் பருவ-த்தைத் தன்னுடைய தாய் தந்தையருடன் "பாகா" என்னும் சிறிய பட்டணத்தில் கழித்தார் பிறகு வித்யைகளைச் சிறந்த முறையில் பயிலுவதற்கு காசிதேசத்திற்குச் சென்றார். அங்கு நரஸிம்ஹர் எனப்படும் மஹாவித்வானை வித்யாகுருவாக அடைந்து அவரிட-மிருந்து எல்லாவிதமான கல்விகளையும் கசடறக் கற்றுணர்ந்தார். அதன்பின் "சூரத்" தேசத்தில் வாழும்" சிவத்ததசுக்ல என்ற மஹானை ஸ்ரீவித்யா தீக்ஷா குருவாகப் பெற்று முறைப்படி தீக்ஷை அடைந்து ஸ்ரீவித்யோபாஸன முறையை அறிந்து திறம்பட உபாஸித்து வந்தார். பாஸ்கர ராயர் இந்தப் புண்ணிய பாரதத்தில் கிழக்கே அஸ்ஸாமில் இருக்கும் காமரூபம், தெற்கே ராமஸேது, மேற்கே காந்தாரம், வடக்கே ஹிமயமலையிலிருக்கும் கேதாரம் வரை உள்ள ஸகல தீர்த்தங்களையும், க்ஷேத்ரங்களையும் தர்சித்து வந்தார். அக்காலத்திலிருந்த வேந்தர்-களனைவருக்குமே ஸ்ரீவித்யையை உபதேசித்து தேவியிடம் திடமான

பக்தி உள்ளவர்களாக அவர்களை செய்தார். மேலும் அவர் அவ்வரசர்களைக் கொண்டு பெரும்பாலும் பெரிய பட்டணங்களில் திருக் கோயில்களுக்கும், திருக்குளங்களுக்கும் திருப்பணிகள் செய்தார். ஆனந்தீ என்ற பெண்ணை மணந்து கொண்டு பாஸ்கரராயர் சில வருடங்கள் காசியில் வாஸம் செய்தார். அச்சமயம் அங்கு நடைபெறும் அவைகளில் அவர் வாதங்களில் அறிஞர் அனைவரையும் வெற்றி கொண்டு வித்வான்களுடைய கூட்டத்திற்கே தலைவராகத் திகழ்ந்தார். இம்மண்ணுலகில் இம்மஹானால் காணப்படாத புண்ணியத்தலம் ஒன்றும் இல்லை. இவரிடமிருந்து மந்த்ரோபதேசம் பெற்றுக் கொள்ளாத அரசர் அக்காலத்திய வேந்தர்களுள் ஒருவரும் இல்லை. இவரால் அறிந்து கொள்ளப்படாத சாஸ்திர விஷயம் ஒன்றும் இல்லை. பராசக்தி இவர் உள்ளத்தில் எப்பொழுதும் வஸித்து வந்தாள். பக்தர்களுடையவும், அறிஞர்களுடையவும், சிஷ்யர்களுடையவும் வேண்டுகோளுக்கு இணங்கி எண்ணிறந்த நூல்களை அவர் இயற்றினர் அவைகளுள் முப்பத்து எட்டு நூல்களின் பெயர்களை பாஸ்கரராயருடைய நேர் மாணுக்கரான ஜகந்நாத பண்டிதர், தான் இயற்றியதன் குருவின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் நூலில் குறித்திருக்கிறார். அந்நூல்களுள் ''வரிவஸ்யாரஹஸ்யம்'', ''லலிதா ஸஹஸ்ர நாம பாஷ்யம்'', ''ஸேது பந்தனம்'' என்ற தேவியைப் பற்றிக் கூறும் நூல்கள் சிறந்தவைகள். கடைசியாக, மஹாகணபதி ஸஹஸ்ரநாமத்திற்கு செய்யுள் வடிவத்தில் கத்யோதம் என்ற மிகச் சிறந்த உரையை பாஸ்கரராயர் எழுதி முடித்தார். பிறகு காசி தேசத்தை விட்டு கிருஷ்ண நதிக்கரையில் சில ஆண்டுகள் தங்கியிருந்தார். பின்னர், சோழ தேசத்தில் தஞ்சை மாவட்டத்தில் காவிரி ஆற்றின் வடகரையில் நீண்டகாலம் வஸித்து வந்தார். எனவே அத்தலமானது ''பாஸ்கர புரம்'' என்று புகழ்பெற்று இன்றும் விளங்குகிறது. தனது இறுதிக் காலத்தில் அருகாமையில் இருக்கும் ''மத்யார்ஜுனம்'' (திருவிடை மருதூர்) என்ற புண்ணிய க்ஷேத்ரத்தில் தங்கி ஜ்யோதிர் மஹாலிங்கத்துடன் இரண்டறக் கலந்துவிட்டார்.

4. ''கத்யோதம் எனப்படும் வடமொழி உரையின் தோற்றம்''

பாஸ்கரராயர் காசியில் வாழும்போது மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்திற்கு முன்னேர்களால் இயற்றப்பட்ட சில வடமொழி உரைகளைக் கண்ணுற்றார். அவ்வுரைகளில் அதன் ஆசிரியர்களுக்கு மஹாகணபதியின் மேன்மையைப் புகட்டும் மந்த்ர தந்த்ர சாஸ்திரங்கள், புராணங்கள் இவைகளுள் அடங்கியிருக்கும் பொருள்களைப் பற்றிய அறிவு இல்லாததால் பலவிதமான பிழைகள் எங்கும் மலிந்து

தென்பட்டன. அவையாவன:—பெரும்பாலும் நாமாக்களுக்குப் பொ-ருத்தமில்லாத பொருள் உரைக்கப்படுதல், ஒரு நாமம் இரண்டு நாமாக்களாகவும், இரண்டு நாமாக்கள் ஒரு நாமாவாகவும் படிக்கப் பட்டு ஆயிரம் நாமாக்களாக கணக்கிடப்படுதல், அகராதி முறையில் படிக்கப்பட்டுள்ள நாமாக்களிடையே அதற்கு முறனுக நாமம் பிரிக்கப் பட்டு பொருள் படுத்துதல், ஒரு நாமத்தை இரண்டு நாமாக்களாகப் பல இடங்களில் பிரித்து ஆயிரத்தை ஆயிரத்து எட்டு நாமாக்களா-கவும் ஆயிரத்து முப்பத்து நாலு நாமாக்களாகவும் படித்து உரை செய்தல் முதலியவைகளாகும். வேதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், மந்த்ர தந்த்ர சாஸ்திரங்கள் இவைகளை நன்கு உணர்ந்த வரும், பராசக்தியின் பரிபூர்ண்மான அருள் பெற்றவரும், ஸித்த-புருஷருமான திரு. பாஸ்கரராயர் அவர்கள், முன்னோர்களின் உரைகளின் பொருத்தமின்மையைக் காட்டுவதும், குற்றமற்றதும் தக்க பிரமாணத்துடன், மேற்கோளுடனும் பொருத்தமான பொருளை விளக்குகின்றதுமான "கத்யோதம்" என்ற உரையை காசிக்ஷேத்ர-த்தில் எழுதி முடித்தார். இவ்விஷயத்தை பாஸ்கரராயர் தன் உரை-யின் தொடக்கத்திலும் முடிவிலும் உரைத்திருக்கின்ருர். அது பின் வருமாறு:—

"மஹாகணபதியின் மந்த்ரங்கள், தந்த்ரங்கள், புராணங்கள் இவைகளை நன்கு உணராமல் தங்களுடைய புத்திக்குத் தோன்றியபடி பொருத்தமில்லரத பொருள்களைக் கூறும் இயல்புடைய முன்னோர்-களுடைய உரையைத் தவிர்த்து, பிரமாணங்களின் வாயிலாக பொருத்தமான பொருளை உணர்ந்து நான் மஹாகணபதியின் அடி-யார்களின் ஸந்தோஷத்தையே முக்யமான பயனுகக் கருதி கணபதி-யின் திருநாமங்களின் பொருளைக் கூறுகிறேன்"

"प्राचां कुसृष्टिरचनैकमयस्वभावा--

—मज्ञातगाणपततन्त्रपुराणभावाम् ।

व्याख्यामुदस्य सुविभाव्य गणेशनामा—

न्यर्थापयामि तदुपासकतुष्टिहेतोः ।

சிறந்த வித்வானுகிய கம்பீரராயருடைய புதல்வரும் காசியில் வசிப்பவரும், முக்கண்ணனுன விச்வேச்வரருடைய திருவடிகளை ஸேவிப்பவரும், அனேகம் வேள்விகளைச் செயது முடித்து முடிவில் அக்நிசயனம் செய்தவருமான பாஸ்கரராயர் மஹாகணபதியின் கருணையால் ஏற்பட்ட நல்லறிவால், முடிவு காண முடியாத பெருமை

வாய்ந்தவைகளாக இருப்பினும் அவருடைய ஆயிரம் திருநாமங்க-ளுக்கும் நல்லோர்களுடைய உள்ளங்கள் களிப்புற்றிருக்க அத்திரு-நாமங்களின் பொருத்தமான பொருளை விளக்கி 'கத்யோதம்' எனும் உரையை இயற்றியுள்ளார். गभीरबुधयज्वनस्तनुभुवोऽधिवाराणसि त्रिलो-चनपदानुगः कृतमखोऽग्निचिद्भास्करः । महागणपतेर्महान्त्यपि सहस्र-नामानि तद्दयाजनितया धिया सुजनतुष्टये व्याकरोत्'' என்ற இரண்டு சுலோகங்களும் முன்பு கூறியவற்றில் ஏற்ற சான்றாகும். "खं ब्रह्म'' என்று சாந்தோக்யோபநிஷத் பரம்பொருளை ஆகாசம் என்று மொழிந்துள்ளது. எனவே பாஸ்கரராயர் மஹாகணபதி வடிவமான பரம் பொருளாகிய ஆகாசமானது, ஆயிரம் திருநாமங்க-ளுக்கும் பொருள் என்று விளக்கிக் காட்டும் தனது உரைக்கு 'கத்யோதம்' என்ற பொருத்தமான பெயரை அமைத்துள்ளார்.

"கணேசப்ரியை'' எனப்படும் தமிழுரை:—

பாஸ்கரராயர் இயற்றிய 'கத்யோதம்' என்ற வடமொழி உரை இருபத்து ஐந்து வருடங்களுக்கு முன்னதாக அதாவது கி.பி. 1951 வது வருடம் பம்பாயில் இருக்கும் நிர்ணயஸாகர அச்சகத்தில் அச்சிட்டு முதல் தடவையாக வெளியிடப்பட்டது. எனினும் வட-மொழி உரையின் தோற்றத்திற்கு முன் ஸஹஸ்ர நாமத்தைப் பற்றி-யிருந்த குற்றங்கள் மறையவில்லை. மஹாகணபதியை அர்ச்சனை செய்து வழிபடுவதற்கென்று தேவநாகரம், கிரந்தம், தமிழ், மலை-யாளம், தெலுங்கு, கன்னடம் முதலிய எழுத்துக்களில் பலரால் ஸஹஸ்ரநாமங்கள் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளன. அவைகளில். முன் கூறப்பட்ட குற்றங்கள் நிறைந்து காணப்படுகின்றன. இதில் ஒன்றிரண்டு உதாரணங்களைக் காண்பிப்போம்.

சென்னையில் வாவிள்ளா அச்சகத்திலிருந்து கி. பி. 1972 வது வருடம் அச்சிட்டு வெளியிடப்பட்டதும், தேவநாகர லிபியில் உள்ளது-மான கணபதி ஸஹஸ்ரநாமத்தில் ஆயிரத்து முப்பத்து நான்கு நாமாக்கள் உள்ளன. "ஸத்யோ ஜாதஸ்வர்ணமுஞ்ஜமேகலீ'' என்ற ஒரு நாமம் "ஸத்யோஜாத:'', :'ஸ்வர்ண புஜ:'', "மேகலீ'' என்று மூன்று நாமாக்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. "அவிக்ன:'', "தும்புரு:'' என்ற நாமாக்கள் "விக்ன:'', "துங்கபுஜ:'' என்று மாறு-பாடுடன் காணப்படுகின்றன. இங்ஙனம் பல பிழைகள் உள்ளன.

சென்னையில் பாரதி விஜயம் அச்சகத்திலிருந்து கி. பி. 1961 வது வருடம் ஸ்ரீ C. V. ஸ்வாமி சாஸ்திரிகளால் வெளியிடப்பட்ட "மஹாகணபதி ஸபர்யாபத்ததி" எனும் நூலில் அச்சிடப்பட்டுள்ளதும் தேவநாகர லிபியில் உள்ளதுமான ஸஹஸ்ரநாமத்திலும் முன்பு உரைத்த தவறுகள் துலங்குகின்றன. "தூர்வஹ:" என்ற நாமம் "தூர்ஜய:" என்றும், "விக்ன ஸம்பல்லவோபக்ன:", "ஸேவோந்நித்ரமதத்ரவ:" என்ற நாமாக்கள் "விக்ன ஸ்ம்பல்லவோபக்னஸேவ:", உந்நித்ர மதத்ரவ:" என்றும், 'நந்த்ய:' என்ற நாமம் "நந்த:" என்றும், "லாபக்ருல்லோகவிச்ருத:" என்ற ஒரு நாமம் "லாபக்ருத்", "லோகவிச்ருத:" என்று இரண்டு நாமாக்களாகவும், "திவா", "நக்தம்" என்ற இரண்டு நாமாக்கள் "திவாநக்தம்" என்று ஒரு நாமமாகவும், "த்ரேதாத்ரிவர்கபலதாயக:" என்ற ஒரு நாமம் "த்ரேதா", "த்ரிவர்கபலதாயக:" என்று இரண்டு நாமாக்களாகவும் அச்சிடப்பட்டிருக்கின்றன.

பாலக்காட்டிலிருந்து R. S. வாத்யாராலும் அவருடைய பிள்ளைகளாலும் சேர்ந்து கி. பி. 1957 வது வருடத்தில் ஸ்காலர் அச்சுக்கூடத்தில் (Scholar Press) அச்சிட்டு வெளியிடப்பட்டதும், மலையாள லிபியில் உள்ளதுமான ஸஹஸ்ரநாமத்தில் அதிகமான பிழைகள் இல்லை. எனினும் பிழைகள் இல்லாமலில்லை. ஸஹஸ்ரநாமத்தின் தொடக்கத்தில் 5 வது ஸ்லோகத்தில் "ஸ்வகம் நாம்நாம்" என்பது "ஸர்வநாம்நும்" என்றும், "தூர்வஹ:" என்ற 62 வது நாமம் "தூர்ஜய:" என்றும் "நந்த்ய:" என்ற 530 வது நாமம் "நந்த:" என்றும் பாஸ்கரராயருடைய உரைக்கு முறணாக அச்சிடப்பட்டிருக்கின்றது.

சென்னையிலிருந்து வெளிவரும் "வைதீக தர்மவர்தினி" எனப்படும் மாதப்பத்திரிகையில், காலம் சென்ற ஸ்ரீ ஸோமதேவ சர்மா அவர்களால் தமிழ் உரையுடன் அச்சிட்டு வெளியிடப்பட்ட ஸஹஸ்ரநாமத்திலும், முன் கூறிய பிழைகளுடன் நாமாக்களுக்கு பெரும்பாலும் பொருத்தமற்ற பொருள் தரப்பட்டிருக்கின்றது. அவையாவன:—

(1) வக்ரதுண்ட:—வக்ரயானை முகத்தான்
(2) விகட:—விகடம் செய்பவர்
(3) கடங்கட:—கள்ளத்தை உரைப்பவர்
(4) நிர்குண: – குணமில்லாதவர்
(5) ஹிரண்மயபுராந்தஸ்த:—ஸ்வர்ண நகரத்தின் இடையில் உள்ளவர்.

(6) குடாரவான்:—கோடாரி உள்ளவர்.
(7) ரமாரமேச பூர்வாங்க:—லக்ஷ்மிநாராயணர் இவருக்கு முன்சரீரம்
(8) ரதிகந்தர்பபச்சிம:—ரதி மன்மதன் பின் அங்கம்
(9) ஆமோதமோதஜனன:—பல்வகை ஸந்தோஷம் தருபவர்
(10) ஸப்ரமோதப்ரமோதன:—சிறந்த ஆனந்த ரூபி
(11) விலாஸினிக்ருதோல்லாஸ:—ஸ்திரீகளுடன் லீலை செய்பவர்.
(12) சௌண்டஸௌந்தர்யமண்டித:—பெண்யானைகளின் அழகால் பிரகாசிப்பவர்.
(13) ஸப்த பாதாள சரண:—ஏழாவது பாதாளத்தில் கால் உள்ளவர்
(14) ஸப்தஸ்வர்லோக மகுட:—பாதாள ஸ்வர்கமே கிரீடம்
(15) ஷடங்குலமஹாஹ்ரத:—ஆறு அங்குலமுள்ள மடுவாக உள்ளவர்
(16) சிந்தாமணிசர்வணலாலஸ:- சிந்தாமணியில் விருப்பம் உள்ளவர்.
(17) இக்ஷுசாபநிஷேவித:—கரும்புவில்லால் ஸேவிக்கப்படுபவர்.
(18) நளினிகாமுக:—தாமரை ஓடையில் ஆசை கொண்டவர்.

என்று நாமாக்களின் பொருள்கள் எழுதப்பட்டுள்ளன. இந்த நாமாக்களுக்குப் பொருத்தமான பொருளை சுத்போதத்தைத் தழுவிய 'கணேசப்ரியை' எனப்படும் எனது இந்தத் தமிழுரையில் காண்க.

பாஸ்கரராயரின் வடமொழி உரையானது நன்கு அறியப்படாத-தனுலேயே இன்றும் ஆயிரத்தெட்டு, ஆயிரத்து முப்பத்து நான்கு என்று நாமாக்களும், அவைகளுக்குப் பொருத்தமற்ற பொருள்களும் அச்சிட்டு வெளியிடப்படுகின்றன. இத்தகைய குற்றங்களைக் குறைப்பதற்காகவே வடமொழி உரையைத் தழுவி தமிழில் ஓர் உரை எழுதி வெளியிடுவது அவசியம் எனக் கருதி "கணேசப்ரியை" என்ற இந்த தமிழ் உரை என்னால் எழுதப்பட்டது.

கணபதி வழிபாடு—உயிரோடு ஒட்டிய பழக்கம்:—

பழக்கங்களுள் சிறந்த பழக்கம் உயிரோடு ஒன்றிய பழக்கம்—தெய்வ வழிபாட்டுப் பழக்கம், இவற்றுள் விநாயக வழிபாட்டுப் பழக்கம் முதன்மையானதாகும். சிலர் தம்மைப்பெரிய அறிவாளியாக எண்ணி புறச்சூழலில் பேசப்படும் சில புற்றீசற்கருத்துக்களைப் புத்தி-யில் ஏற்று, 'பழமை யாவும் விடத்தக்கனவே' என்ற முடிவிற்கு

விரைவில் வந்துவிடுகின்றனர். பலர் பாராட்டுவதால் மட்டும் எத்த-கைய பழக்கமும் உயர்ந்துவிடாது; பலர் தாழ்த்துவதாலும் தாழ்ந்துவிடாது. அங்ஙனம் பன்மை பற்றி உயர்ந்த கருத்துக்களை, பழக்க-ங்களை இகழ்வது தாழ்ந்தோர் செயலாகும். ஆதலால் நம்மிடையே தொன்றுதொட்டு வருகின்ற பழக்கங்களை விடுதல் அத்துணை சிறந்த செயல் அன்று. ''திருவாக்கும், செய்கருமங்கை கூட்டும் செஞ்சொற் பெருவாக்கும், பீடும், பெருக்கும்—உருவாக்கும், ஆதலால், வானோரும் ஆனை முகத்தானைக் காதலால் கூப்புவர் தம்கை'' என்னும் திருமுறை தோன்றிய புண்ணிய நாடான நமது பாரதத்தில் மஹாகணபதி எங்ஙனம் எங்கும் நிறைந்து அனைவராலும் கொண்டாடப்படுகின்-றாரோ அங்ஙனம் வேறு ஒரு தெய்வமும் அவ்வாறு ஆதரிக்கப்படு-வதில்லை. பிள்ளையார் கோவில் இல்லாத ஊர் இல்லை. நான்கு சந்துகள் கூடுமிடத்திலும் பிள்ளையார்; குளக்கரையிலும் ஆற்றங்க-ரையிலும் பிள்ளையார்; அரசமரத்தடியிலும் பிள்ளையார்; சிவன் கோயிலிலும், விஷ்ணு கோவிலிலும் பிள்ளையார் காக்ஷி அளிக்கிறார். 'எல்லோரா குஹை'களில் உள்ள சித்திரங்களிலும் பிள்ளையார் உருவம் காணப்படுகின்றது. புத்தமதத்தைச் சேர்ந்தவர்களிடமும் கணபதி வணக்கம் பரவியிருந்தது. ''கணபதி ஹ்ருதயம்'' என்ற மந்திரத்தைப் பௌத்தர்கள் உறுவேற்றுவதுண்டு. பர்மா, ஸயாம், சம்பா (Champa), காம்போடியா, நேபால், திபெத், சைனா, துருக்கி-ஸ்தானம், கோடான் (Khotan), மங்கோலியா, ஜப்பான் முதலிய பிற இடங்களிலும் பல நூற்றாண்டுகளுக்கு முன்னமேயே சித்திர-மாகவும், சிற்பமாகவும் பிள்ளையார் வழிபாடு பரவியிருந்தது. இக்-காலத்தில் கலியின் கொடுமையால் நாத்திகம் ஒருபுறம் தலைதூக்கி இருப்பினும், கடவுள் வழிபாடுகள், அதிலும் கணபதி வழிபாடு, ஸஹஸ்ரார்சனை, லக்ஷார்சனை, கோடி அர்சனை என்ற முறையில் நடைபெறுவது, மற்றொரு புறம் ஆத்திகமும் வளர்ச்சி அடைந்து வருவதைக் காணலாம். அவ்வர்சனை வழிபாட்டைத் திறம்படச் செய்து முடிப்பதற்கு ஸஹஸ்ர நாமத்தின் பொருளை நேர்மையாய் அறிந்து கொள்வது மிகவும் அவசியமாகும். குறிப்பாக, வடமொழியை அறி-யாதவர்களும், கணபதி வழிபாட்டில் ஈடுபாடுடையவர்களுமான தமிழ் மக்களுக்கு நாமாக்களை ஆயிரத்திலிருந்து கூட்டவோ, குறை-க்கவோ செய்யாமல் இருக்கவும், பொருளை நன்குணர்ந்து அர்ச்சனை புரிவதற்கும் வடமொழி உரையைத் தழுவிய தமிழ் உரை பெரிதும் உபகாரமாக இருக்கும் என்ற நோக்கத்துடனேயே ''கணேச ப்ரியை'' எனப்படும் இந்த தமிழ் உரை என்னால் எழுதப்பட்டது.

பொருளை உணராது கூறப்படினும் கடவுளின் திருநாமாக்கள் பயனை அளிப்பவைகளே, பொருளை உணர்ந்து கூறப்படின் அவைகள் பதின்மடங்கு அதிகமான பயனை அளிப்பவைகளாகும்.

சங்கர பகவத் பாதாள் இதற்குக் கூறிய விளக்கத்தைக் காண்போம். கடுக்காயை அதன் தன்மையையும் வீர்யத்தையும் அறிந்தவன் உட்கொண்டாலும், அறியாதவன் உட்கொண்டாலும் ஒரே பலனைத் தரும். காட்டுவேடன் தரகனிடம் முத்து, இரத்தினம் முதலியவைகளை விற்கின்றான். தரகன் நகர வணிகனிடம் இவைகளை விற்கின்றான். வேடனை விட தரகன் முத்துக்களின் மதிப்பை நன்கு அறிவான். எனவே அவனுக்குப் பயன் அதிகம். இதுபோல், பொருளை அறிந்து அறச் செயல்களைச் செய்பவனுக்கு அதிகமான பயன் கிடைக்கின்றது. பொருள் அறியாமல் செய்பவனுக்கு குறைந்த பயன் கிடைக்கின்றது. எனவே; அதிகமான பயனைப் பெறுவதற்குக் கடவுளின் திருநாமங்களின் பொருளை உணர்ந்துகொள்வது இன்றியமையாததாகும். இவ்விஷயத்திலும் தமிழுரை பெரிதும் உதவிபுரியும் என்பதில் ஐயமில்லை.

''கணேசப்ரியை'' எனப்படும் தமிழுரையில் பாஸ்கரராயர் காட்டிய வழியைத் தழுவியே இதிஹாஸம், புராணம், மந்திரசாஸ்திரம், தர்மசாஸ்திரம், முதலிய முதல் நூல்களிலுள்ள மூலப்ரமாணங்களின் குறிப்புகளுடன் நாமாக்களின் பொருள் விளக்கப்பட்டுள்ளது. சிற்சில இடங்களில் நாமாக்களின் பொருளை விளக்குவதற்குத் தேவைப்படும் கணபதி மந்திரங்களின் ஸ்வரூபமும் எழுதப்பட்டுள்ளது. எனினும் அந்த மந்திரங்களால் கணபதியை வழிபடுவதற்கு விருப்பமுள்ளவர்கள் நல்லதோர் குருவை நாடி அவரிடமிருந்து அவைகளின் உபதேசம் பெற்று கணபதியை வழிபடுவதே முறைமை. ''கொட்டாத பஞ்சும் காட்டாத மந்திரமும் பயன்படாது'' என்பது பழமொழி. இது கவனத்திற்குரியதாகும்.

இந்தத் தமிழுரையில் காணப்படும் பயனுள்ள பொருட்கள் யாவும் எனது குருநாதனுடைய அருளால் விளைந்தவைகளாகும். குறைபாடுகள் காணப்படின் அவை அனைத்தும் அடியேனைச் சார்ந்தவைகளே ஆகும். ''கணேசப்ரியை'' என்ற இவ்வுரையைச் சமய உலகமும், அறிஞர் உலகமும் ஏற்றுக் குற்றங்களை அடியேனுக்கு

அறிவித்தும் குணங்களைப் பாராட்டியும் ஊக்கம் தந்தருளுமாக. இதனை எழுதுகின்ற காலத்து அன்புடனும், பக்தியுடனும் எழுதியும் ஒப்பு நோக்கியும் பெரிதும் உதவிய நண்பர் திரு S. ராஜகோபாலன் M.Sc (Associate Scientist, PED, SSTC, Thumba, Trivandrum) அவர்களுக்கு மஹாகணபதியின் நல்லருள் மேன்மேலும் கிட்டுவதாக.

இந்த மஹாகணபதி ஸஹஸ்ரநாமத்தை தமிழ் உரையுடன் அச்சிட்டு வெளியிடுவதற்கு திரு. A. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் முன்வந்துள்ளார். அவர், நற்பணிகளில் ஈடுபாடுடையவரும் தனது தந்தையாருமான காலம்சென்ற திரு. அழகிய நம்பியாபிள்ளை அவர்களால் ஏற்படுத்தப் பட்ட தோவாளை அழகிய கன்னி விநாயகர் கோயில் தர்மஸ்தாபனத்திலிருந்து இந்நூலை வெளியிடுகிறார். தந்தையைப் போலவே நற்காரியங்களில் நாட்டமுடைய அவர்களின் இத்தகைய முயற்சிகள் மிகவும் பாராட்டுக்குரியவையாகும். திரு. சுப்பிரமணிய பிள்ளைக்கும் அவருடைய குடும்பத்தினருக்கும் ஸகல நலன்களையும் ஸ்ரீ மஹாகணபதி அருள்வாராக

இந்நூலை நல்லமுறையில் அச்சிடுவதற்கு வேண்டிய புருப் திருத்தங்கள் பரிசோதனை முதலிய அவசியமான உதவிகள் செய்த நண்பர் சிரோமணி ஸ்ரீ. S. கணேசசர்மா, M. A; B.Ed. Rtd. District Educational Officer, Kerala State) அவர்களுக்கும் எல்லாவிதமான நலன்களையும் முழுமுதற்கடவுளான மஹாகணபதி அருள்வாராக.

முடிவில் "ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்து இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே."

என்ற திருமூலர் அருளிய "திருமந்திர" த்தில் கூறியபடி எல்லோரும் இன்பம் உற்றிருக்க மஹாகணபதியின் திருவடிகளை எப்போதும் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

திருவனந்தபுரம்
7-11-1975

இங்ஙனம்
வ. ச. வை. குருஸ்வாமி சாஸ்திரி

# கணேசப்ரியை எனப்படும், தமிழுரையில் எடுத்தாண்ட நூல்கள்

1 கணேசாதர்வசீர்ஷோபநிஷத்
2 கணேசதாபினீ உபநிஷத்
3 ஹேரம்போபநிஷத்
4 வல்லபோபநிஷத்
5 தசோபநிஷத்
6 ஐதரேய பிராஹ்மணம்
7 மந்திரமஹார்ணவம்
8 கணேசபுராணம்
9 சிவபுராணம்
10 பிரும்மாண்டபுராணம்
11 ஸ்காந்த புராணம்
12 ஸ்ரீமத் பாகவதம்
13 மார்க்கண்டேய புராணம்
14 மத்ஸ்ய புராணம்
15 தேவீ பாகவதம்
16 முத்கல புராணம்
17 மஹாபாரதம்
18 திரிபுராரஹஸ்யம்
19 வரிவஸ்யா ரஹஸ்யம்
20 பக்தி மீமாம்ஸாதந்தரம்
21 பாதஞ்ஜல யோகஸூத்ரம்
22 திருமந்திரம்
23 தேவாரம்
24 திருவாசகம்
25 பன்னிரு திருமுறை.

<u>பொருளடக்கம்</u>

ஸ்ரீ ராமஜயம்

# शुद्धिपत्रम् (பிழைத்திருத்தம்)

| पृष्ठम् பக்கம் | पङ्क्तिः வரி | अशुद्धम् பிழை | शुद्धम् திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 10 | देवभाषामय गद्यरूप | देवभाषामय पद्यरूप |
| 2 | 21 | व्याख्या गणश...... | व्याख्यया श्रीगणेश... |
| 4 | 28 | இழுந்தவனுகிருன் | இழந்தவனுகின்ருன் |
| 7 | 8 | உறைத்திருக்கிஞர் | உரைத்திருக்கிருர் |
| 8 | 25 | திருபுரராஸுர | திருபுராஸுர |
| 9 | 13 | வியாஸர் வினவுகிஞர் | வினவினுர் |
| 10 | 5 | मनसा विनिर्धाय | मनसा स विनिर्धाय |
| 10 | 15 | கூலப்ரதம் | பலப்ரதம் |
| 12 | 9 | நமஸ்யததே | நாமாஸ்ய ததே |
| 14 | 21 | சூட்டினுள் | சூட்டினுன் |
| 16 | 13 | नाम क्रोऽथ | नाम शक्रोऽथ |
| 16 | 21 | ஸமஸத்தார் | யுமளித்தார் |
| 20 | 18 | வரேண்யளின் | வரேண்யனின் |
| 22 | 6 | भुवनेशानः-புவனேசரன்: | भुवनपतिः புவனபதி: |
| 22 | 7 | புவனேசானரின் | பூபதியின் |
| 24 | 19 | ''பூஷா'' என்றும் | பூஷா என்னும் |
| 28 | 16 | யாஊனயினுயிடய | யாஊனயினுடைய |
| 30 | 4 | देवनात्मा தேவதாத்மா | देवत्राता-தேவத்ராதா |
| 35 | 18 | समानि | सामानि |
| 36 | 3 | पृथ्वीकटिः | पृथ्वीकटिः |
| 36 | 10 | முழங்கால்களாக | துடைகளாக |
| 50 | 3 | चतकलिकाभृत् | चूतकलिकाभृत् |

| | | | |
|---|---|---|---|
| 50 | 8 | पुष्क...यस्नर्णधिटीपूर्णना–<br>भिवर्षक: | पुष्करस्थस्वर्णघटीपूर्ण–<br>रत्नाभिवर्षक: |
| 52 | 19 | विघ्न...स्पल्लवोपध्नः | निघ्नसंपल्लवो घ्नः |
| 53 | 10 | ज्वालिनीपालितैकहक्: | ज्वालिनीपालनैकदृक्: |
| | | ஜ்வாலிநீபாலிதைகத்ருக் | ஜ்வாலிநீபாலனைகத்ருக் |
| 54 | 16 | எங்டு | எட்டு |
| 71 | 16 | வளரும்யடி | வளரும்படி |
| 73 | 4 | औद्धत्यधुग: | औद्धत्यधुर्यः |
| 75 | 14 | खङ्गप्रिया: | खड्गप्रिय: |
| 77 | 22 | गुह्यागमावरूपित: | गुह्यागमनिरूपित: |
| 80 | 21 | அடைவதற்குகென்று | அடைவதற்கென்று |
| 89 | 3 | காதா | கர்த்தா |
| 90 | 4 | பிராகசப்படுத் | பிரகாசப்படுத் |
| 93 | 13 | எறிக்கப்ப டவுடன் | எரிக்கப்பட்டவுடன் |
| 104 | 21 | உலத்ததை | உலகத்தை |
| 105 | 16 | हतप्रिग: | हुतप्रियः |
| 106 | 10 | க்ஷத்ராதிப: | க்ஷேத்ராதிப: |
| 122 | 29 | ஸகத்வதம் | ஸாத்வதம் |
| 125 | 1 | ப்ரம்ஹம் | பிரமம் |
| 126 | 16 | एकाक्षराधारा : | एकाक्षराधारः |
| 136 | 15 | ஆகற்றி | அகற்றி |
| 136 | 16 | நள்மை | நன்மை |
| 136 | 20 | ஞாபிளை | நாபியை |
| 143 | 21 | इत्यबृद्रव्य | इत्यष्टद्रव्य |
| 151 | 20 | ம்வதமின்றி | வேதமின்றி |
| 168 | 17 | बल: | बलं |
| 194 | 20 | ஸவத்ந்தப்ருத் | ஸ்வதந்தப்ருத் |
| 200 | 22 | जिह्वासिंहासन | जिह्वासिंहासन |

| | | | |
|---|---|---|---|
| 200 | 28 | நூபர: | நூபுர: |
| 201 | 10 | स्थाण: | स्थाणुः |
| 205 | 14 | लग्न हारा | लग्नं होग |
| 207 | 27 | பேக: த | பேதக: |
| 214 | 21 | शिरोरोग | शिरोरोगं |
| 216 | 2 | यगसिद्धि | योगसिद्धि |
| 216 | 16 | ஸித்தயந்தி | ஸித்யந்தி |
| 218 | 4 | கணேசர்சன | கணேசார்சன |
| 219 | 6 | रत्नकविशत्या | रत्नैकविंशत्या |
| 239 | 13 | ब्रह्माण्डावलि मेखलाय | ब्रह्माण्डावलिमेखलाय |
| 247 | 11 | हूं | हुं |
| 247 | 17 | वषटामः | वषट् |
| 248 | 10 | द्वैवनिगाय | द्वयानिगाय |
| 248 | 13 | त्रतात्रिवर्ग...... | त्रेतात्रिवर्ग...... |



HIS HOLINESS
SRI KANCHI KAMAKOTI PEETADHIPATHI
JAGADGURU SRI SANKARACHARYA SWAMI MUTT
KANCHEEPURAM

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकर भगवत्पादप्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटि पीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादादेशानुसारेण
श्रीमज्जयेन्द्रसरस्वतीश्रीपादैः क्रियते नारायणस्मृतिः ।

நாம் எந்த சுபகாரியத்தை செய்வதாயிருந்தாலும் ஆரம்பத்தில் விநாயகப் பெருமானை வழிபடுவது தொன்றுதொட்டு வரும் வழக்கமாகும். இப்பெருமான் நம் காரியங்களுக்கு ஏற்படும் விக்னங்களை போக்கடித்து இக்காரியங்களை பூர்த்தி செய்விக்கக் கூடிய சக்தியுடையவர்.

இத்தகைய மஹிமை வாய்ந்த விநாயகரின் மீது கணேசபுராணத்தில் உபாஸனு கண்டத்தில் பரமேச்வரருக்கு மஹாகணபதியினுல் உபதேசிக்கப்பட்டதாக வர்ணிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமானது துஷ்டஸம்ஹாரம், விராட் ஸ்வரூபமாயிருத்தல், மற்ற தேவர்களால் ஸேவிக்கப்படுதல், பக்தர்களுக்கு வேண்டியவற்றை அளிக்கும் சக்தி முதலிய மஹாகணபதியின் மேன்மைகளை விளக்குகிறது.

இந்த ஸ்தோத்ரத்துக்கு பிரஸித்த ஸ்ரீ வித்யோபாஸகராய் விளங்கி லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் முதலிய க்ரந்தங்களை இயற்றியுள்ள ஸ்ரீ பாஸ்கரராய தீக்ஷிதர் ஸம்ஸ்கிருதத்தில் ஸ்லோகருபமாய் கத்யோ-தம் என்னும் பெயருடன் எழுதியுள்ள உரையானது, வேதங்கள், ஸ்ம்ருதிகள் இதிஹாஸ புராணங்கள், மந்த்ரதந்த்ரங்கள் இவைகளி-லிருந்து மேற்கோள்களுடன் நாமாக்களின் பொருள்களை அழகாய் விளக்குகிறது.

இப்போது தமிழறிந்தவர்கள் இந்தஸ்தோத்ரத்தின் பொருள்களை அறிந்துகொள்ள வேண்டுமென்னும் உத்தம நோககத்துடன்

திருவனந்தபுரம் வித்வான் வரகூர் ஸ்ரீ குருஸ்வாமி சாஸ்திரிகளால் தமிழில் எழுதப்பட்டிருக்கும் கணேசப்ரியை என்றும் உரையானது ஸ்ரீ பாஸ்கரராய வ்யாக்யானத்தை அனுஸரித்து இந்த ஸ்தோத்ரத்தின் ஒவ்வொரு நாமாவின் பொருளையும் மேற்கோள்கள் உள்பட எளிய நடையில் நன்ருய் விளக்குகிறது.

தமிழறிந்த ஆஸ்திகர்கள், முக்யமாக கணபதி உபாஸகர்கள் இவ்வுயர்ந்த நூலின் மூலம் பொருளுணர்ந்து இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தை பாராயணம் செய்துகொண்டு இப்பெருமானின் அருளால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

ஸ்ரீ குருஸ்வாமி சாஸ்திரிகளும் மேன்மேலும் இத்தகைய தெய்வீக நூல்களை இயற்றிக்கொண்டு ஐஹிகாமுஷ்மிக பலன்களை அடைவராக.

யாத்ராஸ்தானம் வண்ணாரப்பேட்டை }
ராக்ஷஸபௌஷசுத்த த்வாதசி }

நாராயணஸ்ம்ருதி:

முருகா

# முன்னுரை

வேதங்களும் காணாத பாதங்களையுடையவர் விநாயகப் பெருமான். மந்திரங்களுக்கெல்லாம் மூலமாகிய ஓங்காரவடிவினர்.

விநாயகர் என்ற சொல் சிறந்த நாயகர் என்று பொருள்படும். அன்றி மலம் இல்லாதவன் விமலன் என்னுமாப்போல் தனக்குமேல் நாயகன் இல்லாதவர் விநாயகர்.

கொம்புள்ள பகுதி ஆண் உருவையும், கொம்பு இல்லாத பகுதி பெண் உருவையும், இடைக்கு கீழ் பூத உருவையும், கழுத்துக்கு கீழ் உள்ள பகுதி தேவ உருவையும், தலை விலங்கு உருவையும் யானைத்தலை அஃறிணையையும், திருமேனி உயர்திணையையும் குறிக்கும். ஆதலால் ஆணாய், பெண்ணாய், பூதமாய், தேவனாய் விலங்காய், அஃறிணையாய், உயர்திணையாய், இவ்வாறு சமஷ்டியை தெரிவிக்கும் மூர்த்தி விநாயகமூர்த்தி.

நம்முடைய துன்பங்களுக்குக் காரணம் வினைதான். மற்ற தெய்வங்களும் வினை தீர்க்கும். ஆனால் விநாயகர் வினைகளை வேருடன் களைவார்.

"விநாயகனே வெவ்வினையின்
வேரறுக்கவல்லான்"

அடியார்களின் இடர்களைந்து இன்பத்தை வாரி வழங்கும் வள்ளல் விநாயகப் பெருமான்.

"தனதடி வழிபடுமவர் இடர்கடி கணபதி வர அருளினன்"

என்று திருஞான சம்பந்தர் அருளிச் செய்கின்றார்.

கும்பம் ஏந்திய திருக்கரம் ஆக்கல் என்ற தொழிலையும், மோதகம் ஏந்திய திருக்கரம் காத்தல் என்ற தொழிலையும், அங்குசம் ஏந்திய திருக்கரம் அழித்தல் தொழிலையும், பாசம் ஏந்திய திருக்கரம் மறைத்தல்

தொழிலையும், ஞானதந்தம் ஏந்திய திருக்கரம் அருளல் தொழிலையும் இவ்வாறு சிருஷ்டி, திதி, சம்மாரம் திரோபாவம், அனுக்கிரகம் என்ற ஐம்பெருந்தொழில்களையும் விநாயகருடைய ஐந்து திருக் கரங்கள் செய்கின்றன.

அண்டகோடிகள் அனைத்தும் அவருடைய வயிற்றில் அடங்கி யிருக்கின்றன என்று தெரிவிப்பது அவருடைய பேழை வயிறு.

காற்றிருந்தால் தோணி வேகமாகச் செல்லும். பிறவிப் பெருங்கட லில் விழ்ந்து பல்லூழி காலமாகத் தத்தளிக்கும் ஆன்மாக்கள், கண பதியின் பாதமாகிய தோணியைப் பற்றிக் கொண்டால், முக்திக்கரை விரைந்து சேர காற்று விசுகின்றன அவருடைய தழைந்த செவிகள் அதனால் அவர் "சூர்ப்பகர்ணர்" எனப்பேர் பெற்றனர்.

"மாற்றரிய பிறவியெனும் மறிகடலில் வீழ்ந்தோர்கள்
போற்றரிய திருவடியாம் புணை பற்றித் தொழுவாரேல்
சாற்றரிய முக்தியெனுந் தடங்கரையில் உய்ப்பதற்குக்
காற்றெறியும் தழைசெவியக் கணபதியைக் கைத்தொழுவாம்"

விநாயகரை வழிபட்டால் எல்லா மூர்த்திகளையும் வழிபட்ட பயன் எய்தும். பரம கருணையின் கடல் கணேசமூர்த்தி. காட்சிக்கு எளியர். மகாவரதர்.

இறைவனை ஆயிரம் நாமங்களால் வழிபடுவது ஆன்றோர் மரபு.

"பேராயிரம் பரவிவானோர் ஏத்தும் பெம்மானை."
என்கின்றார் அப்பரடிகள்.

ஆதலால் கருணைத் தெய்வமாகிய கணபதியின் ஸஹஸ்ரநாமங்க ளையும், பொருள் தெரிந்து அடியார்கள் வழிபடவேண்டும் என்று கருதி, திருவனந்தபுரம் பிரம்மஸ்ரீ V. S. V. குருஸ்வாமி சாஸ்திரிகள் விநாயகருடைய ஸஹஸ்ரநாமங்களுக்கு உரை எழுதி உபகரித்தார். இவர் சிறந்த வேத வித்வன்னர். காஞ்சி காமகோடி முனீந்திரருடைய அருளுக்குப் பாத்திரமாகிப் பல விருதுகள் பெற்ற நற்றவ சீலர்.

ஸ்ரீ அழகிய கன்னி விநாயகர் கோவில் டிரஸ்ட் சார்பாக,

இதனை அழகாக அச்சிட்டு என் ஆப்தநண்பர் உயர்திரு A. சுப்பிரமணிய பிள்ளை ஞானதானமாக வழங்குகின்றார். தருமகுண சீலராகிய பிள்ளையவர்களின் உள்ளம் உயர்ந்தது.

கணபதி உபாசகர்கட்கு இந்த நூல் கற்பகம் போன்றது.

வாழி சந்தப்பா வளர்க வணிகவியல்
வாழி பணமச்சள் மாண்புடனே—ஏழிசைபோல்
காழிவளர் கந்தன் கருணையினால் காசினியில்
ஊழி பல வாழி உவந்து.

கந்தப்பா என்கின்ற திரு A. சுப்பிரமணியபிள்ளையவர்கள் இத்தகைய வித்தகஅறம் புரிந்து இனிது வாழ்க.

அன்பர்கள் இதனை ஓதி உய்வு பெறுக.

நேரிசை வெண்பா

ஆரா வமுதனைய ஆனைமுகத் தண்ணலின்
பேரா யிரமோதும் பெற்றியினர்—நேராகப்
பீடு பெறுவர் பிறவாமை பெற்றிடுவர்
நீடுலகில் வாழ்வர் நிலைத்து

அன்பன்
கிருபானந்தவாரி

பம்பாய்
19-1-1976

C. SREENIVASAN PILLAI M. A.
Arattukadavumadom
MAVELIKKARA.

## FOREWARD

### PRAYER

मनस्ते पादाब्जे निवसतु वचः स्तोत्र फणितौ
करौ चाभ्यर्चायां श्रुतिरपि कथाकर्णन विधौ
तव ध्याने बुद्धिर्नयनयुगलं मूर्तिविभवे
परग्रन्थान् कैर्वा परमशिव जाने परमतः ।। (शिवानन्दलहरी)

"Oh Lord may mind always rest at Thy Lotus feet
may my mouth always sing and praise Thy glories
may my hands be engaged in offering flowers at Thy feet
may my ears always hear only stories of Thy Divine leela
may my intellect ever meditate on Thee and my
eyes be fixed on Thy glorious and surpassingly
beautiful form., so that no other instruments are
left with me to distract my attention away from Thee"

(BLISS OF INTOXICATION IN GOD CONSCIOUSNESS)
(SivanandaLahri)

To write a foreword for such an important publication like this is not an easy task. In spite of my incompetency, I venture to write a few lines in response to the desire of my loving nephew Sri A. Subramoniam who is a true devotee of Alagiakannivinayakar and whose request I am powerless to deny. Praying to Lord Ganesha to give me the strength to pen a few lines I shall make a humble attempt to introduce this precious volume of Mahaganpathi Sahasranama" to the devotees of the Lord.

This able and well studied commentary on 'Mahaganapathi Sahasranama by no less a person than Prof. V. S. V Guruswami Sastrigal whose renowned scholarship and devotion to the cause are already well known tc the reading public. He deserves the highest gratitude and admiration of all devotees of Lord Ganesha. The author and commentator having done full justice to the thousand names of the Lord, for my humble self, I shall confine myself to one name alone, which is inclusive of all the other names and try to place before the readers the scriptural texts that proclaim the glory of that "Ekakshara".

The Moolamantra of Mahaganapathi is 'Omkara' or Pranava. According to the yogasastras., he is situated at the mooladhara, the basis of the entire universe. "ओमित्येकाक्षर ब्रह्म" says the Gita. ओमित्येतदुद्गाथमुपासीत says the Chandogya Upanishad.

He is the first projeny of the Union of Siva and Sakti and hence called முத்தபிள்ளை (the eldest child). He represents the Static energy and is symbolised as an elephant sitting on a mouse, which shows it is (stationary) unmoving and therefore static. The second child born of the union is the dynamic force Subramoniya whose vehicle is the flying peacock. Both are born out of Harmony and peace (Sivam). 'From Harmony, heavenly harmony this universal frame began" sang the English poet. Having the same father and mother both are the same. According to the puranas the dynamic Subramaniya also instructs Siva with the same mantra "Omkara" "ओंपूर्णमदः। पूर्णमिदम्" says the Upanishadic mantram. The Full and the Residue are both perfect and the same. Hence it is said that Ekakshara is both 'Para' and "Apara Brahman" combined.

The Vedas and the Upanishads proclaim the glory of this one mantra above all other — In the Katha Upanishad Yama says to Nachiketas

सर्वे वेदा यत्पदमामनन्ति तपांसि सर्वाणि च यद्वदन्ति
यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं संग्रहेण ब्रवीमि 'ओमित्येतत्।

The goal (the state or word) which all the Vedas proclaim which all penance declare and desiring which all lead the life of chastity, that goal, that state or that word, I tell thee in brief, It is"OM" This syllable is verily Brahman,. This support is the supreme knowing, this support one is glorifjed in the world of Brahman.

पिताहमस्य जगतो माता धाता पितामहः
वेद्यं पवित्रमोङ्कारः ऋक्सामयजुरेवच — says the Gita

'Iam the father of this universe and its mother, the supporter and the grandfather, the goal of all knowledge, the purest, the syllable "OM" Iam also the vedas in its entirety.

The श्वेताश्वतरोपनिषत् says that by meditating on the Pranava the Atman is perceived manifestly in the body because it is latent there, always in the body. Here spiritual practice is identified with meditation on 'Pranava" or the sound symbol 'Aum'. Making the body the lower piece of wood and pranava the upper piece of wood and practising churning in the form of meditation one should realise God as one would find out something hidden. Else-where the teacher and the disciple are compared to the two pieces of wood. According to Patanjali's yoga Philosophy 'Iswara' is a special purusha, untouched by misery, actions, results, and desires, His manifesting word is 'OM'. The thought and the word cannot be separated. This word

must be repeated with meditation upon its meaning. Hence comes the knowledge of the Atman and the destructions of all obstacles to that spiritual knowledge.

Therefore, it is said that 'Omkara' or Vighneswara is the Lord and remover of all obstacles to the spiritual path. Hence the aspirant has to pay homage to the Lord of obstacles at the very start. Since all the thousands of mantras and all Vedic mantras merge jn Pranava, He the Lord of Pranava is the Supreme Brahman, the Absolute Existence, Knowledge and Bliss, Says the Mundaka Upanishad:

प्रणवो धनुःशरोह्यात्मा ब्रह्म तल्लक्ष्यमुच्यते
अप्रमत्तेन वेद्धव्यम् शरवत्तन्मयो भवेत्

With Pranava as the bow and the jivatma as the arrow. the aspirant should aim correctly at the target of Brahman' This makes the Jivatman one with Brahman like the arrow piercing the goal and becoming one with it.

The whole of Mandukya Upanishad is a detailed commentary on this mantra. The first mantra says

"ओमित्येतदक्षरमिदं सर्वं तस्योपव्याख्यानम् ।
भूतं भवद् भविष्य दिति सर्वमोङ्कार एव ।
यच्चान्यत् त्रिकालातीतं तदप्योङ्कार एव"

The upanishad concludes by saying—

अमात्रश्चतुर्थो व्यवहार्यः प्रपञ्चोपशमः शिवोऽद्वैतः
एवमोङ्कार आत्मैव संविशत्यात्मनात्मानं य एवं वेद

The immeasurable Omkara' is the fouth Turiya state beyond the relative universe. It is non-dual Bliss, this Omkara which is verily the Atman itself. He who worships

this Omkara in the prescribed manner merges in the ultimate Reality or 'Sivam'.

Commenting on this Upanishad, the Goudapada karika speaks in much more clear and emphatic language

प्रणवं हीश्वरं विद्यात् सर्वस्य हृदि संस्थितम् ।
सवव्यापिनमोंकारं मत्वा धीरो न शोचति ॥
आमात्रोनन्तमात्रश्च द्वैतस्योपशमः शिवः
ओंकारो विदितो येन समुनिर्नेतरो जनः ॥

"Know that this 'Pranava' is the Lord Iswara Himself situated in the heart of all beings. He is all pervasive like Akasa. Knowing and meditating upon Him thus as the universal Atman, the Intelligent goes beyond all sorrow."

"He who realises 'Omkara' as the Immeasurable infinite and Indivisible one, as the final end of all duality as Siva (the Abode of Eternal Bliss), he alone is the Muni, one who meditates on the ultimate Reality, the Eternally Silent one."

In the Chandogya upanishad we read: "Within the city of Brahman there is the heart and with in the heart there is a little house. This house has the shape of a Lotus and with in it dwells that which is to be sought-after, inquired about and realised. Even so large a universe outside, is the universe with in the Lotus of the heart. Though old age comes to the body, the Lotus of the heart does not grow old. It does not die with the death of the body.

As the Mundaka Upanishad says--"Within the Lotus of the heart, He dwells, where the nerves meet like spokes of a wheel. Meditate upon Him as 'OM' and you may easily cross the ocean of darkness,"

In the effulgent Lotus of the heart dwells Brahman passionless and indivisible. He is pure. He is the "Light of all Lights"

"ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते" says the Gita

Instances can be multiplied in plenty from all the Upanishads since all the upanishads speak only about the glory of this one mantra of Ganesha.

I hope my readers would permit me now to quote a few instances from the words of our Tamil Saints–Says Manikavachagar

உய்ய என்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே.

When I hear the sound of 'Aum' inside me it elevates me to higher spiritual plane. Thou art that "Omkara" that Truth, that pure form of Siva riding on the bull, thou whom all the Vedas Call as the Father, deepest, farthest, and subtlest of all.

says Pattinathar

ஓங்காரமாய் நின்ற வத்துவிலேயொரு வித்துவந்து
பாங்காய் முளைத்த பயனற்ந்தாற்பதிஞலுலகும்
நீங்காமனீங்கிநிறையா நிறைந்து நிறையுருவா
யாங்காரமானவர்க் கெட்டாக்கனிவந்தமர்ந்திடுமே.

From the Lord who is described as 'Omkara' or Pranava mantra is born the Panchakshara, that fills the universe; Having realised the Truth of this Pranava mantra, by long practice one gets rid of his limited ego and reaps the fruit this self-effacement which is God realisation. Here Omkara is described as the form of the Lord filling the entire universe of 14 worlds

In another place He says,

ஓசையொடுங்குமிடம்
ஓங்காரத்துள்ளொளிகாண்
பேசாதிருக்கும் பிரமமிது வென்றுண்டி.

Where the Anahata sound ceases to be heard, it is transformed into the pashyanti state of sound. It is the state of Inner vision. The inner voice itself gets transformed in its own subtler form of Brilliance or self-Effulgence which is self-knowledge. Beyond that is the Eternal Silence', the paranada, the seat of Brahman, which cannot be conceived by any thought form. Let us now hear what Saint Thirumoolar Mahamuni has to say about Nada Brahman. If you search throughout the entire 'Thirumanthiram' you will find that it is a full and detailed commentary of the "Grand name of God", the Supreme ParamaSiva. The entire treatise deals with the different facets of the Lord expressed through Panchakshara preceded by the Ekakshara Pranava.

உள்ளத்துள் ளோமென ஈசன் ஒருவனை
உள்ளத்துள்ளேயங்கியா வொருவனை
உள்ளத்துள்ளே ந்திய வொருவனை
உள்ளத்துளேயுடல் ஆகாயமாகுமே. 2759

By God's grace if you repeat the mantra 'Om' constantly and continuously the Lord will present Himself before you, because he is part and parcel, inseparable from your self. He will become the spiritual guide situated in your heart of hearts and you will become disembodied like Akasa, the Lord Chidambaranatha being the Omnipresent situated in your own disembodied spiritual state.

ஓங்காரத்துள்ளே யுதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத்துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரத்தீத்துயிர் மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவரூபமே. 2628

According to Saiva–siddhanta, the Thirty Sixth Tatwa is Nada Brahman, the body of God. The sound that is heard by the yogis origanates from the Nada Brahman Himself. From that Sabda Brahman, the entire universe has come into being. Beyond even the sound is the fourth Turiya state where all beings become one. Omkara is both jivatman and paramatman combined

Let us now hear from 'Avvaiyar' the great woman devotee of Ganesha—In "Vinayakar Akaval" which is a masterly treatise on yoga coupled with devotion She says"

ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால்
ஐம்புலக்கதவையடைப்பதுங்காட்டி."

"By chanting the one mantra of Aum, God has shown me the way to control and close the nine doors of the physical body."

The entire treatise entitled 'Vinayakar Akaval' requires to be studied and repeated by every devotee of Ganesha and its meaning contemplated and intensely meditated upon. I shall now refer to the sayings of two famous Kerala saints, who have referred to the same subject. In His opening stanza of, Ha,inama K-ertanan Ezhuthachan the father of malayalam language sings.

ഓങ്കാരമായ പൊരുളം മൂന്നായ് പിരിഞ്ഞുടനെ
ആങ്കാരമായതിനു താൻതന്നെ സാക്ഷിയത്ര
ബോധം വരുത്തുവതിനാളായിനിന്ന
പരമാചാര്യരൂപ ഹരി നാരായണായ നമഃ

The ultimate Reality that is Omkara divided itself into three Sathwa, Rajas, and Tamas. He created the ego (Ahamkara) and He himsell remains the witness and the Eternal teacher of teachers for arousing full consciousr.ess

in sentient and insentient beings. I worship at the feet of this Lord Harinarayana. The three fold seperation is also interpreted as the three letters A. U. and M. The great Narayana guru says, as follows in the concluding stanza of his "Atmopadeshasatakam"

അതുമിതുമല്ല, സദർത്ഥമല്ലഹം സ–
ച്ചിദമൃത,മെന്നു തെളിഞ്ഞു ധീരനായി
സദസദിതി,പ്രതിപത്തിയററു സത്തോ-
മിതി, മൃദുവായ് മൃദുവായമർന്നിടേണം.

Let us think:

'I am not this or that or its meaning, neither existence nor non-existence am I, Let me slowly merge in this, the Eternal 'OM' having realised it as the bliss of Satchidananda Again He says.

ഓങ്കാരംകൊണ്ടെഴപ്പിപ്പെരുവെളിനടുവെ
പള്ളികൊണ്ടുള്ളിലുണ്ടാം
ഓങ്കാരംകേട്ടുണർന്നീടുക ഝടിതിമണി-
ത്താമരത്തേൻ കുടിപ്പാൻ
പാങ്കാരും പററുവാനില്ലിരവുപകലിതു
നീച്ചയും തേനുറുള്ളം
ഝങ്കാരംപോലുമില്ലിങ്ങിതിനെയിനിമയോ
ടാസ്വദിച്ചീടുവാൻ വാ

In this stanza the poet rises to the highest yogic experience possible for man. His consciousness is raised from the hearing of the Anahata sound to the state of Nadateetam(the state of total silence) where the ego is dissolved and there is no body left to hear and enjoy the nectar.

A taste for chanting God's name is the first manifestaion of devotion. Observance of rituals, chanting

the Lord's name, reading the scriptures, and worshipping his images are not mere kindergarten lessons. They are really very efficacious discplines in the path of spirituality.

In this connection let me pen a few lines on the impotance of Ganapathi Homa. Repetiton of sacred words or mantrams are done along with vedic rites "yagjnas". The sacrifice in the Vedas symbolises cosmic labour, the march of the universe, towards its goal of awakening the unconscious, to consciousness and finally to super-consciousness सह यज्ञा: प्रजा: सृष्ट्वा पुरोवाच प्रजापति: says the Gita. 'Yagjna' is born along with Prajapati, By the act of sacrifice man learns to awaken the Divine in him and leaves behind the mortal and gross elements. Purification has to start from Prithivi Tattwa, upwards. Hence 'gandha' or sugandha which is the quality of the earth is sought to be purified by the inhalation of the pure 'homadhuma the pure smoke arising from the sacrificial fire. The human brain requires plenty of oxygen for its proper working. Inhalation of sattwic materials in the form of lifegiving gases awakens the secret chambers of the brain. If certain kinds of poisonous gases like chloroform or ether can make one unconscious it is but a scientific truth to admit that certain other kinds of pure gases arising from homa can make one super-conscious, The materials like 'samidh' or dried sticks of പ്ലാശമരം called ചമത in Malayalam when burnt along with cocoanut chips and ghee produce a refreshing effect and repeated inhalation of the pure smoke arising therefrom, coupled with the vibrations produced by mantra japa awakens the sleeping kundalini and transforms the individual into the likeness of his Ishta-Devata. Agni is the energy of consciousness. It is said in a parable in the vedas that in fear and wishing

to escape, Agni hid himself in the region of unconsiciouness. He is then persuaded by Brahma himself to accept the job of the charioteer or the path Finder for the devotee Hence the last verse of Isavasva Upanishad says--Oh Agni lead me through the right path, you are the knower of all my Karmas and jnanas. Lead me through the northern path of no return. I have already become, weary of births and deaths going and coming through the Dakshina marga. Purify me of all my sins bodily and mental. I can only pray to you again and again. This is a prayer to rid oneself from embodiment. Only in the disembodied spiritual state, can one realise the Truth of Existence.

The Purushasukta portrays creation itself as the result of sacrifice (Yagjna). Gita declares that together with the sacrifice did the Lord of Beings create mankind declaring, "By this shall ye increase, may this be to you the giver of all your desires The most telling instance of sacrifice is its personification in the Varaha avatara. This white boar retrieved the earth element and purified it by his touch. Nammalwar says that this boar form, Yagjna varaha is the embodiment of wisdom. As Brahma sat lost in thought, as the land mass of earth being lost in the waters, there sprang out from his nostril, a tiny boar which soon grew like a mountain. This was the supreme Lord; with the four Vedas as his feet, the 21 sacrifical posts (yagjna stupas) as his ribs, fire as his tongue, the sacred grass (ദർ) as the hairs on his body, his head as the Pranava and so forth, the embodiment of yagjna. This white boar redeemed and purified the earth. Hence the present age is called ശ്വേതവരാഹകല്പം (the era of the white boar)

Hence for the devotees of Lord Ganesha, homa combined with repetition of Ganapathi sahasranama

is an indispensable necessity for tne purification of his external body composed of the five elements and for internal purification of the subtle body, the antah–karana.

Among the various 'upasanas' or methods of worship for the spiritual aspirant mentioned in the vedas the worship of Ganesha is really 'Nadopasana' or .Pranavopasana. The sadhaka, by his regulated practice of mantra-japa according to the instructions of his Guru will be able to arouse the Kundalini power, supposed to be sleeping at the mooladhara and send this conscious power through the Sushumna nadi, piercing the various centres mentioned in the yoga sastras and attain union with the Lord situated at the top of the Brain centre which is described as the Sahasrara, the thousand petalled Lotus. For detailed reference and study of the mantra sastra and the yoga sastra, the readers are requested to study 'The garland of letters' and "The Serpent power", two well written treatises on Tantra marga by Sir John woodroffe. A very close and intimate knowledge of 'Raja yoga' and the commentary on Patanjali yoga sutras by Swami Vivekanada is an indispensable necessity for every devotee of Ganesha.

ஒளியையொளிச் செய்து ஓமென்றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்க்திட. வாங்கி
வெளியை வெளி செய்து மேலெழவைத்து
தெளியத்தெளியுஞ்சிவ'பதம் தானே

The fire at the mooladhara should be awakened, by meditation on "Aum", the moolamantra of Ganesha and then by controlling the breath and make the Kundalini rise through the spinal column which is Sakti, in the course of her travel to reach the feet of her Lord Siva, at the cool heights of the Himalayan Kingdom, will pass through the

six centres of consciousness or planes of existence and beccme united with her Lord to complete the circle after creation.

In geographical terms the para-sakti or Devi Kanya Kumari is performing Tapas at Cape Comorin to join her Lord who resides in the sunlit snowy mountain heights of Kailas which is an ocean of Brilliance. Physically the Sakti said to be only partially active, (sleeping state) at the mooladhara, encugh to keep the psycho-physical organisam in living rhythm. The Sadhaka should by his upasana and intense devotion and meditation, make her rise up through the spiral column to reach and unite with her Lord Siva the formless Brahman at the Sahasrara, the seat of pure consciousness. The symbolic light, which is an ocean of Brillianec is the representation of the height of Blissful union.

This thouend petalled Lotus is beautifully described by saint Thiumoolar. He has expressed in most beautiful poetic imagery what is really in expressible in words. Says he.

பாரில்லை நீரில்லை பங்கயம் ஒன்றுண்டு
தாரில்லை வேரில்லை தாமரைபூக்தது
ஊரில்லை காணும் ஒளியது ஒன்றுண்டு
கீழில்லை மேலில்லை கேள்வியில் பூவே 824

Here is a travel of the aspirant from the form to the formless Brahman, beyond, all time and space. Here Jivatman unrestricted by his upadhis becomes totally purified and free of all attachment to his individual being the ego, becomes one with the Universal centre, the Soul of the universe or Paramatman.

May the thousand names of the Lord and its commentary published, lead dovotees to the thousand petalled lotus' the seat of the Lord; this is my humble prayer.

I lay no claim to anything of what I have written above. I have merely quoted the scriptures and words of the saints. I am merely the servant of the servants of the devotees of the Lord·

May He bless all.

அடியார்க்கும் அடியேன்
uncle Sreenivasan.

Mavelikkara
15-2-1976

JUSTICE G. VISWANATHA IYER.
KERALA HIGH COURT

Ernakulam,
12th January, 1976.

Lord Ganesa is reckoned foremost among the Hindu Pantheon. The Lord is praised as कविं कवीनां ज्येष्ठराजं ब्रह्माणां ब्रह्मणस्पते in the Vedas. We all pray to him that all our efforts in daily life and worship should proceed to a successful end without any hindrance. We perform Vigneswara Puja first before proceeding to perform religious ceremonies. A devout Hindu offers Puja to Maha Ganapati before he starts on any mission whether for business or otherwise. When a child is initiated into the art of learning the first thing that he is taught to learn to pray to Lord Ganesa that he may protect him from any hindrance and lead him properly in the pursuit of his studies. It is stated in the Maha Bharata that Veda Vyasa prayed to Maha Ganapati to write down the epic that Veda Vyasa would narrate and that was done. Such is the-eminent position given to Lord Maha Ganapati in our prayers that it is no wonder that Veda Vyasa himself wanted to know the qualities and attributes of Maha Ganapati and Lord Brahma gladly agreed to recite the Maha Ganapati Sahasranama Sthotram to him as narrated by Maha Ganapati himself to Lord Paramasiva.

It is not easy to write a commentary on such an important Sthotra and fortunately Bhaskara Raya DEEKSHITA'S commentary called खद्योतम् on this is o masterpiece of learning and religious wisdom. But it is in Sanskrit as the sthotras themselves are. Nowadays some only can read Sanskrit and of them a few only can under-

stand the meaning of Sanskrit expressions. A recitation of the Sthotras will be done by those who have implicit faith in them even if they do not know their meaning. Even they will appreciate the namavali better, and many others may begin to recite the Sthotras, if they know their meaning and in that way there is a greater hope of sustaining the manthras now and handing them down to the next generation. The present generation does not blindly believe the religious dogmas. One has to reason out to instil belief in them. The questioning mind of the younger generation can be answered only by acharya explaining the meaning and purpose of the sthotras. This is attempted to be done by Sahitya Visarada Sahityaa Vedanta Siromani, Professor. V S.V. Guruswamy Sastrigal in this book in Tamil. His deep knowledge of Sanskrit and Tamil is put to a sacred use in this book. He has expressed in simple language the meaning of each namavali Each namavali. is based on one quality, attribute or aspect of Maha Ganapati and the readers will be very much enlightened on reading it and will appreciate the book very much. The learned author has tried to point out the mistakes in other publications on the subject and tried to correct them. This adds to the usefulness of the present book.

One word about the publishers. Sree Azhakiya kanni Vinayakar Koil Trust is doing yeoman service to the public by undertaking the printing and publishing of religious books. The publication of this book by them deserves unstinted praise from all devout Hindus. The usefulness of this book will be a good encouragement to them to continue their good service to Hindu religion.

(Sd)

G. Viswanatha Iyer

# உரையாசிரியர் வரலாறு

1 ஊரும் முன்னோரும்:—

'விஞ்சு புகழ் தஞ்சை' மாவட்டத்தில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் கோவில் கொண்டிருக்கும் 'பூபதிராஜபுரம்' என்னும் ஊர் மிகவும் புனிதம் வாய்ந்த தலமாகும். நாராயண தீர்த்தர் என்னும் தவசிரேஷ்டர் இத்தலத்தில் தெய்வத் திருக்காட்சி கண்டு களித்தார். இவர் கி.பி. 17 ம் நூற்றாண்டில் தோன்றினார். கொடிய வயிற்றுநோய் இவருக்கு ஏற்பட்டது. உடனே துறவறத்தை மேற்கொண்டார். நோய் குறைய வில்லை. அத்வைத நூல்களில் நிகரிலாப் புலமையும், கண்ணன்மீது ஆழ்ந்த பக்தியும் உடைய இவர் தீராத வயிற்றுநோயுடன் திருப்பதி முதலிய திவ்வியத் தலங்களுக்குச் சென்று வழிபட்டார். வழியில் ஓரிரவில் பூபதிராஜபுரத்திலிருந்து நான்கு மைல் தொலைவிலுள்ள குடமுருட்டி ஆற்றின் கரையில் அமைந்துள்ள பிள்ளையார்கோவிலில் தங்கி, கண்ணனை எண்ணிக்கொண்டே, தன் துயர் துடைக்க வேண்டுமென வேண்டித் துயிலும்போது, கனவில் அந்தணர் ஒருவர் தோன்றி, விடிந்தவுடன் அவர் காணும் விலங்கினைப் பின் தொடர்ந்து சென்று அது மறையுமிடத்தில் தங்கி இறைவன் கருணையைப் போற்றி வாழ்ந்தால் பிணித்துயர் விலகுமென்று கூறி மறைந்தார்.

காலையில் விழித்த நாராயண தீர்த்தர் தன் அருகே ஒரு வெண்ணிறப் பன்றியைக் கண்டார். பெரு மகிழ்ச்சியுடன் அவ்வராகத்தைப் பின் தொடர்ந்தார். அப்பன்றி கல், முள் நிறைந்த பாதைகளையும், சேற்று நிலங்களையும், கழனிகளையும், ஒற்றையடிப்பாதைகளையும் கடந்து, பூபதிராஜபுரத்தை அடைந்து, அவ்வூர் கோயிலுள் சென்று மறைந்தது. நாராயணதீர்த்தருக்கும் ஆலயத்தினுள் அடியெடுத்து வைத்த அக்கணமே அன்றுவரை வாட்டி வதைத்த வயிற்று நோய் மறைந்தொழிந்தது. புத்துணர்ச்சி பெறற அவர், இறைவனின் திருவிளையாடல்களை கவிதை, உரைநடை, இசை, நடனம் என்னும்

---

எழுதியவர்—
N. ராஜகோபாலன் M.A.
தமிழ்விரிவுரையாளர், அரசினர் கலைக் கல்லூரி: திருவனந்தபுரம்,



ஸனாதன தர்மத்தின் உறைவிடமும், நிறைந்த பண்பாட்டின் உருவமுமாக விளங்கி அடக்கத்துடன் இறைவன் பணியே வாழ்வென்று தொண்டாற்றிவரும் உரையாசிரியர் ஸ்ரீ V. S. V. குருஸ்வாமி சாஸ்திரிகள்.

நான்கையும் கலந்து நாடகக் காவியமாகப் பாடத் தொடங்கினர். அவர் நாடோறும் காவியத்தை இசைக்கும்போது அதில் ஈடுபட்டக் கண்ணனும் தோன்றி ஆடுவது வழக்கமாம். கண்ணன் நேரில் தோன்றிக் கையொலி செய்தும், நாட்டியம் ஆடியும் துறவியை ஊக்குவித்த கதை கேட்போரை மெய் சிலிர்க்க வைக்கும்.

இவர் 'ருக்மிணி கல்யாணம்' வரை கதைப் பகுதியைப் பாடினர். அதுவரை ரசித்து மகிழ்ந்த கண்ணன் அதற்குப் பின் வரும் கதையைப் பாட வேண்டாம் என்று தடுத்தானும். கண்ணனின் கட்டளைப் படி தீர்த்தரும் மங்களம் பாடி பூர்த்தி செய்துவிட்டார். ''கிருஷ்ண லீலா தரங்கிணி'' என்னும் இப்பக்தி நூலில் ''ஜய ஜய ஸ்வாமின்! ஜய ஜய, ஜய ஜய கஜமுக; ஜய வக்ரதுண்ட'' என்று தனக்கு வழி காட்டிய பிள்ளையாரையும், ''ஜய ஜய வராகபுர வேங்கடேச'' என்று வராக வடிவில் காட்சி அளித்துக் காத்து அருளிய வேங்கடேசப் பெருமானையும் வாழ்த்தி வணங்கியுள்ளார். அந்நாள் முதல் பூபதி ராஜபுரம் வராகபுரம் என்று பெயர் பெற்றது. வராகபுரம் என்ற பெயரானது, வரகூர் என மருவிய இவ்வூரில்தான் நம் உரையாசிரியர் பிறந்தார்.

கண்ணன் பிள்ளைத் திருவிளையாடலில் 'உறியடி லீலை' முக்கியமானதாகும். அதனை வரகூரில் உற்சாகமாகக் கொண்டாடும் ஏற்பாட்டைச் செய்தவரும், நாராயண தீர்த்தர் ஆவார். உறியடி விளையாடல் ''சிக்யோத்ஸவம்'' எனப்படும். பத்து நாட்கள் நடை பெறும். அப்போது கிருஷ்ண லீலா தரங்கிணிப் பாடல்கள் இசைக்கப்படும்.

கி. பி. 19ம் நூற்றுண்டில் வரகூரில் தோன்றிய நாராயண சாஸ்திரிகள் கோழிக்கோடு சாமூதிரிக் கலாசாலையில் வடமொழி ஆசிரியராகப் பணியாற்றினர். ஓய்வு பெற்ற பின் வரகூர் சென்று வாழ்ந்தார். அவ்வூரில் நடைபெறும் வரலாற்றுச் சிறப்பு மிக்க உறியடி விழாவினைக் குறித்து ''உறியடிப் பிரபந்தம்'' என்னும் நூலை வடமொழியில் இயற்றினர். ஸ்ரீ குருஸ்வாமி சாஸ்திரிகள் இந்நூலுக்குக் குறிப்புரையும், விளக்கவுரையும் எழுதிச் சீரிய முறையில் பதிப்பித்துள்ளார்.

சாஸ்திரிகள் தோன்றிய குடும்பத்தை 'சங்கரசிவன் குலம்' என்று கூறுவார்கள். ஸ்ரீ சாஸ்திரிகளின் முதாதையார் ஒருவர் இப்பெயரைக் கொண்டிருந்தார். அவர் 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். அற நூல்கள் விதித்த முறைப்படி ஆசாரசீலராக வாழ்ந்துவந்தார். அதிகாலையில் கண் விழித்து, குடமுருட்டி ஆற்றிற்கு நீராடச் செல்வார். செல்லும்போது செங்கண்மாலின் 'நாராயண நாமத்தை' உரக்கக்

கூறிக்கொண்டே செல்வார். இத்திருவொலி கேட்டுத்தான் அப்பகுதிகளில் வாழும் உழவர்கள் எல்லாம் கண் விழித்து உற்சாகத்துடன் கழனிகளுக்குச் செல்லத் தொடங்குவர். நாராயண நாமத்தை நாடோறும் நவின்ற காரணத்தால் ஊரார் இவரைப் பெருமரியாதையுடன் 'நாராயண ஐயா' என்றே அழைத்தனர். மாரி குன்றி வறட்சி வரும் போது ஜாதி வேறுபாடின்றி ஊரார் அனைவரும் இவரை நாடி, வாடி நிற்கும் பயிர்களை வாழவைக்க வேண்டுமென வேண்டி நிற்பர். அவர் எல்லோரையும் அழைத்துக் கொண்டு ஆற்றுக்குச் சென்று தான் முழங்காலளவு நீரில் நின்றுகொண்டு பிறரையும் நிற்க வைப்பாராம். "வருணனே! அருள் புரிக. மழையைப் பொழிந்து, கருகும் பயிர்களைக் காத்திட வேண்டும். மக்களை வாழவை" என்று உரக்கக் கூறி பிரார்த்திப்பார். பிறரையும் உரக்கக் கூறும்படிச் செய்வார். சிறிது நேரத்தில் பெருமழை பெய்யுமாம்.

நாள்தோறும் அதிகாலையில் காலைக் கடன்களாகிய காயத்ரி ஜபம், கதிரவன் வழிபாடு ஆகியவற்றைச் செய்வார். நிறைந்த திருநீறு திகழும் நெற்றியுடனும், உருத்திராட்ச மாலை அணிந்த கழுத்துடனும் காட்சி அளிப்பார். சிவபூஜை செய்யாத நாளில் உண்ணார். உறங்கார், இத்தகைய சீரிய குறிக்கோள்களுடன் வாழ்ந்த இச்சங்கரசிவனாரின் பெயரிலேயே குடும்பம் அழைக்கப்பட்டது. இவர் ஒரு மாதத்தில் பத்து நாட்கள் துறவிகளுக்கு அன்னம் அளிக்கும் வழக்கத்தையும் கைக்கொண்டிருந்தார்.

பக்கத்து ஊர் செல்வந்தர்களிடையே நிலவிய பகை முற்றியது. பொருட்செல்வம் மிக்கவர்களில் ஒருவன் மற்றொருவனைக் கொன்றான். ஆற்றின் கரையில் இக்கொலை நடந்த வேளையில் நாராயணய்யா கரையில் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தார். நீதி மன்றத்தில் வழக்கு நடைபெற்றது. இருசாராரும் சான்று கூறும்படி இவரை வலியுறுத்தினர். இவர் மறுத்துவிட்டார். எனினும் நீதி மன்றம் இவரை அழைத்ததால் அங்கு சென்றார். திருவையாற்றுக்குக் கால் நடையாகவே நடந்து சென்றார். காலை வழிபாடுகளைக் காவிரிக் கரையில் செய்தபின் நீதிமன்றத்தை அடைந்தார். "இவ்வழக்கோடு தொடர்புடைய பணக்காரர்களை உங்களுக்குத் தெரியுமா?" என்ற முதற் கேள்வியை நீதிபதி கேட்டார். "நீதிபதி அவர்களே! 'பணக்காரன். என்னும் சொல்லுக்குரிய இலக்கணத்தை முதலில் சொல்லித் தந்தால் தங்கள் வினாவிற்குரிய விடையைச் சொல்வேன்" என்று பதில் கூறினார். இதைக் கேட்ட நீதிபதி திகைத்தார். இப்பெரியாரின் மாண்பினை உணர்ந்தார். அவரை மேற்கொண்டு விசாரிக்காமல் திரும்ப அனுப்பிவிட்டார். இன்றும் வரகூர் முதியோர்கள் இந் நிகழ்ச்சியைச் சொல்வதுண்டு.

2 பிறப்பு:—

ஸ்ரீ சாஸ்திரிகளின் தாயார் தருமாம்பாள் மறைகள் வகுத்த முறைப்படி வேள்விகள் இயற்றிய நற்குடும்பத்தைச் சார்ந்தவர் இவ்வம்மையார் பெற்ற முதல் மூன்று ஆண் மகவுகளும் நான்கு வயது வரை வளர்ந்தபின்னர் இறந்து போயின. மூன்று குழந்தைகளை முறையே வளர்த்துப் பறிகொடுத்த இம்மாதரசி பெரும் துயரில் மூழ்கினர். வரகூர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானிடம் அல்லலுற்று ஆற்ருது அழுது ஒரு நன்மகன் பிறக்க வேண்டுமென்றும் அக்குழந்தை நீடிய நல்வாழ்வு பெற வரகூர்ப் பெருமாள் அருளவேண்டும் என்றும் வேண்டினர். "நான்காவது மகன் பிறக்கும்வரை இடது கையாலேயே உண்பேன்" என்னும் உறுதி மொழியையும் எடுத்துக் கொண்டார். மேலும் அப்பிள்ளையின் பதினேராவது வயதில் காயத்ரி மந்திர உபதேசம் பெற்றவுடன் அவன் உயரமுள்ள கை விளக்கு ஏந்திய ஆண்பதுமை ஒன்றைப் பெருமாளுக்குக் காணிக்கையாக வைப்பதாகவும் நேர்ந்து கொண்டார். *1911*ம் ஆண்டு டிஸம்பர் மாதம் 12ம் தேதி அன்று நான்காவது மகன் பிறந்தான். அக்குழந்தைதான் நம் சாஸ்திரிகள். ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டுவிழா அன்றைய தினமே நடைபெற்றதால் அரசாங்கத்தினரால் கிராமம் முழுவதும் அலங்கரிக்கப்பட்டு வீடுதோறும் மதுர தின்பண்டங்கள் வழங்கப்பட்டன. ஸ்ரீ சாஸ்திரிகளின் பிறந்தநாளில் இச்சம்பவத்தின் சேர்க்கை வரவிருக்கும் நன்மையைக் குறிப்பதாகும் என்று ஊர்ப் பெரியவர்கள் கூறினர்கள். ஸ்ரீ சாஸ்திரிகளது பதினேராவது வயதில் அவர் அளவுள்ள வெண்கல ஆண்பதுமை வரகூர் பெருமானின் திருவடிக்குச் சமர்ப்பிக்கப்பட்டது.

ஸ்ரீ சாஸ்திரிகளின் தந்தையார் ஸ்ரீ வைத்யநாதய்யர் பண்பாட்டுச் செல்வராகத் திகழ்ந்தார். வரகூர் ஸ்ரீவெங்கடேசப் பெருமானிடம் அளவிலா பக்தி உடையவர். ஆண்டுதோறும் நடை பெறும் உறியடி விழாவில் பத்து நாட்களும் மாலை 7 மணி முதல் இரவு ஒரு மணிவரை பக்திப் பாடல்களைப் பரவசத்துடன் பாடுவார். இறைவனின் திருப்புகழைப் பாடுவதைத் தனது வாழ்வின் தலையாய விரதமாகக் கொண்டிருந்தார். "தோடைய மங்களம்", "அஷ்டபதி", "தரங்கிணி", திவ்யநாம சங்கீர்த்தனம்" என்ற முறையில் அமையும் இவரது பஜனை மிகவும் சிறப்பு உடையதாக விளங்கியது. ஆவணி மாத உற்சவத்தில் பெருமாளின் புகழை இசைத்த இந்தப் பெரியவர் தைமாதம் தன் 68வது வயதில் இறைவனேடு இரண்டறக் கலந்தார்.

3 கல்வி:—

ஸ்ரீ சாஸ்திரிகள் இளமையிலேயே வடமொழியை ஆழ்ந்து கற்றார். கும்பகோணம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்து கற்றுத் தொடர்ந்து கும்பகோணம் மஹாராஜா வடமொழிப் பாடசாலையில் சேர்ந்து வடமொழிக் கல்வி பயின்றார். "சிரோமணி" நுழைவுத் தேர்வில் வெற்றி பெற்றார். முதல் வகுப்பு கிடைத்தது. பின்னர் சென்னை வடமொழிக் கல்லூரியில் நான்கு ஆண்டுகள் (1931–34) சாகித்யக் கல்வி கற்று, தேர்வில் வெற்றி பெற்றார். அறிஞர் பேரவையால் ஆராய்ச்சி அறிஞராகத் திகழ்ந்த ஸ்ரீ சாஸ்திரிகளுக்கு "சாகித்ய விசாரதா" என்னும் பட்டம் அளிக்கப்பட்டது.

காஞ்சி காமகோடி சங்கரமடத்தின் நிர்வாகத்தில் உள்ள "ஐயுவய்யர் லட்சுமியம்மாள் வேதாந்தப் பாடசாலை" யில் சேர்ந்து வேதாந்தம் கற்பதில் பேரார்வத்துடன் ஈடுபட்டார். "சாஸ்திர ரத்னாகர" பிரம்மஸ்ரீ வேப்பத்தூர் வைத்யநாத சாஸ்திரிகள் அவர்களும், மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ யக்ஞஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களும் இவருக்கு வேதாந்தம், ந்யாயம் இவைகளில் கல்வி புகட்டிய சான்றோர்களாவர். 1937ல் "வேதாந்த சிரோமணி" தேர்வில் முதல் வகுப்புடன் தேர்ச்சி பெற்றார். கும்பகோணம், திருச்சி முதலிய இடங்களிலுள்ள அத்வைத ஸபையினர் இவருடைய புலமையைப் பாராட்டி "ப்ரஸ்தானத்ரய வித்வான்" என்னும் பட்டத்தை வழங்கி இவரைக் கௌரவித்தார்கள். 1935ம் ஆண்டு யுவ வருஷம் மார்கழி மாதம் திருப்பதியில் உத்தராதிமடம் ஸ்ரீ மத்வாசாரிய பரம்பரையைச் சேர்ந்த சுவாமிகள் நடத்திய வித்வத் ஸபையில் தன் குருநாதருடன் ஸ்ரீ சாஸ்திரிகள் "பஞ்சலக்ஷணீ" என்ற நியாய நூலில் "வாக்யார்த்தம்" (சொற்பொழிவு) செய்து சுவாமிகளிடமிருந்து பொன்னாடையும், பணமுடிப்பும் பெற்றார்.

நாள்தோறும் கற்றார். மேன்மேலும் கற்றார். பற்பல நூல்களை நுகர்ந்து தன் அறிவு வேட்கையைத் தணித்துக் கொண்டார். "இந்தோ ஐரோப்பிய மொழிகளின் ஒப்பிலக்கணத் தேர்வு" (Certificate of Proficiency of oriental Learning–Indo European comparative Philology with special Reference to Sanskrit Madras University, 1937) எழுதி முதல்வகுப்பில் தேர்ச்சி பெற்றார். சென்னை அரசாங்கத்தின் மான்யம் பெற்று 1938ம் ஆண்டு மயிலையில் இருக்கும் வடமொழிக் கல்லூரியில வேதாந்த நூல்களின் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். சங்கர பாஷ்யத்தினை அடிப்படையாகக் கொண்டு, பிற்கால வேதாந்திகள் பற்பல வேறுபட்ட கொள்கை விளக்கங்கள் எழுதியுள்ளனர். ஸ்ரீ சாஸ்திரிகள் இவற்றை நன்கு ஆராய்ந்து, வேறுபட்ட

வேதாந்தக் கொள்கைளுக்கெல்லாம் சங்கர பாஷ்யம் அடிப்படையாக அமைந்துள்ள மாண்பினைத், தக்க முறையில் விளக்கி செய்யுள் வடிவில் அமைத்த "சாரீரக வ்யாக்யா ப்ரஸ்தானுனி" என்ற ஆராய்ச்சி நூலுக்கு பெரும் வரவேற்புக் கிடைத்தது. சென்னை வடமொழிக் கல்லூரியின் ஆசிரியர்களாக விளங்கிய கருங்குளம் மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களும், "சாஸ்த்ர ரத்னுகர" பிரம்மஸ்ரீ ராமசந்திர தீட்சிதர் அவர்களும் இந்த ஆராய்ச்சிக்கு அருந்துணை புரிந்தனர்.

4 <u>சொற்பொழிவாளர் :—</u>

இவர் பட்டங்கள் பல பெற்றபின்னரும், அலுவலில் அமர அரு முயற்சி செய்யாமல், கற்றவைகளை மக்கள் மனம் ஏற்கும்படி விரித்து உரைப்பதில் உற்சாகமாக ஈடுபட்டார்.

அந்நாளில் ஸ்ரீ சிவப்பிரகாசானந்த ஸ்வாமிகள் ஸநாதன தர்மத்தைப் பரப்புவதற்காகப் பேரார்வத்துடன் பணி புரிந்துவந்தார். நாட்டு மக்கள் அவரை "தஞ்சாவூர் ஸ்வாமிகள்" என்று அழைத்துவந்தனர். ஸ்ரீ சாஸ்திரிகள் இந்த ஸ்வாமிகளின் சிஷ்யரானுர். அவரது தலைமையில் தஞ்சை, திருச்சி, வட ஆற்காடு, தென்னுற்காடு முதலிய மாவட்டங்களில் சுற்றுப்பயணம் செய்து, ஸனுதன தர்மத்தை மக்களிடையே பரப்புவதிலும், பண்பாட்டை வளர்ப்பதிலும் ஈடுபட்டார். சிற்றூர்தோறும் சென்று நம் தர்மத்தின் சிறப்புகளை எடுத்துரைத்து ஸ்வாமிகளின் அன்புக் கட்டளையை சிரமேற்கொண்டு எட்டு ஆண்டுகள் அறத்தைப் பரப்பும் திருப்பணியில் ஈடுபட்டார். அதன் பின்னரும் ஸ்வாமிகள் சொன்ன பின்னர்தான் உத்யோகத்தில் அமர வேண்டும் என்று தீர்மானித்தார். ஸ்வாமிகள் சமாதி அடைந்தபின் உத்யோகத்தில் சேர்ந்தார்.

திருவனந்தபுரம் வடமொழிக் கல்லூரி ஆசிரியரான பின்னரும் அறப்பிரசாரத் தொண்டை இவர் விட்டுவிடவில்லை. பாரதத்தின் பற்பல இடங்களில் வாழும் ஆஸ்திக அன்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்க பற்பல ஊர்களுக்குச் சென்று சொற்பொழிவுகள் ஆற்றினுர். பகவத்கீதை, இராமாயணம், பாகவதம், ஸ்காந்த புராணம், தேவி பாகவதம், உபநிஷதம் முதலியவற்றைக் குறித்து இவர் ஆற்றிய பேருரைகள் கணக்கிலடங்கா. தன் விரிவுரைகள் அனைத்திலும் தர்மம், ஞானம், பக்தி என்னும் மூன்றின் சிறப்புகளை வலியுறுத்துவது இவருடைய வழக்கமாகும். பொருந்தாத கருத்துக்களையோ, புளித்த நகைச்சுவைகளையோ இவர் பேச்சில் கேட்க இயலாது.

திருவனந்தபுரத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் 'சப்தாக விழா'வினைப் பலர் நன்கு அறிவர். 1912ம் ஆண்டு இவ்விழா தொடங்கப்பட்டது. இருபது ஆண்டுகள் தொடர்ந்து இவ்விழாவில் கலந்துகொண்டு பாகவதச் சொற்பொழிவு செய்யும் நல்வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. 1963ம் ஆண்டு ''சப்தாகப் பொன்விழா'' சிறந்த முறையில் நடைபெற்றது. பொன்விழாவின்போது வெளியிட்ட ''விழாமலர்'' (சோவனீர்) இவருடைய கைவண்ணத்துக்குத் தக்கச் சான்ருக அமைந்துள்ளது.

இச்சப்தாகத்தினைத் தொடங்கி வைத்த அருள்மிகு தேவகீநந்தன ஸ்வாமிகள் திருவனந்தபுரத்தில் வைத்து ''சாதுர்மாஸ்யவிரதம்'' மேற்கொண்டிருந்தபோது நான்கு முறை ''ஸ்ரீ சங்கர விஜயம்'' குறித்துச் சொற்பொழிவு ஆற்றும் நல்வாய்ப்பினையும் இவர் பெற்றது குறிப்பிடத்தக்கதாகும். இவருடைய விரிவுரை பற்றிய திறனுய்வுகள் பற்பல பத்திரிகைகளில் வந்துள்ளன. எண்ணற்ற பாராட்டு மடல்கள் வந்து குவிந்தன. வடமொழியிலும், தமிழிலும், மலையாளத்திலும் இயற்றப்பட்ட பாராட்டிதழ்கள் பலவற்றை இவர் பெற்ருர்.

5 அலுவல் வாழ்க்கை:—

அலுவலகங்களையும், பதவிகளையும் தேடிக் கொண்டு உலகோர் அலேவார்கள். கற்றறிந்த பேரறிஞரான இவரைத் தேடிப் பதவி வந்தது. சொற்பொழிவுப் பணியில் ஈடுபட்டு ஊக்கத்துடன் செயலாற்றிக் கொண்டிருந்த இவரைத் திருவிதாங்கூர் அரசு, திருவனந்தபுரம் வடமொழிக் கல்லூரியில் ஆசிரியப் பணிபுரிய வருமாறு அழைபபு விடுத்தது. அப்போதுதான் (1944ம் ஆண்டு) அக்கல்லூரியில் வேதாந்தம் கற்பிப்பதற்கெனத் தனித் துறையைத் தொடங்கியிருந்தனர். அரசினரின் அழைப்பை ஏற்று அப்பணியில் அமர்ந்தார். நம்மாழ்வாரின் 'மங்களாசாஸனம் பெற்ற திருவனந்தபுரத்தில் வசிக்கத் தொடங்கினுர். இன்றும் அங்குதான் வாழ்ந்து வருகின்ருர். பண்பு நலன்களும், புலமையும் ஒருங்கே பெற்ற இவரை மாணவர் உலகம் விரும்பி வரவேற்றது. திருவனந்தபுரத்து ஆஸ்திகப் பெருமக்களும் இவருடைய அருமை பெருமைகளை உணர்ந்தனர். சுருங்கக் கூறின், வரகூரில் பிறந்தவர் திருவனந்தபுரத்துத் தலேயாய மனிதர்களுள் ஒருவர் ஆனுர். இருபத்தைந்து ஆண்டுகள் திருவனந்தபுரம் வடமொழிக் கல்லூரியில் பணியாற்றிய பின்னர் 1968ல் முதுநிலேயுப் பேராசிரியராக ஓய்வு பெற்ருர். இடையில் சில ஆண்டுகள் அக்கல்லூரி முதல்வராகத் திகழ்ந்தார்.

ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பெரியவர்களின் ஆணைப்படி தமிழகம் எங்கும் திருப்பாவை-திருவெம்பாவை மகாநாடுகளும், வடமொழியின் வளர்ச்சிக்காக அமரபாரதி ஸபையினரால் நடத்தப்படும் பரீட்சைகளும் நடத்தப்பட்டன. திருவனந்தபுரம் இளந்தலை முறையினர்க்கு இத்தெய்வத்தமிழ்ப் பாக்களைக் கற்பிப்பதிலும், அமரபாரதி பரீட்சைகளை நடத்தி வடமொழியை வளர்ப்பதிலும் பேரார்வம் காட்டினூர். இவருடைய அருமுயற்சியால் திருவனந்தபுரத்திலும் "பாவை மாநாடுகள்" பலமுறை நடந்தன. ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர்களின் கருத்திற்கு இணங்க "ஆவஹந்தி ஹோமத்தை" திருவனந்தபுரத்தில் நடத்தும்படி ஏற்பாடு செய்தார். 1972ல் காஞ்சீபுரம் ஸ்ரீ புதுப் பெரியவர்கள் திருவனந்தபுரத்திற்கு வருகை புரிந்தபோது அவருக்குப் பெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது. அவ்வரவேற்புக் குழுவிலும் இவர் முக்கிய உறுப்பினராகத் திகழ்ந்தார்.

## 6 "தோன்றிற் புகழொடு தோன்றுக"

ஸ்ரீ சாஸ்திரிகள் பெற்ற பரிசுகளும், பாராட்டுகளும் பலவாகும். தலையானவற்றைக் காண்போம்.

i) 1947ல் திருவனந்தபுரத்தில் "நவராத்திரி வித்வத் ஸதஸ்" நடைபெற்றது. திருவிதாங்கூர் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மன்னர் அத்வைதத்தில் இவர் பெற்றிருந்த அளவிலாப் புலமையைப் பாராட்டிப் பொற்பதக்கம் அளித்தார்.

ii) கும்பகோணம் அத்வைத ஸபையின் வைரவிழா 1948ல் நடந்தது. அவ்விழாவில் கலந்துகெண்டு விழாவினைச் சிறப்பித்த காஞ்சி ஸ்ரீ காமகோடிப் பெரியவர்கள் இவருடைய வேதாந்த நுண்ணுணர்வினைப் பாராட்டி "பொற்கணையாழி" ஒன்றினைப் பரிசாக அளித்தார்கள்.

iii) 1957ல் சென்னை வடமொழிக் கல்லூரியின் பொன்விழா சிறப்பாக நடந்தது. விழாவினையொட்டி நடைபெற்ற வித்வத் ஸதஸில் கலந்து கொண்ட இவ்வித்தகர்க்கு அந்நாள் உபஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் தங்கப் பதக்கம் அளித்தார்.

iv) 1958ல் காலடியில் நடந்த கணபதி வித்வத் ஸதஸில் இவர் கலந்துகொண்டார். அப்பேரவைக்குத் தலைமை தாங்கிய சிருங்கேரி சாரதா பீடாதிபதி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் இவரைப் பாராட்டிப் பொற்பதக்கம் அளித்தார்.

v) அஹோபில மடாதிபதி ஸ்ரீ ஸ்வாமிகள் அனந்தை மாநகருக்கு விஜயம் செய்திருந்தபோது, அவர்களுடைய ஸந்நிதானத்தில்

ஜிஞாஸாதிகரணத்தில் சொற்பொழிவு நிகழ்த்தி தான் இயற்றிய ''ஹரிலீலையை'' ஸமர்ப்பித்து ஸந்நிதானத்திலிருந்து விசிஷ்ட ஸம்மானம் பெற்றார்.

(vi) கொச்சிப் பகுதியில் உள்ள திருப்பூணித்துறை வடமொழிக் கல்லூரியின் பொன்விழா 1963ல் நடைபெற்றது. அங்கு சாஸ்திர ஸதஸ் நடந்தது. கொச்சி மன்னர் ''ஸ்ரீராமவர்மா பரீட்க்ஷித்துத் தம்பிரான்'' தங்கப்பதக்கம் தந்து இவரைக் கௌரவித்தார்.

(vii) திருவிடைமருதூரில் ''பாதுகா பிரதிஷ்டை கும்பாபிஷேக விழா'' நடைபெற்றபோது ஸ்ரீ காஞ்சீ காமகோடிப் பெரியவர்கள் இவரது வேதாந்தப் புலமையைப் பாராட்டி பொற்பாதுகையும், சால்வையும் அளித்தார்கள்.

(viii) இப்பாராட்டுக்களுக்கெல்லாம் சிகரம் வைத்ததுபோல 1973ல் இவர் பெற்ற வரிசை அமைந்தது. வடமொழி இலக்கியம், சாஸ்திரம், தத்துவம் ஆகியவைகளில் இவர் பெற்றிருந்த அறிவினைப் பாரத சர்க்கார் உணர்ந்தது. அப்பொழுது குடியரசுத் தலைவராகத் திகழ்ந்த ஸ்ரீ V. V. கிரி அவர்கள் இம்முதறிஞருக்குப் பொன்னாடை போர்த்தி, வெகுமதிப் பத்திரம் அளித்துப் பாராட்டினார். அந்நாள், 1973 மார்ச் 23ம் நாள், நன்னாளாக, மறக்க இயலாப் பொன்னாளாகத் திகழ்கின்றது. இப்பெரியாரை அறிந்த நல்லவர்கள் சிந்தை மகிழ்ந்தனர். திருவனந்தபுரம் பொதுமக்கள் இப்பேறு பெற்ற இப்பெரியவரைப் பாராட்டிப் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார்கள். ''ஸ்ரீ காமகோடிப்ரதீபம்'' முதலிய பல பத்திரிகைகள் இந்த நற்செய்தியை வெளியிட்டன. பல பாராட்டு மடல்களும் தந்திகளும் வந்து குவிந்தன.

7. <u>எழுத்துக்குவியல்:—</u>

இவர் வடமொழியிலும், தென்மொழியிலும் பல நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் தலையாய சிலவற்றைப் பற்றிய குறிப்புகளைக் காண்போம்.

வால்மீகி ராமாயணத்தையும், ஸ்ரீமத் பாகவதத்தையும் ஒப்பு நோக்கி இவர் வடமொழியில் செய்யுள் வடிவத்தில் எழுதியுள்ள ''ஹரிலீலா'' என்னும் நூல் கற்போரைக் கவர்கின்றது. இராமரும், கிருஷ்ணரும் திருமாலின் அவதாரங்கள் என்றும், பூமியில் அறத்தை நிலைநாட்டுவதற்காகவே தோன்றினர் என்றும் தக்க மேற்கோள்களுடன் காட்டியுள்ளார். பக்திச் சுவை சொட்டச் சொட்ட இந்நூலுக்குத் தமிழில் உரையும் எழுதியுள்ளார்.

மற்ருெரு தமிழ் உரை நடை நூல் ''குஹாவதார ரஹஸ்யம்'' ஆகும். மகாபாரதம், ஸ்காந்த புராணம், சிவபுராணம் இம்முப்பெரும் நூல்களின் அடிப்படைத் தத்துவங்களை இந்நூலில் ஆராய்கின்ருர் பற்பல கதைகளின் ஆழ்பொருளை தெளிவாக விளக்கின்ருர். தோத்திரப் பாக்கள் பலவற்றிற்கு உரிய விளக்கமும் இந்நூலில் கிடைக்கின்றது. திருவனந்தபுரம் சைவப் பிரகாச சபையினர் 1960ல் இந்நூலை வெளியிட்டபோது இப்புத்தகம் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது.

திருவிதாங்கூரை ஆண்ட ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் மன்னர் அவர்களை அனைவரும் நன்கறிவர். அப்பெருமகனுர் வடமொழியில் எழுதியுள்ள ''ஸ்ரீ பத்மநாப சதகம்'', ''ஸ்யானந்தூர புரவர்ணணப் பிரபந்தம்'', குசேலோபாக்யானம்'', ''அஜாமிளோபாக்யானம்'' முதலியவற்றிற்குத் தெளிவான ''ஹரிப்ரியை'' எனப்படும் தமிழ் உரை எழுதி ஆராய்ச்சிக் குறிபபுகளுடன் வெளியிட்டுள்ளார். ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் மன்னரின் இலக்கியத்தைத் தக்க முறையில் தமிழ் உலகுக்குத் தந்த பெருமை இவரையே சாரும்.

''லலிதாலலாமலஹரி'' என்னும் இவரது வடமொழிச் செய்யுள் நூல் அம்மொழியில் அகர வரிசையில் வரும் 50 எழுத்துக்களையும், முறைப்படி முதல் எழுத்தாகக் கொண்டு 50 வாக்கியங்களுடன் திகழ்கின்றது. ஸ்ரீ ராஜராஜேஸ்வரியின் ''நவாவரண பூஜை''யின்போது எத்தனை தெய்வங்கள் வழிபடப்படுகின்றன என்பதை இவ்வுரைநடை நூல் விளக்குகின்றது.

இவர் எழுதிய பிற நூல்கள் பின்வருமாறு:—

(1) வான்மீகி ஹ்ருதயம்
(2) தத்வதர்சீ காளிதாஸர்
(3) நளோதந்தம்
(4) குருப்ரியா (ஸ்ரீ சங்கர பகவத் பாதர் இயற்றிய சதஸ்லோகீ என்னும் நூலுக்குத் தமிழ் உரை)
(5) மஹாகணபதி ஸ்தோத்ராணி
(6) ஹயக்ரீவ ப்ரபாவம்
(7) ஆவஹந்தி ஸ்ரீ ஸூக்தங்களின் பெருமை
(8) லகுசதஸ்லோகி
(9) ஸுந்தரகாண்ட ஸௌந்தர்யம்
(10) ஸ்வாதித் திருநாளின் வடமொழி இலக்கியங்களின் பெருமை.

8. ஆராய்ச்சி:—

பல்கலைக் கழக மான்யக் குழுவினர் (University Grants Commision) இப்பெரியவருக்கு மீண்டும் பேராசிரியப் பதவியை அளித்துள்ளனர். கேரளப் பல்கலைக் கழகத்தின் வடமொழித் துறையில் பெரும் பேரா சிரியராகப் பணி புரிகின்றார் (U. G. C. Professor). பிரம்ம ஸூத்ர சங்கர பாஷ்யத்திற்கு ஸ்ரீ வாசஸ்பதி மிஸ்ரர் என்பவர் சிறந்த வ்யாக்யானம் எழுதியுள்ளார். இந்நூலின் பெயர் பாமதி என்பதாகும். இந்நூலுக்கு ஸ்ரீ அல்லாலசூரி என்னும் பெரியவர் "பாமதீ திலகம்" என்னும் பெயரில் விளக்கவுரை வரைந்துள்ளார். ஏட்டில் இருக்கும் இந்நூலை ஆராய்ச்சி முறையில் பதிப்பித்து வெளியிடும் அரும்பணி யில் ஸ்ரீ சாஸ்திரிகள் தற்போது ஈடுபட்டுள்ளார்கள். இவர் வட மொழித் துறையில் ஆராய்ச்சி வகுப்புகளுக்கு (M. Phil) ஆர்வத்துடன் கற்பித்து வருகின்றார். டாக்டர் முதலிய ஆராய்ச்சிப் பட்டங்கள் பெற முயலும் மாணவர்களுக்கு உதவுகின்ற அரிய வழிகாட்டியாகவும் செயலாற்றுகின்றார்.

இவருடைய வாழ்வு "உண்மை—உழைப்பு—உயர்வு" என்னும் கொள்கைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இப்பெரியவர் இன்னும் பல்லாண்டுகள் மாநிலம் பயனுற வாழ வேண்டுமென்று வாலறிவனை வேண்டிக்கொள்கின்றோம்.

# வெளியிடுவோர் உரை

உலக உயிர்கள் அனைத்தும் இம்மையிலும் மறுமையிலும் நன்மைகளையும், சிறப்புக்களையும் பெற்று, வாழவேண்டும் என்பதே எங்கள் அவா. வாழ்க்கை, உடல் வாழ்க்கை, உயிர் வாழ்க்கை, ஆன்மீக வாழ்க்கை என மூன்று வகைப்படும். உடல் வாழ்க்கையை நம் புறக் கண்களால் பார்க்க முடிகின்றது. உள வாழ்க்கையை அவரவர் கொண்டுள்ள உயர்ந்த எண்ணங்களால் அறிகிறோம். இவ்விரண்டிற்கும் அடிப்படையான ஆன்மீக வாழ்க்கையை உயர்த்துவதே சமயங்களின் நோக்கமாகும். உடலோடும் உயிரோடும் உட்கலந்திருக்கும் ஆன்மாவுக்குத் தெய்வத் தன்மை உண்டு. உயிர்களின் தெய்வத் தன்மை முழுமை பெற்று உயிர்கள் இறைவனோடு இரண்டறக் கலப்பதற்கு இறைவனின் நாமங்கள் துணை புரிகின்றன.

ஸஹஸ்ரநாமங்கள் பல உள்ளன. விஷ்ணு ஸஹஸ்ரநாமம், லலிதா ஸஹஸ்ரநாமம், மஹாகணபதி ஸஹஸ்ரநாமம், முதலியன குறிப்பிடத்தக்கவை. இவற்றுள் மஹாகணபதி ஸஹஸ்ரநாமத்தைக் கூறியவர் விநாயகப் பெருமானே ஆவார். இது மஹாகணபதி ஸஹஸ்ரநாமத்திற்கு மட்டும் உரிய தனிச் சிறப்பாகும். மற்றைய ஸஹஸ்ரநாமங்கள் பிறரால் இறைவன் பெருமையை விளக்கச் சொல்லப்பட்டனவாகும்.

இந்நூல் உயர்திரு. V. S. V. குருஸ்வாமி சாஸ்திரிகளின் தமிழ் உரையுடன் மிகச் சிறப்பாக வெளிவருகின்றது. ஸ்ரீ. குருஸ்வாமி சாஸ்திரிகள் சமஸ்கிருதக் கல்வி, தர்மசாஸ்திரங்கள், பக்திக் கிரந்தங்கள் ஆகியவற்றில் சிறந்த பாண்டித்யம் உடைய பெரியாராவர். மிகுந்த தெய்வநம்பிக்கையும் பக்தியும் உடையவர். இவ்வுரை அவர்களின் உயர்ந்த பண்பையும், பாண்டித்யத்தையும் வெளிப்படுத்துகின்றது. காலஞ்சென்ற எங்கள் அன்புத் தகப்பனார் அவர்கள் ஸ்ரீ சாஸ்திரிகள் அவர்களிடம் பேரன்பும், பெரும் பக்தியும் கொண்டிருந்தார்கள். நம் சநாதன தர்மத்தின் லட்சியங்களுக்கு ஒப்ப தூய வாழ்க்கை வாழ்ந்து தார்மீகப் பற்றுடைய அன்பர்களுக்கு எல்லாம் முன்மாதிரியாக ஸ்ரீ சாஸ்திரிகள் விளங்கி வருகிறார்கள் அன்னாருடைய இந்தச் சிறப்பு மிக்க கைங்கரியத்துக்கு வார்த்தைகளால் நன்றி கூற இயலாது. ஆயினும் ''நன்றி மறப்பது நன்றன்று'' என்ற நன்

மொழிக் கிணங்க, ஸ்ரீமத் பாகவதத்தில் லோகமாதாவான ஸ்ரீ ருக்மணிப் பிராட்டியார் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு சந்தேசம் கொண்டுபோய் வந்த பிராம்மணோத்தமருக்கு நன்றி தெரிவிக்க நமஸ்காரம் செய்தது போன்று எங்களுடைய பணிவன்பு கலந்த நமஸ்காரங்களைச் சமர்ப் பித்து நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்

அன்பு கனிந்து இந்நூலுக்கு, ஆசியுரை அருளிய அன்னை ஸ்ரீ காமாட்சியின் உருவமாக விளங்கி அருள் பாலித்து வரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சங்கராச் சார்யஸ்வாமிகள் அவர்களின் திருப்பாத கமலங்களுக்கு தாழ்மை யான, பக்தி மிகுந்த வணக்கங்களைச் சமர்ப்பித்துக் கொள்கிறோம்.

உயர்திரு. கிருபானந்த வாரியார் சுவாமிகள் அளித்து உதவி யுள்ள முன்னுரை ஆழ்ந்த கருத்துக்களுடனும், தத்துவ விளக்கத்து டனும் திகழ்கின்றது. ஸ்ரீ வாரியார் சுவாமிகள் எங்கள் குடும்பத்தின் பேரிலும் குறிப்பாக அடியேன் பேரிலும் மிகுந்த அன்புகொண்டவர்கள் இறைவன் பணிக்கென்றே தன் வாழ்வை அர்ப்பணித்து, ஆயிரமா யிரம் உள்ளங்களுக்கு அமைதி தந்து தன்னலம் கருதாது சிரிய வாழ்க்கை வாழ்ந்து வரும் பெரியாராவார். ஸ்ரீ சுவாமிகளின் அன்பிற் கும் தொண்டுக்கும், தியாகத்துக்கும் ஈடு செலுத்த இயலவே இயலாது. ஆயினும் எங்கள் மன நிறைவுக்காக அன்னருக்கு நன்றி செலுத்தும் பாவனையாக எங்கள் மனப்பூர்வமான வணக்கங்க ளைத் தெவித்துக் கொள்கிறோம்.

ஆங்கிலத்தில் சிறப்பு மிகு முன்னுரை எழுதித் தந்த உயர்திரு. ஸ்ரீனிவாசன் பிள்ளையவர்கள் எங்களுக்கு நெருங்கிய உறவினர். கிரு கஸ்தாஸ்ரம தர்மத்திலிருந்தாலும் தவவாழ்க்கை மேற்கொண்டுள்ள பெரியார். எளிமையின் உருவம். அன்பின் சிகரம். அறிவுக்கடல் அவர்களுடைய ஆழ்ந்த அறிவுக்கும், கருத்துத்தெளிவுக்கும் அவர்கள் எழுதிய முன்னுரையே சான்றாகும். குறிப்பாக என் மீது மிக்க அன்பு காட்டி, ஆத்மீக ஸாதனைப் பாதையில் வழிகாட்டியாக இருந்து ஆசிபுரிந்து வருகிறார்கள். பொங்கி எழும் நன்றியுணர்வோடு, என் னுடையவும் எங்கள் குடும்பத்தாருடையவும் பணிவன்பு கலந்த நமஸ் காரங்களை ஸமர்பித்துக் கொள்கிறேன்.

ஆங்கிலத்தில் சிரிய அணிந்துரை நல்கி உதவிய மாண்புமிகு நீதிபதி உயர்திரு G. விஸ்வநாதய்யர் அவர்களுக்கும் எங்கள் நெஞ்சம் நிறைந்த நன்றி உரித்தாகுக. திரு. விஸ்வநாதய்யர் அவர்கள் தூய நன்னெஞ்சம் கொண்டவர். பக்தி உணர்வுடையவர். அவரது எழுத் தோவியம் இந்நூலுக்குத் தனிப் பிரபாவத்தைத் தருகின்றது. எப்பொ

முதும் இந்தக் கணபதி ஸஹஸ்ரநாமத்தை மிகுந்த சிரத்தையுடன் பாராயணம் செய்யும் புண்ணியம் செய்த மனிதருக்கு, ''பிணியற்ற நீண்ட ஆயுள், மாசுபடியாத குலம், எளியவர்களிடமுள்ள ஏழ்மையை ஒழிக்கும் செல்வம், எப்போதும் களங்கமில்லாக் கீர்த்தி, எப்போதும் புதுமையுடன் பேசும் திறன், பிணியால் தீண்டப்படாத உடல் வனப்பு, நல்லொழுக்கம் மிக்க புதல்வர்கள், நற்குணம் நிறைந்த அனுகூலமான மனைவி, திட்டமிட்டதெல்லாம் தடையின்றிக் கிடைக்கும் தன்மை இவையாவும் யாதொரு தடையுமின்றி ஏற்படுகின்றன'' என்று இந்நூலின் இறுதியில் குறிப்பிடப் பட்டுள்ளது. இவையனைத்தையும் பக்தகோடிகள் பெறவேண்டுமென்பதே எங்கள் விருப்பம்.

உரையாசிரியர் திரு. குருஸ்வாமி சாஸ்திரிகளின் வாழ்க்கை வரலாறு இந்நூலின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது. ''விஞ்சு புகழ் தஞ்சை'' என்ற நூலில் சேர்ப்பதற்காக எழுதப்பட்ட வரலாறு இது. தனி மனிதரின் வரலாருகவும் ஒரு காலகட்டத்தைக் காட்டும் கண்ணுடியாகவும் இது அமைந்துள்ளது. நம்மிடையே வாழும் இப்பெரியவருக்கு உரிய முறையில் நாம் சிறப்புச் செய்யவில்லை என்பது எங்கள் திடமான எண்ணம் அக்குறையை ஓரளவு அகற்றும் நோக்குடன் இதனை வெளியிடுகிறோம். இதனை வெளியிடலாகாது என்று அவர்கள் பன்முறை கூறினார்கள். எங்கள் விருப்பத்தால் அவர்களின் அன்புக் கட்டளையையும் மீறி இவ் வாழ்க்கை வரலாற்றை வெளியிடுகின்றோம். நம்மிடையே வாழும் எல்லாச் சான்றோர்களின் வரலாறுகளையும் வெளியிடவேண்டும் என்ற எண்ணம் எங்களுக்கு உண்டு.

உரையாசிரியரின் வரலாற்றை நல்ல முறையில் எழுதி உதவிய திரு. ராஜகோபாலன் அவர்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக. நல்ல முறையில் இந்நூலை அச்சிட்டுத் தந்த திருவனந்தபுரம் சாஸ்தா பிரின்டேர்ஸாருக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் எங்கள் ஐந்தாவது வெளியீடாகும். இங்ஙனம் நல்ல நூற்களை வெளியிட அருள் புரிந்துவரும் இறைவனுக்கு எங்கள் வணக்கங்களைச் சமர்ப்பித்துக் கொள்கிறோம்.

இவ்வண்ணம்

அ. சுப்பிரமணியன்

திருவனந்தபுரம்
1-2-'76

ஸ்ரீ அழகிய கன்னி
விநாயகர் கோயில் டிரஸ்ட்

உ

## "சில நினைவுகள்"

"ஓத வினையகலும் ஓங்கு புகழ்பெருகும்
காதல் பொருள் அனைத்தும் கைகூடும்—சீதப்
பனிக் கோட்டு மால் வரை மேல் பாரதப் போர் தீட்டும்
தனிக் கோட்டு வாரணத்தின் தாள்"

சுமார் 35 வருடங்களுக்கு முன்னால்:

அருமைத்தமக்கை ஒருத்தி இருந்தாள். பாசத்தின் உறைவிடம். வீட்டிலே மகாலக்ஷ்மியைப் போல் வளைய வந்துகொண்டிருந்தாள். எங்கள் மேல் சொரிந்த அன்பின் இனிய நினைவுகள் இன்றும் எஞ்சி நிற்கின்றன. விவாகத்துக்கான ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார் கள்—ஒரு வரன். அநேகமாக முடிவு செய்தாகி விட்டது. சாந்தி முகூர்த்தம் வேளையில் கொடுக்கவேண்டிய பொருள்கள்கூட வாங்கி யாகி விட்டது.

திடீரென்று நாடகத்தில் "சீன்கள்" மாறுவது போன்ற சம்ப வங்கள். அன்பே உருவானவள் இவ்வுலகத்திலிருந்தே விடை பெற்றுக்கொண்டு விட்டாள். குடும்பம் முழுதும் துக்கத்தில் ஆழ்ந் தது. அம்மா துன்பத்தின் உறைவிடமாக மாறிவிட்டாள். இத்தனை துக்கத்தையும் பொறுத்துக் கொண்டு எல்லோருக்கும் 'தங்கும் நிழ லாக' இருந்த ஒரே ஆத்மா எங்கள் மாண்பு மிக்க தகப்பனார் அவர் கள் தான்.

குடும்பத்தில் ஏதோ தோஷங்கள் இருப்பதாக பேச்சு வந்தது. கொடுங்கல்லூரில் மிகவும் வயதான ஆசான்—ஜோஸ்யர், ஒருவரி டம் போய் 'அஷ்டமங்கல்ய பிரச்னம்' வைத்துப் பார்த்தார்கள். அநேக பிராயச்சித்தங்கள். சுமார் மூன்றுமாதம் வீட்டைக் காலி பண்ணிக் கொடுத்துவிட்டோம்.

'இஷ்டதேவதா சித்தி' பெற்ற தந்த்ரி ஒருவரும், துணையாகப் பல பிராம்மணர்களுமாக, அநேக யக்ஞங்கள், பூஜைகள்—வீடு பூரா வும் ஹோமதூமம் நிறைந்து, பல மாதங்கள் மணம் கமழ்ந்து நின் றது. தந்த்ரிக்கு என்ன தோன்றிற்றோ, யார் கட்டளை இட்டார்களோ, அடியேனை (நான் அப்போது இளம் பையன்) விரும்பி அழைத்து, மந்திரோபதேசம் செய்தார்கள். ஏன் அப்படிச் செய்தார்கள், பக்குவ மடையாத காலத்தில் மந்திரோபதேசம் கொடுக்கலாமா, இவை யெல்லாம் இன்றும் கேள்விக்குறிகள் தான்.

ஸ்ரீ மகாகணபதியின் மூலமந்த்ர உபதேசம் தான் எனக்குக் கிடைத்தது. எல்லாம் வல்ல இறைவனின் திருவுள்ளம் அப்படி இருந்ததுபோலும்! ஸ்ரீ விநாயகப் பெருமான் மந்திரவடிவில் அன்றே என்னை ஆட்கொண்டு விட்டார்! எங்கள் குடும்பத்தின் குலதெய்வ மாகத் தோவாளையில் எழுந்தருளுவதற்கு முன்னமேயே என் உள்ளத் தில் குடியேறிவிட்டார்!

ஜோஸ்யர் தீர்மானித்த பிராயச்சித்தங்களில் கடைசி நிறைவாக விதித்தது, எங்கள் ஊரில் கோவில்கட்டி, முன்னோர்களால் பூஜித்து வரப்பட்டு இடைக்காலத்தில் விட்டுப் போன ஸ்ரீ மகாகணபதியை பிரதிஷ்டை செய்து முறையே பூஜாதிகள் நடத்தி வரவேணும் என்பதுதான்.

யாகங்கள் முடிந்து, குடும்பம் பூராவும், சிறு குழந்தைகள் முதல் வயதானவர்கள் வரை அத்தனை பேரையும் இராமேஸ்வரம் அழைத்துச் சென்றோம். அங்கே, திலஹோமம், ஸர்ப்பசாந்தி, நவக்கிரக சாந்தி, முதலிய பல பிராயச்சித்தங்கள் நிறைவேற்றப்பட்டன. சில மைல் களுக்கு அப்பால் தனுஷ்கோடி என்னும் 'தீர்த்த கட்ட'த்துக்கு தோ ணியில் சென்றோம். யாகாதி பூஜைகளில் வைக்கப்பட்டிருந்த, தங்கம், வெள்ளிப் பிரதிமைகளெல்லாம் உரிய விதிப்படி, முறையோடு 'தீர்த்த ராஜாவிடம்' ஸமர்ப்பிக்கப்பட்டன. அன்று காலை முதல் உபவாசம் இருந்து அப்பா அவர்களும் அம்மாவும் இருவர் வஸ்த்திரங்களையும் ஒன்றாக முடிந்து 108 முறை சமுத்திர ஸ்நானம் செய்ததும், கரையில் வந்து ஒவ்வொரு தடவையும், தர்ப்பணம், பூஜை செய்தவையெல்லாம், மங்காத நினைவுகளாக இன்றும் மனதில் நிழலாடுகின்றன.

ஊர் வந்ததும் தகப்பனார் அவர்கள் முழு முச்சுடன் கோவில் கட்டுவதில் ஈடுபட்டார்கள். கர்ப்பக் கிரஹத்தின் அஸ்திவாரத்திலே, பூஜைசெய்து, தங்கம், வெள்ளி நவரத்தினங்கள் முதலியன போடு கிறோம். நிமிர்ந்து பார்த்தால் ஆகாயத்தில் ஸ்ரீ கருடாழ்வார் வட்ட மிடுகிறார். இறைவன் திருவருளை நினைந்து உள்ளம் பூரிக்கின்றது.

கோவில் கட்டிட வேலைகள் கருங்கல் பணியிலேயே செய்யப்படு கின்றன. திருவிதாங்கூர் ஸமஸ்தான தேவஸ்வம் கோவில்களுக்குத் தொண்டாற்றிவரும் பிரசித்தி பெற்ற ஸ்தபதி கையிலே ''மூர்த்தி'' உருவம் பெறுகிறார். பிரதிஷ்டை நாளும் குறித்தாகிவிட்டது. சாஸ்த் திரீய முறைப்படியும் ஆகம விதிகளை அனுஸரித்தும் பிரதிஷ்டா கிர மங்கள் திட்டப்படி நடந்தேறுகின்றன. ஸ்ரீ அழகிய கன்னி விநாயகப் பெருமான், அற்புதமாக, நிறைந்த நிறைவாக, ஆனந்தமாக எங்கள் கோவிலிலே எழுந்தருளுகிறார். எங்கள் உள்ளங்களிலும் புகுந்து கொள்கிறார்.

நாற்பத்தொன்று நாட்கள் விசேடங்களெல்லாம் திருவிழாப் போன்று நடக்கின்றன. ஸ்ரீ பித்துக்குளி முருகதாஸ் அவர்கள் பஜனை, கல்லிடைக் குறிச்சி ஸ்ரீ மொட்டை சகோதரர்களின் கச்சேரி, ஸ்ரீ சுகப் பிரம்மம் அவர்களின் பிரவசனம் இப்படியாக ஒரே கோலாகலம். ஊர் பூராவும் குழந்தை குட்டிகள் அனைவருக்கும் விருந்து. அதுபோன்று என்றும் நடந்ததில்லை என்று ஊரார் இன்றும் சொல்லிக்கொள் கிறார்கள்.

அப்பா அவர்கள் வாழ்வின் உச்சகட்டத்தை அடைந்ததுபோன்று ஆனந்த உணர்வில் மிதக்கின்றார்கள். பக்தியினால் உளம் நெகிழ்ந்து உருகுகிறார்கள். அவர்களைப் பற்றிய நினைவுகள் இன்றும் அலைமோது கின்றன.

அவர்கள் வாழ்வுதான் எத்தனை தூய்மையானது! ஜீவிதத்தில் பல கட்டங்களில் பல இக்கட்டுகள் ஏற்பட்ட காலத்திலும் கூட; ஒருவருக்காகிலும், தீங்கு நினைந்ததுமில்லை செய்ததுமில்லை. அண்டி யவர்களுக்கெல்லாம் கைம்மாறு கருதாது தியாக உணர்வோடு செய்த உதவிகள் கணக்கிலடங்கா. ''பயன் கருதா உதவியும் உள்ளம் பளிங்கெனவே அயலவர் தன்னவர் வேற்றுமை நீங்கி அவா வறுத்து உயவரும் தீவினை நீக்கியே நன்மையில் உய்த்திடுதல் நலமிகு நல்லற மாகும்'' என்ற உறுதியோடு வாழ்ந்தார்கள். ஏன்! மனிதநிலைக்குக் கீழ்ப்பட்ட ஜீவன்கள் கூட அவர்களுடைய அன்புக்குப் பாத்திரமாகி யிருக்கின்றன. தினசரி காலையும் மாலையும் வீட்டிலுள்ள பசுவிற்குத் தொண்டு செய்யாது உறங்கியதில்லை. 'பூர்த்த தர்மங்கள்' என்று சொல்வார்களே அதை அனுசரித்து ஊரிலே குடிதண்ணீர்க்குளம் வெட்ட ஏற்பாடு செய்து பூர்த்தி செய்வித்தார்கள். கடும் கோடையில் அந்தக் குளம் தான், குடி தண்ணீருக்காக இன்றும் உதவி வருகின்றது.

காலையில் ஸ்நானபானுதிகள். ஜபம். குறைந்தது ஒருமணிநேர மாவது தேவார, திருவாசகப் பாடல்களை உள்ளம் உருகி வாய் திறந்து பாடுவார்கள். இப்போது நினைத்தாலும், அவர்கள் இசைத்த பாடல்களின் ஒலி காதிலே ரீங்காரம் செய்வது போன்ற உணர்வு ஏற்படுகின்றது. பிறகு 'கடை' க்குச் செல்வார்கள் இடைவேளை களில் சமயம் வாய்க்கும்போதெல்லாம் ஸ்ரீமத் பகவத் கீதை, கைவல்ய நவநீதம், ஞானவாசிஷ்டம், திருக்குறள் போன்ற நூல்களை படிப்பது வழக்கம். இப்படியாக அவர்கள் கடைசிக்கால வாழ்க்கை அமைதி யாகவே சென்றது.

யாராவது பெரியோர்கள் வந்தால் அவர்களைப் போற்றாது விட மாட்டார்கள். என்னையும் கூட இருக்கவைத்து, பக்தி, கர்மம்,



ஸ்ரீ அழகிய கன்னி விநாயகப் பெருமானைப் பிரதிஷ்டை செய்து, டிரஸ்ட்டை ஏற்ப்படுத்திய வள்ளல் எங்கள் அன்புத் தகப்பனார் உயர்திரு. ஆ. அழகிய நம்பியா பிள்ளையவர்களும் எங்கள் அன்புத் தாயார் திருமதி அழகு பார்வதி அம்மாள் அவர்களும்.

ஞானம், அத்யாத்மிக சாதனைகள் பற்றியெல்லாம் விளக்கம் கேட்டு அமைதி பெறுவார்கள்.

''உனக்கு இந்த விஷயங்களிலெல்லாம் மிகுந்த ருசி இருக்கின்றது. இளம் வயதிலேயே சந்தர்ப்பங்களும் வாய்த்திருக்கின்றன. கிடைத்திருக்கும் வாய்ப்புகளை வீணாக்கிவிடாதே. இப்போதே தொடர்ந்து பற்றிக்கொள். நல்ல நிலையை அடைவாய்'' என்று ஒருநாள் கூறி ஆசீர்வதித்தார்கள். தெய்வீகமான அந்த ஆசியை, எனக்குத் தந்த அரும்பெரும் சொத்தாக மதித்து உள்ளம் நிறைவடைகின்றேன். கிடைத்தற்கரிய பெரும் பேறாகக் கருதிப் பேரற்றுகின்றேன். அவர்களுடைய தூய உள்ளத்தின் அடித்தளத்திலேயிருந்து பொங்கித் ததும்பி என்னை முழுக் காட்டிய ஆசீர்வாதத்தின் சக்தியைப் பின்னால் நாளதுவரை, நடந்த, நடந்துவருகின்ற சம்பவங்கள் நிரூபித்து வருகின்றன.

''வியாபாரத்திலே, நடக்கும் விற்பனைத் தொகைக்கு ரூபாய் நூறுக்கு ஓரணா (இன்றைய ஆறுபைசா) நமது ஸ்ரீ அழகிய கன்னி விநாயகப் பெருமான் கணக்கில் வரவு வைத்து விடவேண்டும். ஸ்ரீ மகா கணபதி உங்கள் வியாபாரத்தில் ஒரு பங்குதார் ஆகிவிடுகிறார். உங்களுக்கு ஒரு காலத்திலும் ஒரு குறைவும் வராது'' என்று உத்தரவிடுகிறார்கள்.

அப்படியே இன்றுவரை நடக்கின்றது. உலகத்திலே எத்தனையோ வகையான கூட்டு வியாபாரங்கள் உண்டு. ஆனால் எங்கள் பங்கு வியாபாரம் மிகவும் விசேஷமானது. காரணம் இறைவனே பங்குதாரரல்லவா! மலைபோல் வந்த இடையூறுகளெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல விலகிய எத்தனையோ சம்பவங்கள். அறிவுக் கெட்டாநிலையில் எங்களையும் எங்கள் தொழிலையும் அழகிய கன்னி விநாயகப் பெருமான் காப்பாற்றிவருகிறார். அற்புதமான தெய்வீகப் பாதுகாப்பிலே வாழ்ந்து வருகின்றது எங்கள் குடும்பம்.

அன்புத் தந்தையாகவும், குருவாகவும் போற்றி வளர்த்த வள்ளலாகவும் விளங்கி, மாசுமறுவற்ற புனிதவாழ்க்கை வாழ்ந்து எங்களுக்கு வழிகாட்டிய அந்த மனிததெய்வத்தை நினைந்து நினைந்து உருகுகின்றேன். மனம் குவிந்து பலமுறை திரும்பத் திரும்ப அஞ்சலி செய்கின்றேன்.

காலையில் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் ஒலி வீடு பூராவும் நிறைகின்றது. மனைவியும் மக்களும் நாமசப்தம் கேட்டுத்தான் விழித்துக்கொள்கிறார்கள். பல வருடங்களாக இந்த பழக்கம்.

இடம் தர்மக்ஷேத்திரமான குருக்ஷேத்திரம்; கேட்பவர் தர்மத்திலேயே பற்றுள்ள யுதிஷ்ட்டிரர்; அருளிச் செய்பவர் ஞானதிகாரரான ஸ்ரீ பீஷ்மாச் சாரியார். கூடியிருப்பவர்கள் தவத்தால் மிக்க மஹரிஷிகள்; எல்லாவற்றுக்கும் மேலாக ஸஹஸ்ரநாமத்தால் போற்றப்படும் பேராயிரமுடையவனாக ஸ்ரீ கிருஷ்ணன் பீஷ்மர் சொல்வதைத் தானும் கூட இருந்து அவர் சொல்வது முற்றிலும் உண்மை என்று மேலெழுத்திட்டுக் கொடுப்பது போலக் கேட்டுக்கொண்டிருக்கிறான். ஆக ஸஹஸ்ரநாமத்தில் சொல்வதெல்லாம் ஸத்யம் என்பதற்கு ஸர்வ ஸாக்ஷியான ஸ்ரீ கிருஷ்ணபகவானே சாக்ஷி

'ஸ்ரீ யுதிஷ்ட்டிரர் கேள்வி—தங்கள் அபிப்பிராயத்தில் எல்லாத் தர்மங்களிலும் சிறந்த தர்மம் எது?

ஸ்ரீ பீஷ்மாச்சாரியரின் பதில்!

புண்டரீகாக்ஷனான ஸ்ரீ மந்நாராயணனை மனிதன்
எப்பொழுதும் பக்தியுடன் ஸ்தோத்திரங்களால்
அர்ச்சனை புரிவதென்பதே எல்லாத் தர்மங்களிலும்
மிகச் சிறந்த தர்மம் என்பது என் அபிப்பிராயம்
....................ஜகந்நாதனான ஸ்ரீ விஷ்ணுவின்
ஆயிரம் நாமங்களைக் கேள்..............என்று ஸஹஸ்ர
நாமத்தைச் சொல்லித்துதிக்கின்றார்.

ஸஹஸ்ரநாமத்தின் அபரிமிதமான, வைபவத்தாலும் அப்பா அவர்களின் ஆசிர்வாதத்தாலும் 'ஸ்ரீ காஞ்சி காமகோடிப் புதுப் பெரியவாள்' அடியேனுடைய 'சாரதாகுடிலுக்கு' விஜயம் செய்கிறார்கள். என்னுடையவும் குடும்பத்தாருடையவும் பணிவன்புடன் கூடிய நமஸ்காரங்களை ஏற்றுகொண்டு, 'பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து' அருள் புரிகின்றார்கள்.

புனிதமான ஸ்ரீ ஜனார்த்தனம் க்ஷேத்திரத்தில் வைத்து நானும் உரையாசிரியர் பிரம்மஸ்ரீ குருஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களுமாக ஸ்ரீ புதுப்பெரியவாளை தரிசனம் செய்கிறோம். தஞ்சாவூர் ஜில்லாவில் பரம்பரையாகப் புகழ்பெற்ற குடும்பத்தில் ஸ்தபதி ஒருவரால், நாள் நக்ஷத்திரம், திதி, வேர் ஓடும் திக்கு முதலியன கவனித்து சாபநிவிருத்தி, பூஜை, தானம் சாந்தி, செய்து எடுக்கப்பட்ட வெள்ளெருக்கு வேரில் நிர்ம்மிக்கப்பட்ட பிள்ளையார் விக்கிரகத்தை ஸ்ரீ புதுப் பெரியவாளிடம் சமர்ப்பிக்கின்றேன். கருணை கூர்ந்து தொட்டு அனுக்ரகித்து இமைகள் மூடித்தியானம் செய்கிறார்கள். உணர்ச்சிப் பெருக்கால் கண்ணீர் மல்கிசிரம் தாழ்த்தி வணங்கி நிற்கின்றேன். மந்தஹாஸத்துடன் அருளாசியோடு ஸ்ரீ பிள்ளையாரைத் தருகிறார்கள். ஊனுருகி



அன்னை காமாக்ஷியாக அருள் புரிந்துவரும் ஸ்ரீ காஞ்சிபுதுப் பெரியவாள் தொட்டு அனுக்ரகித்து தந்த வெள்ளெருக்கு வேர்ப் பிள்ளையாரின் திருவுருவம்.

உள்ளம் குடிகொண்ட ஓங்காரத்துட்பொருளே
தெள்ளத் தெளிந்த சிவவடிவே-வெள்ளை
எருக்கு விநாயகனே என்றும் உனைப்போற்றி
இருக்க வரமருள்வாயே.

உள்ளம் உருகிப் பெற்றுக் கொள்கின்றேன். முன்செய்த புண்ணிய வசத்தாலும், அப்பா அவர்களின் நிறைந்த ஆசிர்வாத பலத்தாலும் ஸ்ரீ வெள்ளெருக்குப் பிள்ளையார் வீட்டிலே அமர்ந்து அருளாட்சி செலுத்தி வருகிறார். பாதம் தொட்டு வணங்கி மட்டிலுமே வீட்டை விட்டு வெளியே செல்கின்றேன். அனுக்ரகம் தொடர்ந்து நின்று அருள் புரிந்து வருகின்றது. இச்சிறியேனின் அனுபவபூர்வமான உண்மை இது.

புதிதாகத் தொடங்கிய தொழிற்சாலை விஷயமாக 1150ம் ஆண்டு மாசிமாதம் திடீரென சென்னை செல்கிறேன். பௌர்ணமிக்கு முதல் நாள் வீட்டிலே வழக்கம்போல் நடக்கும் 'பகவதி ஸேவை' ஞாபகத்துக்கு வருகின்றது. கலவை சென்று ஸ்ரீ காஞ்சிப் பெரியவாளை தரிசனம் பண்ணுவதையே பூஜையாகக் கொள்ள நினைத்தேன். மாசி மகம் பௌர்ணமியன்று நானும் நண்பர்களுமாகக் கலவை சென்றோம். மாலை மணி சுமார் ஆறு. ஸ்ரீ பெரியவாள் பூஜைக்குச் செல்வதாகவும் இரண்டு மணி நேரம் கழிந்த பிறகுதான் மறுபடியும் பார்க்க முடியும் என்றார்கள். கூடவே இருந்து கைங்கர்யம் செய்யும் பாக்யம் பெற்ற அன்பர் ஸ்ரீ கண்டன் அவர்களிடம் ஸ்ரீ பெரியவாளின் பூஜையைத் தரிசனம் செய்ய உதவுமாறு வேண்டினோம்.

மடத்திற்குப் பின்னால் தாழ்வாரத்தில் பூஜை நடக்கின்றது. நிலவொளி சிதறும் முற்றத்தில் ஒதுக்குப்புறமாக உட்கார்ந்து கொள்கிறோம். தவமே உருவாகப் பெரியவர்கள் வெண்பட்டு மேலாடையாக அணிந்து பூர்ண சந்திரனை தரிசனம் செய்து தியானத்தில் மூழ்குகிறார்கள். எங்கும் ஒரே அமைதி! மனதினுள்ளே மந்திர ஜபம் தொடங்குகின்றது. அப்பப்பா? அடைந்த அனுபவத்தை வார்த்தைகளால் விவரிக்க இயலாது. அற்புதமான அனுபூதியில், வாக்கினுக்கெட்டா சாந்தத்தில் ஆழ்ந்து, தன்னையே மறந்து லயிக்கின்றோம்.

ஊர்திரும்பிவந்தபோது, விவரம் தெரிந்து ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினேன். நாங்கள் தரிசனம் செய்த அதே மாசி மகம் பௌர்ணமியன்றுதான் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் எண்பதாண்டுகளைப் பூர்த்தி செய்து சஹஸ்ர சந்திர தரிசனம் கண்ட பொன்னாள். எதிர்பாராத அதிருஷ்டத்தை நினைத்து வியந்தேன். தகுதியில்லாச் சிறியேனுக்கு இப்புனிதமான வாய்ப்பு எவ்வாறு கிடைத்தது! ஸ்ரீ மகாகணபதியின் திருவருளும் அப்பா அவர்களின் ஆசீர்வாத பலமும் தான்காரணம் என்று பரிபூர்ணமாக நம்புகிறேன்.

ஸ்ரீ சாஸ்திரிகளோடு கூடச்சென்ற புண்ணிய யாத்திரையின் விளைவாக, ''ஸ்ரீ மகாகணபதி ஸ்தோத்திரங்கள்'' என்ற அபூர்வமான புத்தகம் டிரஸ்ட்டின் சார்பில் முதல் வெளியீடாக வெளிவருகின்றது.

காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரையில், விரும்பிய பக்தர்களுக்கெல்லாம் அன்பளிப்பாக அனுப்புகிறோம். அத்தனை அன்பர்களும் நன்றியோடு ஆசி கூறுகிறார்கள். பிறகு ஸ்ரீ கிருபானந்தவாரியார் அவர்களின் "நாளாயணி" வெளிவந்தது. சமீபத்தில் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் விரும்பியபடி, அவர்களுடைய அருளாசியோடு "ஆசாரமுறை" வெளியிட்டோம்.

இதோ! எம்பெருமானின் 'ஸகஸ்ர நாமம்', கணேசப்ரியை என்ற அற்புதமான உரையோடு வெளிவருகின்றது. பக்தர்கள் விருப்பத்துடன் ஏற்றுக்கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. மேலும் நம் முன்னோர்கள் கருணையினால் உந்தப்பட்டு, சைதன்ய சக்தியோடு மந்திரங்களாலும், பாடல்களாலும் கட்டிவைத்திருக்கும் கோவில்களை பக்தர்களின் காட்சிக்கும், கவனத்திற்கும் கொண்டு வரவேண்டும் என்பதே என் அவா. அவ்வாறு எளிய தொண்டு புரிந்து வாழ்வில் நிறைவு பெற அருள வேண்டும் என்று ஸ்ரீ அழகிய கன்னி விநாயகப் பெருமானை பிரார்த்திக்கின்றேன்.

அடியேனுடைய சில நினைவுகளை அன்பர்கள் முன்வைத்தேன். என் அன்புத் தந்தையாருக்கும், ஏனையப் பெரியோருக்கும் செலுத்தும் நன்றிக் கடனாகவே நினைத்து எழுதியிருக்கின்றேன். குற்றமிருப்பின் பொறுத்தருள்க

ஞானநூல்தனை யோதல், ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல்தான் கேட்டல் நன்று(ய்)
ஈனமிலாப் பொருள்தனை சிந்தித்தல் ஐந்தும்
இறைவன் அடைவிக்கும் எழில் ஞானபூசை

—ஸ்ரீ அருணந்தி சிவாச்சாரியார்.

திருவனந்தபுரம்
20-3-'1976

அன்பருக்கெல்லாம் அடியேன்
அ. சுப்ரமண்யம்

# மஹா கணபதி ஸஹஸ்ரநாமம்
# கணேசப்ரியை—தமிழுரை
# உரை ஆசிரியரின் முன்னுரை

वल्लभावल्लभं शिष्टसुलभं दुष्टदुर्लभम् ।
कलभाननम्, आनन्दकन्दं वन्दामहे महः ॥

வல்லபா தேவியின் மணாளன்; நல்லோர்களால் எளிதில் அடையப் படுகின்றவன்; தீயவர்களால் எளிதில் அணுகமுடியாதவன்; பேரானந்தத்திற்கு இருப்பிடமானவன்; ஜ்யோதிர் வடிவமானவன்; அத்தகைய யானை முகத்தோனை வணங்குகின்றேன்.

काञ्चीपुरीलसत्कम्पाकूलैकाम्रेश्वरप्रियाम् ।
कांक्षितार्थप्रदां वन्दे कामाक्षीं कुलदेवताम् ॥

காஞ்சி மாநகரில் கம்பை என்ற ஆற்றின் கரையில் புகழ்பெற்ற ஒரு மாமரத்தடியில் வீற்றிருக்கும் ஈசனுக்கு இஷ்டமானவளும், அடியார்களுக்கு விரும்பியவற்றை தந்தருளுபவளும், என் குல தெய்வமுமான காமாக்ஷீ தேவியை அடிபணிகின்றேன்.

धर्माम्बिकावैद्यनाथौ पितरौ दिव्यतां गतौ ।
महोपकारिणौ मह्यं सदाहं भावये हृदि ॥

எனக்கு இணையற்ற பேருதவி புரிந்தவர்களும், தேவத்தன்மை அடைந்தவர்களும், தர்மாம்பாள், வைத்யநாதர் என்ற பெயர் பூண்டவர்களுமான என் தாய்தந்தையர்களை எப்பொழுதும் எனது உள்ளத்தில் போற்றி வழிபடுகிறேன்.

"शास्त्ररत्नाकरान्" श्रीमद्वैद्यनाथाख्यशास्त्रिणः ।
दिव्यानस्मद्गुरून्भक्त्या सन्ततं चिन्तयाम्यहम् ॥

"சாஸ்த்ர ரத்னாகரம்" என்ற விருதைப் பெற்றவரும், தேவத்தன்மை அடைந்தவரும், (வேப்பத்தூர்) பிரும்மஸ்ரீ வைத்யநாத சாஸ்திரி

கள் என்று அழைக்கப்படுகின்ற வருமான, எனக்கு ஆத்மவித்யையை உபதேசித்த, குருநாதரை எப்பொழுதும் பத்தியுடன் எனது உள்ளத்தில் பாவனை செய்கின்றேன்.

सर्वतन्त्रस्वतन्त्रैः श्रीभास्कराचार्यसूरिभि : ।
महागणपत नामसाहस्र व्याकृतं महत् ।

கடல்போன்று பரந்து கிடக்கும் சாஸ்திரங்களின் கரையைக் கண்டவரும், பாஸ்கராசார்யர் என்று புகழ்பெற்றவருமான பேரறிஞரால் மஹிமை வாய்ந்த மஹாகணபதியின் ஆயிரம் திருநாமங்களின் பொருள் நன்கு விளக்கப்பட்டுள்ளது.

देवभाषामय पद्यरूप खद्योतनामकम् ।
व्याख्यानं तस्य मार्गस्थ्य द्राविड्या व्याकृत मया ॥

வட மொழியில் செய்யுள் வடிவத்தில் பாஸ்கரராயரால் இயற்றப்பட்ட "கத்யோதம்" எனப்படும் உரையினைத்தழுவி தமிழ் மொழியில் நான் ஆயிரம் திருநாமங்களுக்கும் உரை செய்துள்ளேன்.

अजानतां देवभाषां द्राविडीमेव जानताम् ।
भक्तानामर्थबोधाय द्राविडया विवृत मया ॥

வடமொழியை அறியாதவர்களும், தென்மொழியை மட்டும் அறிந்தவர்களுமான மஹாகணபதியின் பக்தர்களுக்கும் பொருளை எளிதில் விளக்கிக் கொடுப்பதைப் பயனாகக் கருதி நான் தமிழில் உரை செய்திருக்கின்றேன்.

मदीयया व्याख्यया गणेशप्रियया ऽनया ।
महागणपतिः प्रीतः प्रसन्नो वरदा ऽस्तु मे ॥

என்னால் இயற்றப்பட்டதும் கணேசப்ரியை என்று பெயரிடப்பட்டதுமான இந்த என்னுடைய தமிழ் உரையை ஸ்ரீ மஹாகணபதிக் கடவுள் ஏற்றுக்கொண்டு ஸந்தோஷமடைந்து என்னை அனுக்ரஹிக்கட்டும்; என்னுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்துவைக்கட்டும்.

# மஹாகணபதி ஸஹஸ்ரநாமம்.

அவதாரிகை:-

"புராணங்களின் பெருமை"

'பரம்பொருளானது ஆனந்தம், அறிவு, இருப்பு இவைகளே வடிவமாகக் கொண்டது; காலம், தேசம், வஸ்து இவைகளால் அளவிடப் படாதது; வாக்கிற்க்கும், மனதிற்கும் எட்டாதது; வேறு உதவி இன்றித் தானே துலங்கிக் கொண்டிருப்பது; ஸம்ஸாரத்தினின்றும் விடுதலை பெற்ற மஹான்களால் அடையத்தகுந்தது என்று வேதங்கள் பறைசாற்றுகின்றன. ஏழை ஒருவன், பாடுபட்டுத் தேடியடைந்த தங்க மாலையைத் தன் கழுத்திலேயே அணிந்திருப்பினும், அறியாமையால், அந்த மாலையை இழந்தவனுக வருத்தமுற்றிருக்கும்போது, வெறொருவன், கழுத்திலிருக்கும் மாலையை நினைவு படுத்தியவுடன் மீண்டும் அந்த மாலையை அடைந்த ஸந்தோஷத்தை அடைகிறுன். அங்கனமே, தெளிந்த உள்ளம் படைத்த மஹான்கள், ஸத்குருவின் அறிவுரையால் வேறுபாடற்ற நிர்விகல்ப ஞானத்தைப் பெற்று அறியாமையை அகற்றி தங்களுடைய ஆனந்த·ஸ்வரூபத்தை மீண்டும் உணர்ந்து (பெற்று) பேரானந்தத்தை அடைகின்றனர். இதையே மோக்ஷமெனப் பெரியோர்கள் புகழ்கின்றனர்.

பரம்பொருளைப் பற்றிய நிர்விகல்பக ஞானமானது தெளிந்த உள்ளத்திலேயே தோன்றுவதாகும். எனவே, உள்ளம் தெளிவதற்கென்றே வேதங்களின் முற்பகுதியில் (கர்மகாண்டத்தில்) மாந்தர்களால் அனுஷ்டிக்கப்படவேண்டிய எண்ணிறந்த தர்மங்கள் உபதேசிக்கப்பட்டுள்ளன. அத்தகைய தர்மங்களை முறைப்படி செய்து முடித்த மனிதர்களின் உள்ளங்கள் தெளிவைப் பெற்று விடுகின்றன. எனினும், அவ்வுள்ளங்களில் 'நிர்விகல்பக ஞானம்' எளிதில் ஏற்படுவதில்லை. ஆகவே அத்தகைய அறிவை எளிதில் ஏற்படும்படி செய்வதற்காகவே, பரம்பொருளுக்குப் பலவிதமான ரூபம், குணம் இவைகளைக் கற்பிதது, வேதங்களின் பிற்பகுதியில் ஞானகாண்டத்தில் பலவிதமான உபாஸனைகள் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. உபநிஷத் காண்டத்தைப் பின்பற்றியே உபாஸனைக்குத் தேவைப்படுகின்ற எண்ணிறந்த மூர்த்திகளை (உருவங்களை) உபதேசிக்கவே 18 புராணங்களும், 18 உப புராணங்களும் தோன்றியிருக்கின்றன.

"புராணங்களுள் ஏற்றத்தாழ்வில்லை"

அடியார்களை ஆட்கொள்வதற்காகவே, உபாஸனை செய்யும்

ஜீவர்களின் முற்பிறவியில் ஏற்பட்ட வாஸனையிலிருந்து பிறந்த விருப்பத்திற்கேற்ப பரம்பொருளுக்குப் பலவிதமான உருவங்களை உபநிஷத்காண்டம் வருணித்திருக்கின்றது. அறநூல்களும், புராணங்களும், உபபுராணங்களும் ஸூர்யன், தேவி, திருமால், கணபதி, ஷண்முகன், பரமசிவன் என்ற மூர்த்திகளையும், இவைகளின் உட்பிரிவாக எண்ணிறந்த மூர்த்திகளையும், மாந்தர்கள் வழிபட்டு மேன்மையடைய மிக்கத் தெளிவான முறைகளை அறிவிக்கின்றன. ஒவ்வொரு மூர்த்தியும் பரம்பொருளின் வடிவமே; இதில் ஐயமில்லை. சிவபெருமானின் பெருமையை விளக்க வந்த புராணங்கள், சிவனுடைய மேன்மையை நிகரற்றதாகக் கூறுவதற்கென்றே, மற்ற மூர்த்திகளைத் தாழ்த்திப் பேசுகின்றன. அவ்விதமே, மற்ற தெய்வங்களின் பெருமையைக் கூறும் புராணங்களும் அந்தந்த தெய்வத்தின் பெருமையை உவமையற்றதாக அறிவிப்பதற்கென்றே மற்ற தெய்வங்களை இகழ்ந்து கூறுகின்றன. ஒரு பக்தன் எந்த மூர்த்தியைத் தன் விருப்பப்படி பஜிக்கின்ருனே அவனுக்கு அந்த மூர்த்தியில் பக்தியை திடமானதாகச் செய்வதற்காகவே வேறு மூர்த்திகளிலிருந்து அந்த மூர்த்திக்கு மேன்மை கூறப்பட்டிருக்கிறது. இக்கருத்தைக் கண்ணன் பகவத் கீதையில் ''எவனொருவன் என்னுடைய எந்தெந்த மூர்த்தியை வழிபடுகின்ருனே அவனவனுக்கு அந்தந்த மூர்த்தியிலேயே திடமான பக்தியை ஏற்படுத்தி என்னைப் பலவிதமான மூர்த்தி பக்தியின் வழியாக பூஜிக்கும்படி செய்து அவர்களுக்கு விரும்பிய பயனை அளிக்கின்றேன்'' என்று விளக்கமாகக் கூறியிருக்கின்ருர். ஆகையால், 'சிவபுராணத்தைக் காட்டிலும் விஷ்ணு புராணம் மேலானது', 'விஷ்ணு புராணத்தைக் காட்டிலும் சிவபுராணம் உயர்ந்தது' என்பது போன்ற கூற்றுகள் பொருளற்றவைகளாகும். ''மறைகளும், அறநூல்களும் கண்களுக்கு ஒப்பானவைகள். புராணம் ஹ்ருதயத்திற்கு (உள்ளத்திற்கு) இணையானது. மறைகளையும் அறநூல்களையும் அறியாதவன் குருடனுவான். புராணத்தை உணராதவன் உள்ளத்தையே இழுந்தவனுகின்ருன்'' என்று பக்தி மீமாம்ஸா சாஸ்திரத்தில் மறைகளைக் காட்டிலும் புராணங்களுக்கு மேன்மை கூறப்பட்டிருப்பது கவனத்திற்குரியதாகும்.

## ''கணபதியின் வழிபாடு''

மூர்த்தி வழிபாடுகளுள், முழுமுதற்கடவுளான மஹாகணபதியின் வழிபாடு மிகவும் தொன்மையானதாகும். ருக், யஜுஸ், ஸாம, அதர்வம் எனப்படும் நான்கு வேதங்களிலும், அநேகம் சொற்றொடர்கள் (ஸூக்தங்கள்) கணேசரின் மஹிமையை வருணிக்கின்றன

அவ்விதமே

(i) கணபத்யதர்வசீர்ஷோபநிஷத் (गणपत्यथर्वशीर्षोपनिषत्)

(ii) ஹேரம்போபநிஷத் (हेरम्बोपनिषत्)

(iii) கணேச பூர்வ தாபினி (गणेशपूर्वतापिनी)

(iv) கணேசோத்தர தாபினி (गणेशोत्तरतापिनी)

(v) வல்லபேசோபநிஷத் (वल्लभेशोपनिषत्)

என்று 5 உபநிஷத்துக்கள் கணேசரின் உபாஸன முறையை விளக்குகின்றன. கணேச புராணம், முத்கல புராணம் இவைகளில் முழுமையாகவும், ஸ்காந்த மஹாபுராணம், ஸ்காந்த உபபுராணம், வாமன புராணம், பிரும்மாண்ட புராணம், காருட புராணம்,, பிரும்ம புராணம், விஷ்ணு தர்மோத்தரம், காலிகா புராணம், மத்ஸ்ய புராணம், அக்னி புராணம், வராஹ மஹாபுராணம், சிவ புராணம், பிரம்மவைவர்த்தம். பவிஷ்ய புராணம்; லிங்க புராணம், பாத்ம மஹாபுராணம் இவைகளில் குறிப்பிட்ட பாகங்க,ளிலும், குமார ஸம்ஹிதா தந்திரம், உட்டாமரேச தந்திரம் என்ற தந்திர நூல்களிலும், கணேசரைப் பூஜை செய்வதற்கு அவச்யமான மந்திரங்கள், யந்திரங்கள், பரிவார தேவதைகள், பலவிதமான அவதாரங்களில் ஏற்பட்ட மூர்த்தி பேதங்கள், ஜபஹோம தர்ப்பணங்கள், அவைகளுக்கான பலவிதமான திரவயங்கள் (பொருட்கள்), பாராயணம் செய்வதற்கான எண்ணிறந்த துதிநூல்கள், ஆயிரக்கணக்கான திருநாமாக்கள், கணேசரை வழிபட்டு நலம் பெற்ற அடியார்களின் வரலாறுகள் ஆகியவைகள் அழகிய முறையில் அறிவிக்கப்பட்டிருக்கின்றன.

"மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்தின் ஏற்றம்"

மூர்த்தி வழிபாட்டில் அந்தந்த மூர்த்தியின் சிறப்பைப் புகட்டுகின்ற திருநாமங்களின் ஆயிரத்தின் தொகுப்பை (ஸஹஸர நாமத்தை) பக்தியுடனும் சிரத்தையுடனும் படிப்பது (பாராயணம் செய்வது) மிகவும் முக்கியமான கார்யமாகும். "ஸஹஸ்ரநாமத்தால் துதிக்க வேண்டும்; அவ்விதம் நாமபாராயணம் செய்வதனுல் அந்த தேவதை ஸந்தோஷமடைகிறது." என்று सहस्रनामसंस्तुत्यः "ஸஹஸ்ரநாம ஸம்ஸ் துத்ய:" नामपारायणप्रीता "நாம பாராண ப்ரீதா" என்ற கணேச ஸஹஸ்ரநாமத்திலும், லலிதா ஸஹஸ்ரநாமத்திலுமுள்ள நாமாக்கள் தெரிவிக்கின்யன. விஷ்ணு ஸஹஸ்ரநாமம், சிவ ஸஹஸ்ரநாமம், லலிதாதேவீஸஹஸ்ரநாமம், ஸுப்ரம்ஹண்ய ஸஹஸ்ரநாமம், ஸூர்ய ஸஹஸ்ர

நாமம் முதலிய ஸஹஸ்ரநாமாக்கள் அனைத்துமே சிறப்பு வாய்ந்தவைகளாகும். கணேச ஸஹஸ்ரநாமம் அவைகளுள் அதிகமாக சிறப்பு வாய்ந்ததென்று கூறுவது மிகையாகாது. ஒரு இலக்கியத்தில் போன்று, கணேச ஸஹஸ்ரநாமத்தில் கணேசரின் பெருமையானது முறைப்படுத்தி அழகிய நாமாக்களால் கூறப்பட்டிருக்கிறது.

கணேசரை வழிபட்டு மேன்மை அடைந்த குருநாதர்களின் நாமாக்கள், கணேசர் பலவிதமான உருவங்களை அடைந்து தீயவர்களை நாசம் செய்து நல்லவர்களைக் காப்பாற்றியது, உலக வடிவமான வீராட்ரூபம், சிந்தாமணித் தீவு, கற்பகச் சோலை, ரத்ன ஸிம்ஹாஸனம், தீவ்ரா முதலிய ஒன்பது பீட சக்திகளுடனும், ஐம்பது மாத்ருகாக்ஷரங்களுடனும் கூடிய எட்டிதழ் தாமரை, அதன் நடுவே ஸூர்யன், சந்திரன், அக்னி ஆகிய மண்டலங்களின்மேல், மாதளம்பழம், கதை முதலிய பத்து பொருட்களைப் பத்து கைகளில் தாங்கி நிற்கும் வர-மஹாகணபதி ஸ்வரூபம், கணபதிக்கு நான்கு திக்குகளிலும், மனைவியுடன் விஷ்ணு, சிவன், மன்மதன், யக்ஞவராஹமூர்த்தி, ஆமோதன் முதலான ஆறு கணபதிகள், சங்கநிதி, பத்மநிதி, ஹ்ருதயம் முதலான ஆறு அங்க தேவதைகள், எட்டு பைரவர்கள், லக்ஷ்மியுடன் எட்டு மாத்ருக்கள், இந்திரன் முதலான எட்டு திக்பாலர்கள், அவர்களின் ஆயுதங்கள், ஜயை முதலிய ஒன்பது பிராண சக்திகள், ஞானேச்சாக்ருதி ரூபமான பிரம்மசக்தி ஆகிய பரிவார தேவதைகள், இவைகளுக்கு இருப்பிடமான கரும்புக் கடல், இவைகளும் அழகிய திருநாமாக்களால் விளக்கப்படுகின்றன. பிறகு, அகாரம் முதல் க்ஷகாரம் வரை எழுத்துக்களில் ஆரம்பிக்கப்படும் நாமாக்கள் கணேசரின் மஹிமையைக் கூறுகின்றன. பின்னர், நொடிப் பொழுது முதல் பிரளய காலம் வரையுள்ள காலமனைத்தும், ஸூர்யன் முதலிய கிரஹங்கள் யாவும், மண் முதலிய பூதங்கள் ஐந்தும், பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலிய தேவர்களும், யக்ஷர், ஸித்தர், கின்னரர், மனிதர் இவர்களும், கடல் முதலிய நீர்த் தேக்கங்களும், வேதம், புராணம், இதிஹாஸம், ஆகமம், தந்திரம், காவ்யம் முதலானவையும், ஜைன பௌத்த மத நூல்களும், ஸம்ஸாரம், மோக்ஷம், அறிவு, ஆனந்தம் இவைகளும் எல்லாம் கணேச ஸ்வரூபமென்று பல நாமாக்கள் நிரூபிக்கின்றன. ஒன்று என்ற எண்ணிக்கை முதல் முப்பத்து மூன்று கோடி என்ற எண்ணிக்கை வரை உள்ள எண்களை முன்னிட்டு நாமாக்கள் பல கணேசரின் மேன்மையை விவரிக்கின்றன.

நிற்க, கணேச ஸஹஸ்ரநாமத்தின் பயனைக் கூறுமிடத்தில் "இந்த ஸஹஸ்ர நாமத்தைப் பாராயணம் செய்பவனிடத்தில், எனது மூல

மந்திரத்தை ஜபம் செய்பவனைக் காட்டிலும் அதிகமான ஸந்தோஷம் எனக்கு ஏற்படுகிறது. இந்த ஸஹஸ்ர நாமத்தை ஜபம் செய்வது, படிப்பது, படிக்கும்படி செய்வது, கேட்பது, கேட்கும்படி தூண்டுவது, உரை செய்வது, சர்ச்சை செய்வது, உள்ளத்தில் ஸ்மரிப்பது, ஆராய்ச்சி செய்வது, புகழ்ந்து கூறுவது இதைப் புத்தகத்தில் எழுதி அதை பூஜிப்பது இவை யாவும், அவ்விதம் செய்பவர்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் எல்லாவிதமான செல்வச் சிறப்புகளையும் அளிப்பதாகும் என்று கணேசப் பெருமானே உரைத்திருக்கிஞர். ஆகவே கணேச ஸஹஸ்ர நாமம் நிகரற்றதாகும்.

கணேச ஸ்ஹஸ்ரநாமம் நான்கு விதமாகக் காணப்படுகின்றது. பத்ம புராணத்திலும், கணேச புராணத்திலும், மாறுபாடில்லாமல், ஒரேவிதமான ஸஹஸ்ர நாமம் ஒன்று வருணிக்கப் பட்டிருக்கிறது. இந்த ஸஹஸ்ரநாமம், பலமாருதல்களுடன் அகஸ்த்ய ஸம்ஹிதையில் ஒன்று கூறப்பட்டிருக்கிறது. தவிர, தந்திரங்களில், "க" என்ற எழுத்தை முதலெழுத்தாகக் கொண்ட ஆயிரம் நாமாக்கள் அடங்கிய 'ககார ஸஹஸ்ர நாமம்' ஒன்றும், உச்சிஷ்ட கணபதியின் பெருமையைக் கூறும் ஸ்ஹஸ்ர நாமம் ஒன்றும், இவ்விதம் வெவ்வேருன இரண்டு ஸஹஸ்ர நாமாக்களும் கூறப்பட்டிருக்கின்றன. இவ்விதம் நான்கு ஸஹஸ்ரநாமாக்கள் இருக்கின்றன.

இதிஹாஸ புராணங்களிலும், மந்திர தந்திர நூல்களிலும் பொதிந்து கிடக்கும் ரஹஸ்யார்த்தங்களை விளக்கிப் பல நூல்களைப் படைத்தவரும், லலிதா ஸஹஸ்ர நாமத்திற்கு ஒப்புயர்வற்ற அழகிய உரையை இயற்றியவரும், ஸ்ரீ வித்யோபாஸகருமான ஸ்ரீ பாஸ்கர ராய தீக்ஷிதர் அவர்கள், "அனேகம் கணேச ஸ்ஹஸ்ர நாமாக்களுள் கணேச புராணத்திலுள்ள ஸஹஸ்ரநாமமே ஸம்பிரதாயமறிந்த கணேச உபாஸகர்களால் ஆதரிக்கப்படுவதாகும். ஆகையால், அதற்கு உரை செய்யப் போகின்றேன். என்று அறிவித்து, எண்ணூறு சுலோகங்களால் வடமொழியில் "खद्योतम्" கத்யோதம்" என்ற பெயரில், இருநூற்றுப் பதினைந்து சுலோகங்கள் கொண்ட கணேச ஸஹஸ்ர நாமத்திற்கு அழகிய உரையை எழுதியுள்ளார்.

ஸ்ரீ பாஸ்கரராய தீக்ஷிதர் அருளிய 'கத்யோதம்' எனப்படும் கணேச ஸஹஸ்ர நாமத்தின் வடமொழி உரையைப் பின்பற்றி, கணேச ஸஹஸ்ர நாமத்தின் பொருள் 'கணேச ப்ரியை' எனப்பெயர் பூண்ட இந்தத் தமிழ் உரையால் விளக்கப் படுகிறது.

## மஹாகணபதி ஸஹஸ்ர நாமம்:-

கணேச புராணத்தில் உபாஸனு கண்டத்தில் நாற்பத்தாருவது அத்யா த்தில் (215 சுலோகங்கள் அடங்கியது) பரமசிவனுக்கு மஹா கணபதியால் உபதேசிக்கப்பட்ட கணேச ஸஹஸ்ர நாமத்தை வ்யாஸ முனிவருக்கு பிரம்ம தேவன் உபதேசித்ததாக வருணிக்கப்பட்டிருக்கிறது.

கணேச ஸஹஸ்ர நாமத்திற்கு முந்திய நாற்பத்தைந்து அத்யாயங்களில் உறைக்கப்பட்டுள்ள பொருளின் சுருக்கம் பின்வருமாறு:-

முனிவர்கள் "ஸுதமுனிவரே! தங்களிடமிருந்து பதினெட்டு மஹாபுராணங்களையும் விரிவாகக் கேட்டு அதன் பொருளை உணர்ந்தோம். தாங்கள் மற்றுமுள்ள உபபுராணங்களையும் எங்களுக்குக் கூறி தெளிவுபட அதன் பொருளையும் விளக்குங்கள்" என்று ஸுத முனிவருடன் கேட்டுக் கொள்கின்றனர்.

ஸுதமுனிவரும், "முனிவர்களே! மஹாபுராணங்களைப் போன்று காணேசம், நாரதீயம், நாரஸிம்ஹம் என்று தொடங்கிய பதினெட்டு உபபுராணங்கள் இருக்கின்றன. அவைகளுள் கணேசோபபுராணம் சிறப்பு வாய்ந்ததாகும். பெருமை வாய்ந்த கணேச புராணம் முதலில் பிரும்மதேவனுல வ்யாஸ முனிவருக்கு உபதேசிக்கப் பட்டது. அதன் பிறகு வ்யாஸமுனிவரால் ப்ருகு முனிவருக்கு உரைக்கப்பட்டது. பின்னர். ப்ருகு முனிவரால் ஸோமகாந்தன் எனப்படும் வேந்தனுக்கு வருணிக்கப்பட்டது." என கணேச புராணத்தைக் கூறுவதற்கு ஆரம்பித்து, முப்பத்து ஐந்து அத்யாயங்களால், கணேசரின் பெருமையை விளக்கும் கதைகளைக் கூறி, முடித்தார். பிறகு கணேச ஸஹஸ்ர நாமத்தின் தோற்றத்திற்கு மூல காரணமாக அமைந்துள்ள கிருத்ஸ மத முனிவருடையவும், அவருடைய புதல்வன் திருபுரராஸுனுடையவும் வரலாற்றை முனிவர்களுக்கு முப்பத்து ஆருவது அத்யாயம் முதல் நாற்பத்து ஐந்தாவது அத்யாயம் முடிய பத்து அத்யாயங்களால் எடுத்துரைத்துள்ளார்.

கிருத்ஸமத முனிவருடைய தும்மலிலிருந்து திருபுரன் தோன்றினுன். தந்தை உபதேசித்த கணேச மந்திரத்தை முறைப்படி ஜபித்துக் கடுந்தவம் புரிந்து திருபுரன் கணேசரின் அருளைப் பெற்ருன். மூன்று உலகங்களையும் வென்று வெற்றிக் கொடியை நாட்டினுன். பரமசிவனையும் போரில் வென்ருன். நாரத முனிவர், தோல்வியுற்ற பரமசிவனிடம் "போருக்குப் புறப்படும் நேரத்தில் கணேசரை முறைப்படி வழி படாததனுலேயே தோல்வி ஏற்பட்டது.

ஆகவே கணேசரைத் தாங்கள் வழிபட வேண்டும்'' என்று உபதேசித்தார். பரமசிவனும் கணேசரைக் குறித்துப் பத்து ஆண்டுகள் கடுந்தவம் புரிந்தார். முடிவில் கணேசப் பெருமான் பரமசிவனுடைய முகத்திலிருந்து ஐந்து முகத்துடனும், ஆயுதம் தாங்கிய பத்து கைகளுடனும், நெற்றியில் சந்திரனுடனும் முண்ட (உடலில்லாத தலைகளைக் கொண்ட) மாலையுடனும், பாம்புகளாலான அணிகளுடனும், கிரீடம், தோள்வளைகளுடனும், சந்திரன், ஸூர்யன், அக்னி இவைகளின் ஒளிகளை மங்கச் செய்யும் ஒளியுடனும், வெண்மை நிறத்துடனும் தோன்றினர். தன்னை வணங்கி வழிபட்டு நிற்கும் பரமசிவனுக்கு, வெற்றியைத் தருவதும், எல்லா அபீஷ்டங்களையும் அளிப்பதுமான தன்னுடைய ஆயிரம் திருநாமாக்களையும் கணேசர் உபதேசித்தார் என்று பிரம்மதேவர் வியாஸ முனிவருக்குக் கூறினர்.

व्यास उवाच
வ்யாஸ உவாச } வ்யாஸர் வினவுகினுர்

कथं नाम्नां सहस्रं स्वं गणेश उपदिष्टवान् ।
शिवाय तन्ममाचक्ष्व लोकानुग्रहतत्पर ॥

கதம் நாம்னும் ஸஹஸ்ரம் ஸ்வம் கணேச உபதிஷ்டவான் ।
சிவாய தன்மமாசக்ஷ்வ லோகானுக்ரஹதத்பர ॥ (1)

''அடியார்களைக் காப்பாற்றுவதில் அக்கறை கொண்டவரே! பிரம்மதேவ! கணேசப் பெருமாள் தன்னுடைய ஆயிரம் திருநாமங்களை சிவபெருமானுக்கு உபதேசித்தருளியதாகத் தங்களிடமிருந்து அறிந்தேன். அவ்விதம் பெருமை வாய்ந்த திருநாமங்களைத் தாங்கள் அடியேனுக்கு திருவாய் மலர்ந்தருள வேண்டும்.''

ब्रह्मोवाच
பிரும்மோவாச } பிரம்மதேவன் கூறுகிறுர்.

देव एवं पुराराति: पुरत्रय जयोद्यमे ।
अनर्चानाद्गणेशस्य जातो विघ्नाकुल: किल ॥

தேவ ஏவம் புராராதி: புரத்ரய ஜயோத்யமே ।
அனர்சனுத்கணேசஸ்ய ஜாதோ விக்னுகுல: கில ॥ (2)

''பரமசிவன் திருபுராஸுரனைப் போரில் வென்று வெற்றி கொள் வதற்குப் புறப்படும்போது, கணேசப் பெருமானைப் பூஜை செய்யாத தலால் பலவிதமான இடையூறுகளால் கலக்கமுற்றவராய் வெற்றி பெறவில்லை.''

मनसा विनिर्धार्य ततस्तद्विघ्नकारणम् ।
महागणपतिं भक्त्या समभ्यर्च्य यथाविधि ।

மனஸா ஸ விநிர்தார்ய ததஸ்தத்விக்ன காரணம் ।
மஹாகணபதிம் பக்த்யா ஸமப்யர்ச்ய யதாவிதி ॥ (3)

विघ्नप्रशमनोपायमपृच्छदपराजितः ।
सन्तुष्टः पूजया शम्भोर्महागणपतिः स्वयम् ॥

விக்னப்ரசமனோபாய மப்ருச்சதபராஜித: ।
ஸந்துஷ்ட: பூஜயா சம்போர்மஹாகணபதி: ஸ்வயம் ॥ (4)

सर्वविघ्नैकहरणं सर्वकामफलप्रदम् ।
ततस्तस्मै स्वकं नाम्नां सहस्रमिदमब्रवीत् ॥

ஸர்வ விக்னைகஹரணம் ஸர்வகாமஙலப்ரதம் ।
ததஸ்தஸ்மை ஸ்வகம் நாம்னும் ஸஹஸ்ரமிதமப்ரவீத் ॥ (5)

''பிறகு பரமசிவன் போரில் வெற்றி கிடைக்காமல் தடை செய்த இடையூறுகளுக்குக் காரணத்தை நன்குணர்ந்து மஹாகணபதியை முறைப்படி பக்தியுடன் வழிபட்டார். சிவபெருமானுடைய பூஜை யைப் பெற்று ஸந்தோஷமடைந்து நேரில் தோன்றிய மஹாகணபதி யிடம் இடையூறுகள் அறவே ஒழிவதற்கு வழியைக் கூறும்படி பரம சிவன் வேண்டிக் கொண்டார். பிறகு மஹாகணபதி எல்லாவிதமான இடையூறுகளையும் அறவே நாசம் செய்வதற்கு இன்றியமையாத ஒரே உபாயமாக இருப்பதும், விரும்பிய பலன்கள் அனைத்தையும் அளிப்பதுமான தன்னுடைய திருநாமங்கள் ஆயிரத்தையும் ('கணே ச்வர:' என்று ஆரம்பித்து 'அனந்தானந்த ஸௌக்யத:' என்ற நா மம் முடிய) நேரடியாகவே பரமசிவனுக்குத் திருவாய் மலர்ந்தருளி னர்.''

# महागणपतिसहस्रनाम

मஹாகணபதி ஸஹஸ்ரநாமம்

महागणपतिः उवाच
மஹாகணபதி: உவாச } மஹாகணபதி உரைக்கின்றார்.

1. गणेश्वरः : கணேச்வர:

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் முதலிய உலகங்களின் கூட்டத்தின் வடிவமாகவும், அதனை ஆட்டிவைக்கும் தலைவனாகவும் இருப்பவர்.

2. गणक्रीडः : கணக்ரீடர்:

ஆகாசம் முதலான பிரபஞ்சக் கூட்டத்தினுள் புகுந்து அந்தந்தப் பொருட்களாகத் துலங்கிக் கொண்டு லீலைகள் புரிகின்றவர். "கடவுள் உலகத்தைப் படைத்து அதனுள் பிரவேசித்து உலகமாக விளங்கி நிற்கிறார் इदं सर्वमसृजत तत्सृष्ट्वा, तदेवानुप्राविशत् -இதம்ஸர்வமஸ்ருஜத, தத்ஸ்ருஷ்டவா ததேவானுப்ராவிசத் என்று தைத்தரீயோபனிஷத்தில் கூறியிருப்பது இதற்கு மூலப்பிரமாணம் ஆகும்.

குறிப்பு: மஹாகணபதியின் நேரான சீடர் கணக்ரீடர், அவருடைய சிஷ்யர் விகடர், அவருடைய சிஷ்யர் விக்ன விநாயகர் என்று கணபதியை வழிபடுவதில் குருபரம்பரை கூறப்படுகிறது. கணக்ரீடர் முதலானவர்கள் மஹாகணபதியின் வடிவமானவர்கள். கணபதி நாமங்களைக் கூறுவதற்கு முன்னதாக ஆதிகுருவான கணக்ரீடரின் நாமமானது கணபதிக்கு அடுத்தபடியாகக் கூறப்பட்டிருக்கிறது என்றும் கொள்ள வேண்டும்.

3. गणनाथः : கணநாத:
மங்களங்களை அளிக்கின்ற நற்குணங்கள் நிறைந்தவர்.

4. गणाधिपः : கணாதிப:

எட்டு வஸுக்கள், பதினோறு ருத்திரர்கள், பன்னிரண்டு ஆதித்யர்கள் எனப்படும் கணங்களுக்கு (தேவக்கூட்டங்களுக்கு) தலைவர்.

5. एकदंष्ट्रः : ஏகதம்ஷ்ட்ர:

காணாமல் மறைந்துபோன மண்ணுலகத்தை எல்லோரும் காணும்படி வெளியில் தூக்கிவருவதிலும், தீயவர்கள் நிறைந்த உலகத்தை

அழிப்பதிலும் திறமை வாய்ந்ததும். பெருமை வாய்ந்ததும் மிக்க முக்கியமாய் இருப்பதுமான தித்திப்பல்லை அடைந்தவர்.

6. वक्रतुण्ड: வக்ரதுண்ட:

''வக்ரதுண்டர்'' என்று பார்வதி தேவியால் அழைக்கப்பட்டவர் (துராஸதா என்ற அஸுரனைக் கொன்று, காசி நகரத்தைக் காப்பாற்றுவதற்கு பார்வதீ தேவியின் முகத்திலிருந்து கணேசர் தோன்றினர். அவருக்குப் பார்வதீ தேவி கூறுபவர்களுக்கு எல்லா இஷ்டங்களையும் அளிக்கின்ற ''வக்ரதுண்ட'' என்ற திருநாமத்தைச் சூட்டினுள். ''वक्रतुण्डेति नामास्य दधे सर्वार्थदंनॄणाम्'' ''வக்ரதுண்டேதி நாமஸ்யததே ஸர்வார்ததம் ந்ருணும்'' என கணேசபுராணம் உத்தரகாண்டம் 40 வது அத்யாயம் கூறுகின்றது.)

அல்லது, நுனியில் வளைந்ததும், தடிபோல் நீண்டதுமான துதிக்கையை உடையவர். ''அழகிய பொருட்களில் காணப்படும் விகாரமும் அவைகளை மேலும் அழகு வாய்ந்ததாகச் செய்கின்றது'' என்பது கவிகளின் கூற்று. அழகு நிறைந்த கணபதியை துதிக்கையின் கோணல் மேலும் அழகுபடுத்துகின்றது என்பது கருத்து.

7. गजवक्त्र: கஜவக்த்ர:

யானையின் முகத்தை ஒத்த முகத்தை உடையவர்.

8. महोदर: மஹோதர:

எண்ணிறந்த கோடிக்கணக்கான பிரம்மாண்டங்களுக்கு இருப்பிடமானதும், அதனுல் மிகப் பெரியதுமான வயிற்றை உடையவர்.

9. लम्बोदर: லம்போதர:

பிரம்மாண்டங்கள் நிறைந்து இருப்பதனுல் தொங்கும் வயிற்றை உடையவர். எனவே அடியார்கள் அன்புடனும், செல்லத்துடனும் மஹாகணபதியை 'தொந்திக் கணபதி' என்று அழைக்கின்றனர்.

10. धूम्रवर्ण: தூம்ரவர்ண:

புகை நிறம் உடையவர். 'ய' எனப்படும் வாயுதேவதையின் பீஜாக்ஷரத்திற்குப் (எழுத்திற்கு) புகையின் நிறத்தை மந்திர சாஸ்திரம் கூறுகிறது. அதனுலேயே, மணமுள்ள புகையைக் (தூபத்தை) கடவுளுக்கு உபசாரமாக ஸமர்ப்பிக்கும் பொழுது 'யம்' என்ற வாயு

பீஜாக்ஷரம் கூறப்படுகிறது. அத்தகைய பீஜாக்ஷரத்தின் வடிவரான கணபதிக்கும் புகை நிறம் உடையவர் என்ற திருநாமம் ஏற்-பட்டுள்ளது,

11. विकट: விகட:

எங்கும் நிறைந்திருப்பவரானதால் ஒன்றுலும் மறைக்கப்படாத-வர். [ 'कट-आवरणे கட ஆவரணே'' என்று பாணினி முனிவரின் இலக்கண நூலே அனுஸரித்து கட என்ற வடமொழிச் சொல் மறை-த்தல் என்ற பொருளேக் கூறியதாகும்]

12 विघ्ननायक: விக்ன நாயக:

தன்னே வழிபடாமல் தீய வழியில் செல்லும் துஷ்டர்களுக்கு இடையூறுகளே அளிப்பவர். அல்லது, உயிரினம் அனைத்தையும், தடைகளேத் தகர்தது, நல்வழியில் நடத்துபவர்.

13. सुमुख: ஸுமுக:

தன்னே வழிபடும் அடியார்களால் ஆரம்பிக்கப்படும் செயல்கள் அனைத்தையும் மங்களமாக முடியும்படி செய்பவர். அழகிய திரு முகத்தை உடையவர்.

14. दुर्मुख: துர்முக:

தன்னே வழிபடாத தீயர் கூட்டத்திற்கு நடுப்பகலில் ஜ்வலிக்கும் கதிரவனேப் போன்று காண்பதற்கு முடியாதவர். வானளாவி எரிந்து கொண்டிருக்கும் காட்டுத்தீயைப் போன்று அணுக முடியாதவர். அக்னியும், ஸூர்யனும், மஹாகணபதியின் வடிவமானதால், அவர்-களின் தன்மை 'துர்முக:' என்ற திருநாமத்தால் கணபதியிடம் கூறப்பட்டது.

15. बुद्ध: புத்த:

எப்பொழுதும் நிர்மலமான அறிவு வடிவராக இருப்பதனுல் மாசு படிந்த அறியாமை, அக்ஞானம், அவித்தை, மாயை எனப்படும் தோஷத்தை அறவே அகற்றுபவர். அல்லது, ஜினதேவனுக அவ-தரித்ததால் மஹாகணபதி புத்தர் எனப்படுகிறுர்.

16. विघ्नराज: விக்னராஜ:

தீயவர்களுக்கு இடையூற்றை விளேவிக்கும் விக்னர்களெனப்படும் தேவர்களின் கூட்டத்திற்கு தலேவனுக (வேந்தனுக) விளங்குபவர்.

17. गजानन: கஜானன:

யானைகளை உயிர்வாழும்படி செய்கின்றவர் ["गजाननयतीत्यर्थे साधुरेष गजानन:" खद्योतं கவனத்திற் குறியது)

18. भीम: பீம:

தீயவர்களுக்கு அச்சத்தை அளிப்பவர்

19. प्रमोद: ப்ரமோத:

விரும்பிய பொருளை அடைவதனுல் ஏற்படும் இன்பம் 'ப்ரமோதம் எனப்படும். அதன் வடிவாக இருப்பவர்.

20. आमोद: ஆமோத:

விரும்பிய பொருள் நிச்சயமாகக் கிடைக்கும் என்ற எண்ணத்தால் தோன்றும் இன்பமானது ஆமோதம் எனப்படும். அத்தகைய ஆமோத வடிவமாக இருப்பவர.

21. सुरानन्द: ஸுரானந்த:

ஸுரானந்தர் என்று குபேரனுல் அழைக்கப்பட்டவர். அல்லது விரும்பிய பொருளை அடைந்து அதனை அனுபவித்ததனுல் ஏற்படும் இன்பம் ஆனந்தம் எனப்படும். அத்தகைய ஆனந்தம் தேவர்களின் மூலம் கிடைக்கும்போது ஸுரானந்தம் என வழங்கப்படுகிறது. அதன் வடிவாய் இருப்பவர். "கச்யபமுனிவருக்கு மைந்தனுகத் தோன்றிய மஹாகணபதியின் (ஐந்தாவது வயதில் நடந்தேரிய) உபநயனகாலத்தில்—குபேரன், தன் கழுத்திலுள்ள இரத்னமாலையை விநயகருக்கு அளித்து "ஸுரானந்தர்" என்ற பெயரையும் சூட்டினுள்" என்று रत्नमालां ददौ चस्मै कुबेरोऽपगलस्थिताम् । सुरानन्देति नामास्य सम्पूज्यच चकारह கணேசபுராணம் உத்தரகண்டம் 10 வது அத்யாயம் 25 வது சுலோகம் கூறுகிறது.

22. मदोत्कट: மதோத்கடர்:

எப்பொழுதும் ஆனந்தம் நிறைந்த ஆத்ம ஸ்வரூபானுபவத்துடன் பிரகாசித்துக் கொண்டிருப்பதால் ஒருவிதமான மறைவும் இல்லாதவர்.

23. हेरम्ब: ஹேரம்ப:

சைவாகம சாஸ்திரத்தைத் தோற்றி வைத்தவர். அல்லது அளவிட முடியாத சௌர்யம் (பராக்ரமம்) நிறைந்தவர். [ह: शङ्करे

रवि:शब्दे शैवतन्त्रप्रवर्तनात् । उद्दामशौर्यवत्वाद्वा हेरम्ब इतिकथ्यते ॥
खद्योतम्– கவனத்திற்குரியதாகும்]

24. शम्बर: சம்பர:

மோக்ஷ ஸுகத்திற்கு இருப்பிடம் ஆனவர். அல்லது இந்திர னுக்கு வஜ்ராயுதத்தை அளித்தவர். அல்லது ஜலத்தின் வடிவமாய் இருப்பவர்.

["शं सुखं तद्वरं श्रेष्ट यस्मिन्नस्ति स शंवरः ।
"शंबं वा कुलिशं राति यद्वा सलिलविग्रहः ॥ खद्योत" காண்க]

25. शम्भु: சம்பு:

எல்லோருக்கும் இன்பத்தைத் தருபவர். அல்லது பரமசிவனுகவும் இருப்பவர்

26. लम्बकर्ण: லம்பகர்ண:

தன்னை வழிபடும் அடியார்களால் மிகத் தொலைவில் இருந்து கொண்டு செய்யப்படும் பக்தி ததும்பும் துதிகளையும் அன்பழைப்பு–களையும் அருகாமையில் இருப்பவர் போன்று உடனேயே கேட்கிறுர் என்ற காரணத்தால் நீண்ட காது படைத்தவர்.

27. महाबल: மஹாபல:

''பல'' எனப்படும் அஸுரனுக்குப் பெருமை அளித்தவர். அல்லது மிகவும் பலசாலியானவர்.

28. नन्दन: நந்தன:

எல்லாவிதமான இன்பங்களுக்கும் சிறப்புகளுக்கும் காரணமாக இருப்பவர்.

29. अलम्पट: அலம்பட:

ஆசை ஒழிந்த மஹான்களால் சூழப் பெற்றவர். அல்லது அழ–கிய வஸ்திரத்தை அணிந்திருப்பவர்.

30. अभीरु: அபீரு:

ஓரிடத்திலும், ஒரு காலத்திலும், ஒரு பொருளிலிருந்தும், ஒரு விதத்திலும் அச்சத்தை அடையாதவர். அல்லது ஒரு பெண்ணையும் விரும்பி அடையாதவர்.

31. मेघनाद: மேகநாத:

மேகத்தின் ஒலியைப் போன்ற குரலைப் படைத்தவர். அல்லது மேகங்களை நாசம் செய்தவர்.

32. गणञ्जय: கணஞ்ஜய:

எளிதிலேயே முயற்சி இல்லாமலே தீயவர்களை கூட்டம் கூட்டமாக வென்று வெற்றி கொள்பவர். (ஸாதாரண மனிதனைப் போன்று பகைவனை ஒவ்வொருவனுக முயற்சியுடன் நாசம் செய்து வெற்றி கொள்பவர் அல்ல என்பது கருத்து)

33. विनायक: விஞயக:

முண்டகம், தைத்திரீயம் முதலிய மறைமுடிகளில் பறவையாக வர்ணிக்கப்பட்ட ஜீவர்களின் கூட்டத்தை நடத்துபவர். [वि:पक्षिरूप: जीवौघस्तन्नेतृत्वाद्विनायक: खद्योत காண்க] அல்லது இந்திரனுல்—விஞயகர் என்று அழைக்கப்பட்டவர். அவருக்கு இந்திரன். கணபதியின் உபநயனகாலத்தில்—அங்குசம், க்ல்பவ்ருக்ஷம் இவைகளை அளித்து 'விஞயகர்' "என்ற திருநாமத்தை வழங்கி வழிபட்டான் "विनायक इति स्फुटम् चकार नाम क्रोऽथ स्मरणात्सर्वसिद्धिदम्" என்று கணேசபுராணம் உத்தரகாண்டம் 11 வது அத்யாயம் கூறுகிறது.

34. विरूपाक्ष: விரூபாக்ஷ:

சிவபெருமானுல்—"விரூபாக்ஷர்" என்றழைக்கப்பட்டவர். அல்லது ஒற்றுமை இல்லாத (மாறுபட்ட) உருவமுடையவர்களான அக்னி, ஸூர்யன், சந்திரன் இவர்களை மூன்று கண்களாக அடைந்தவர். சங்கரர் உபநயத்தில் विरूपाक्षो विसदृशैर्नेत्रैरग्निरवीन्दुभि: खद्योत காண்க விஞயகருக்கு, சூலம், டமரு இவைகளை அளித்து தன்னுடைய "விருபாக்ஷ" என்ற நாமத்தை ஸமஸத்தார். கணேசபுராணம் 2. கண்டம் 10 வது அத்யாயம் கூறுகிறது.

35. धीरशूर: தீரசூர:

தைர்யம் (பெரிய கஷ்டங்கள் நேரிடினும் சிறிதும் கலக்கமடையாத உள்ளம்), சௌர்யம் (எல்லாவிதமான செயல்களையும் செவ்வெனச் செய்து முடிக்கும் திறமை) எப்பொழுதும் இவ்விரண்டையும் உடைத்தானவர்.

36. वरप्रद: வரப்ரத:

தன் திருவடியை வழிபடும் அடியார்களுக்கு விரும்பிய பொருள்கள் அனைத்தையும் அளிப்பவர்.

37. महागणपति: மஹாகணபதி:

கணம், குல்மம், ஸேனை முதலான படைக்கூட்டங்களுள் மிகப்பெரிய படைக்கூட்டங்களையும் தலைமை தாங்கிக் காப்பாற்று-கின்றவர்.

38. बुद्धिप्रिय: புத்திப்ரிய:

தர்மதத்தனெனப்படுமந்தணரின் மகள் புத்தியின் கணவன் அல்லது, அறிவின் நிலையற்ற தன்மையை (ஸம்சயத்தை) அகற்றும் நிலையான, நேர்மையான (நிச்சய ரூபமான) அறிவை ஆதரிக்கின்ற வர். (அத்தகைய அறிவாளிகளிடம் அன்பு கொண்டவர் என்பது கருத்து) காசிதேசத்தில் வஸிக்கும் தர்மதத்தன் எனப்படுமந்தணன், கணபதியை தன் இல்லத்திற்கழைத்து உணவு அளித்து தன்னுடைய மகளையும் (ஸித்தியையும் புத்தியையும்) அளித்து அவரை வணங்கி ஞன்'' ''भोजयामास विधिवत् सिद्धिबुद्धी उभे ददौ । दक्षिणाथ धर्मदत्तो ननाम दण्डवत्क्षितौ என்று கணேசபுராணம் 14வது அத்யாயம் கூறுகிறது.

39. क्षिप्रप्रसादन: க்ஷிப்ரப்ரஸாதன:

எப்பொழுதும் உள்ளத்தால் தன்னை இடைவிடாமல் பஜிக்கும் அடியார்களுக்குத் தாமதமின்றியே அருள் புரிகின்றவர்.

40. रुद्रप्रिय: ருத்ரப்ரிய:

வேதங்களுக்குத் தலை போன்று சிறந்து விளங்கும் யஜுர்வே தத்தில் உள்ளதும், 'சிவ பஞ்சாக்ஷரம்' எனப்படும் மஹாமந்திரத்தை உட்கொண்டதும், பதினொன்று அனுவாகங்கள் கொண்டதுமான, ஸ்ரீருத்ராத்யாயத்தில் மிகவும் ஆசை உடையவர். (ஸ்ரீ ருத்ர பாராய-ணத்தில் கணபதி மிகுந்த ஸந்தோஷம் அடைகிறார் என்பது கருத்து.)

41. गणाध्यक्ष: கணாத்யக்ஷ:

முப்பத்தாறு தத்துவக் கூட்டங்களை அவைகளின் தலைவராக இருந்து காப்பாற்றுகின்றவர்.

42. उमापुत्र: உமாபுத்ர:

பார்வதீ தேவிக்குப் புதல்வனாகத் தோன்றி (மக்கட்பேறிலலாமல்

இறந்த மாந்தர்களுக்குத் துன்பத்தைத் தரும்) "புத்" என்னும் நரக-த்தை அடையாதபடி அன்னை பார்வதியைக் காப்பாற்றியவர்.

43. अघनाशन: அகனசன:

கணேசர் பெரிய வயிறுடையவராய் இருப்பவர் ஆனாலும், பக்தர்-களால் அளிக்கப்படும் பொருள் (நைவேத்யம்) அகனமாக இருப்பினும் (அளவில் சிறியதாக இருப்பினும்) அதனால் ஸந்தோஷம் அடைகின்-றார். அல்லது, அடியார்களுடைய பாவத்தை துன்பத்தை அகற்று பவர்.

44. कुमारगुरु: குமாரகுரு:

ஸனத்குமாரரின் வடிவத்தில் இருந்துகொண்டு அடியார்களுக்கு வித்யைகளை உபதேசிப்பவர். அல்லது முருகப் பெருமானுக்கு முன்பு தோன்றியதால் குமாரக் கடவுளுக்கும் குரு எனப்படுகிறார்.

45. ईशानपुत्र: ஈசானபுத்ர:

பரமேச்வரனுக்கு மைந்தர்.

46. मूषकवाहन: மூஷகவாஹன:

மூஞ்சூறு எனப்படும் எலிவகையைச் சேர்ந்த ஜந்துவின் வடிவத்தில் தோன்றி ஸாதுக்களுக்குத் துன்பத்தை அளித்த அஸுரனின் கொழுப்பை அடக்கி அவனை வாகனமாகக் கொண்டவர். (கணேச-புராணம் 2 கண்டம் 134வது அத்யாயம் காண்க.)

47. सिद्धिप्रिय: ஸித்திப்ரிய:

தர்மதத்தனுடைய மகளான ஸித்திதேவியின் கணவர், அல்லது 'அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம், என்ற எட்டுவிதமான ஸித்திகளிலும் அன்பு கொண்டவர் [கணேசபுராணம் உத்தரகண்டம் 14வது அத்யாயத்தில்—தர்மதத்த-னுடைய மகளை மணந்த விவரம் கூறப்பட்டிருக்கிறது.]

48. सिद्धिपति: ஸித்திபதி:

அணிமா முதலிய எட்டுவிதமான ஸித்திகளையும் பாதுகாப்பவர்.

49. सिद्ध: ஸித்த:

'கோரக்ஷர்' முதலான பெரிய ஸித்த புருஷர்களின் வடிவமாக இருப்பவர்.

50. सिद्धिविनायक: ஸித்தி விநாயக:

தன்னை வழிபடும் அடியார்களுக்கு அவர்கள் விரும்பிய ஸித்தி-களைக் கிடைக்கும்படி செய்பவர்.

51. अविघ्न: அவிக்ன:

தன்னை வழிபடும் பக்தர்களுக்கு இருக்கும் அவித்வத்தை (விலங்கின் தன்மையை) அகற்றி (தெய்வத்தன்மையை அளித்து) அவர்களை நல்வழிப்படுத்துகின்றவர். அல்லது ஒருவிதமான இடை-யூறும் இல்லாதவர்.

[भावप्रधाननिर्देशादवित्वं पशुतां हरन् । विघ्नैर्विरहितत्वाद्वाप्यविघ्न इति कथ्यते ॥ खद्योतं பார்க்கவும்.]

52. तुम्बुरु: தும்புரு:

வைணிகர்களால் (வீணையை வாசிப்பதில் கைதேர்ந்தவர்களால்) தும்பம் எனப்படும் வீணையினால் புகழ்ந்து பாடப்பட்டவர். ஸாமவேத உபநிஷத் சாந்தோக்யம் முதல் அத்யாயம் 7வது கண்டத்தில் "வீணையில் கானம் செய்கின்றவர்கள் இந்த பரமாத்மாவையே புகழ்ந்து கானம் செய்கின்றனர்" "तद्य इमे वीणायां गायन्ति एतमेव ते गायन्ति" "தத்ய இமே வீணாயாம் காயந்தி ஏதமேவ தே காயந்தி" என்று கூறியிருப்பது இந்த நாமத்தின் தோற்றத்திற்குப் பிரமாணமாகும்.

53. सिंहवाहन: ஸிம்ஹவாஹன:

மயிலையும், மூஞ்சோறையும் போன்று சிங்கத்தை வாகனமாக அடைந்தவர். பரசுராமரின் அன்னை ரேணுகை விநாயகருக்குச் சிங்கத்தை வாகனமாகக் கொடுத்து "ஸிம்ஹ வாஹனர்" என்ற பெயரை-யும் சூட்டினாள். (கணேசபுராணம் உத்தரகண்டம் 10வது அத்யாயம் காண்க.) அல்லது பார்வதீதேவி தனது சிங்க வாகனத்தைத் துராஸதனைக் கொல்வதற்கு வாகனமாகக் கொடுத்தாள். 'पुपूज पार्वती भक्त्या ददौ सिंहं स्ववाहनम्" "புபூஜ பார்வதீ பக்தியா ததௌ ஸிம்ஹம் ஸ்வவாஹனம்" என்று கணேச புராணம் உத்தரகாண்டம் 40வது அத்யாயத்தில் கூறியிருப்பதால் சிங்கவாகனர் எனப்படுகின்றார்.

(ஸ்ரீகணேசர் க்ருதயுகத்தில் சிங்கத்தையும், த்ரேதாயுகத்தில் மயிலையும், த்வாபரயுகத்தில் எலியையும், கலியில் குதிரையையும்

வாகனமாகக் கொண்டவர் என்று கணேசபுராணம் உத்தரகாண்டம் முதல் அத்யாயத்தில் கூறியுள்ளதும் கவனத்திற்குரியதாகும்.)

54. मोहिनीप्रिय: மோஹினீப்ரிய:

தேவாஸுரர்களுக்கு அமுதத்தைப் பங்கிட்டு அளிப்பதற்காகத் தோன்றிய மோஹினியின் கணவனுன சிவனிலிருந்து வேறுபடாதவர் என்ற காரணத்தால் கணேசர் "மோஹினீப்ரியர்" எனப்படுகிருர்.

55. कटङ्कट: கடங்கட:

கதிரவன் தன் ஒளியால், பனியினுல் மூடப்பட்ட பொருளே, பனியை அகற்றித் துலங்கச் செய்வது போல ஆனந்த வடிவமான ஆத்மஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டிருக்கும் அஞ்ஞானப் பொருளே ஆத்ம ஸ்வரூப ஞானத்தால் அகற்றி விளங்கும்படி செய்கின்றவர்.

56. राजपुत्र: ராஜபுத்ர:

"வரேண்யன்" என்ற வேந்தனுக்கு மைந்தனுகத் தோன்றியவர். அல்லது, சந்திரனைப் புதல்வனுகச் (மகனைப் போன்று தனது அடிமையாக) செய்துகொண்டவர். கணேசர் "वरेण्यस्तं विलोकयैव निजपुत्रमबुध्यत । पुपूज तनयं स्नेहात्तदाहष्टपराक्रमम्" ।। என்று செய்யுளால் கணேசபுராணம் உத்தரகண்டத்தில் 137 வது அத்யாயத்தில் வரேண்யனின் புதல்வர் என கூறப்பட்டிருக்கிறது.

57. शालक: சாலக:

சிறிதும் வெளியில் காணமுடியாத தலைமுடியை உடையவர் (கிரீடத்தால் மறைந்த முடியை உடையவர்) அல்லது, அமைதியின் வடிவமாகவே எப்பொழுதும் திகழ்பவர். [श: परोक्षेऽलक: केशे यस्यैकांशोप्यचाक्षुष: । शान्तेन्द्रिय: शालतेऽसौ राजते वेति शालक:"खद्योतम् காண்க]

58. सम्मित: ஸம்மித:

அளவிடப்பட்டவர். அதாவது, எங்கும் நிறைந்திருப்பவராக இருப்பினும், மனித வடிவத்தில் தோன்றியபோது தன்னுடைய கட்டை விரலின் அளவு உள்ளவராக இருக்கிருர். (மனிதர்களின் உள்ளம் அவரவர்களின் கைக்கட்டைவிரல் அளவுள்ளதாகும். அந்த அளவை அதனில் நிறைந்திருக்கும் ஆத்மஸ்வரூபத்திலும் உள்ளதாக கடோபநிஷத் முதலிய உபநிஷத்துக்கள் [ 'अङ्गुष्टमात्र:पुरुष:"

''அங்குஷ்டமாத்ர: புருஷ:'' என்று] கூறியிருக்கின்றன. அதனை அனுசரித்து இந்த நாமம் தோன்றியதாகும்.)

59. अमित: அமித:

அளவிடப்படாதவர். (ஆத்ம ஸ்வரூபம் சிறிய பொருளுக்கு மிகச் சிறிய பொருளாகவும், பெரிய பொருளுக்கு மிகப் பெரிய பொருளாகவும் உள்ளது 'நீளம், குட்டை, பெரியது, சிறியது என்ற அளவு அற்றது' "अस्थूलमनणु अह्रस्वमदीर्घ'' அஸ்தூலமனணு அஹ்ரஸ்வம தீர்கம் என்று பிருஹதாரண்ய கோபநிஷத்தில் கூறியிருப்பது இதற்கு மூலப்பிரமாணமாகும்).

60. कूष्माण्डसामसम्भूति: கூஷ்மாண்ட ஸாமஸம்பூதி:

ஜபம் செய்வதினாலும், ஹோமம் செய்வதினாலும் பாவத்தைப் போக்கடிகின்றவைகளான கூஷ்மாண்டம் எனக்கூறப்படும் யஜுர் வேதமந்திரங்களையும், ஸாம வேதத்தில் கூறப்பட்ட ஸாமாக்களையும் ஐச்வர்யமாகக் கொண்டவர்.

61. दुर्जय: துர்ஜய:

மிக்க பலசாலிகளான அஸுரர்களுக்கும் எண்ணத்திலும்கூட போரில் வெற்றிகொள்ள முடியாதவர்.

62. धूर्वह: தூர்வஹ:

சிறிதும் சிரமம் இன்றியே இவ்வுலகங்கள் அனைத்தினுடையவும், யோகக்ஷேமம் ஆகிற பெரும் சுமையைத் தாங்கி நிற்பவர்.

குறிப்பு: ஸ்ரீ பாஸ்கரராய தீக்ஷிதர் (உரையாசிரியர்) ''धुरं वहत्य-नायासाज्जगतामिति धूर्वह:'' துரம் வஹத்யநாயாஸாஜ் ஜகதாமிதி தூர்வஹ:'' என்று 62 வது நாமத்தின் பொருளைக் கூறியிருப்பதால் ''தூர்ஜய'' என்று அச்சிட்டுக் காணப்படும் பாடம் பொருத்தம் ஆனது அல்ல, ''தூர்வஹ:'' என்ற பாடமே பொருத்தமானதாகும்.

63. जय: ஜய:

பாரதம், பாகவதம் முதலிய இதிஹாஸ புராண நூல்களிலிருந்து ஏற்படும் பரம்பொருளின் நல்லறிவானது முறைப்படி அதனைக் கற்று ணர்ந்த மாந்தர்களின் அறியாமையை வென்று விடுகிறது. அதனால்

அந்நூல்கள் 'ஜயம்' எனப்புகழப்படுகின்றன. அதன் வடிவமாக கணேசர் இருப்பதால் 'ஜயர்' என்ற திருநாமம் அவருக்கு ஏற்பட்டது.

64. भूपति: பூபதி:

''பூபதி'' எனப்பயர் பூண்ட அக்னி தேவரின் ஸஹோதரரின் வடிவமாய் இருப்பவர்.

65. भुवनेशान: புவனேசான:

அக்னி தேவரின் மற்றொரு உடன்பிறந்தவரான 'புவனேசான ரின்' வடிவமாக இருப்பவர்.

66. भूतानांपति: பூதானும் பதி:

பூதானும் பதி:'' எனப்படும் அக்னியின் வேறொரு ஸஹோதரரின் வடிவமாய் இருப்பவர்.

67. अव्यय: அவ்யய:

அழிவு இல்லாதவர்.

68. विश्वकर्ता விச்வகர்தா

நம்மால் காணப்படுவதும் காணப்படாததும் ஆன உலகங்கள் அனைத்தையும் படைத்தவர்.

69. विश्वमुख: விச்வமுக:

உலகத்தை முறையாகத் தொடங்கி வைத்தவர். அல்லது, அடியார்களை வியக்கும்படி செய்துகொண்டு தன்னுடைய முகத்தில் உலகத்தைக் காணும்படி செய்தவர்

70. विश्वरूप: விசவரூப:

உலகங்கள் அனைத்தினுடையவும் வடிவமாக இருப்பவர், அல்லது த்வஷ்டா எனப்படும் தேவனின் புதல்வனும், ஒரு சமயம் தேவர்களின் விருப்பப்படி அவர்களின் குருவாகவும் இருந்த விச்வரூபனின் வடிவமாக இருப்பவர்.

71. निधि: நிதி:

ஆகாசம் முதலான பிரபஞ்சம் அனைத்திற்கும் இருப்பிடமானவர். அல்லது, ''மஹாபத்மம், பத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், கர்வம்,'' எனப்படும் ஒன்பது விதமான நிதிகளின் வடிவமானவர்.

72. घृणि: க்ருணி:

கதிரவனின் உருவமாகத் துலங்குபவர்,

73. कवि: கவி:

இலக்கியமாகவும், அதனை இயற்றும் கவியாகவும் விளங்குபவர்.

74. कवीनामृषभ: கவீனும் ருஷப:

கவிகளுக்குள் தலைச் சிறந்தவர் कविं कवीनां (''கவிம் கவீனும்' என்று மறைகளிலும், கணேச புராணத்திலும் மொழிந்திருப்பது இதற்கு மூலப் பிரமாணமாகும்)

75. ब्रह्मण्य: பிரம்ஹண்ய:

அந்தணர்களையும், மறைகளையும், தவத்தையும், பிரம்மதேவனை யும் காப்பாற்றுகின்றவர்.

76. ब्रह्मणस्पति: ப்ரம்ஹணஸ்பதி:

நான்முகனால் ''ப்ரம்ஹணஸ்பதி: என்று அழைக்கப்பட்டவர் அல்லது, சப்த பிரபஞ்சத்திற்கு (சொல்லுலகத்திற்கு) த் தலைவன் [நான்முகன்-உபநயனகாலத்தில் விநாயகருக்கு, எப்போதும் மலர்-ந்திருக்கும் தமரைப்பூவை பரிசாக அளித்து ''பரம்ஹணஸ்பதி'' என்ற திருநாமத்தையும் வழங்கினர் 'सर्वदा विकसत्पद्मं ददावस्मै करे स्थितम् । ब्रह्मणस्पतिरित्येवं नाम चक्रे तदास्य सः :'' என்று—கணேசபுராணம் உத்தரகண்டம்-10வது அத்யாயம் கூறுகிறது.

77. ज्येष्ठराज: ஜ்யேஷ்டராஜ:

ஜ்யேஷ்டம் எனப்படும் ஸாமத்தால் (ஸாமவேதத்திலுள்ள சொற்றொடரால்) பெருமை வாய்ந்தவராகப் புகழப்பட்டு விளங்குபவர்.

78. निधिपति: நிதிபதி:

'மஹாபத்மம்' முதலிய ஒன்பது நிதிகளையும் ரக்ஷிப்பவர். [निधीनां त्वा निधिपतिं हवामहे] (''நிதீனும் த்வா நிதிபதிம் ஹவாமஹே'' என்ற வேத வசனம் இதற்கு மூலப் பிரமாணமாகும்)

79. निधिप्रियपतिप्रिय: நிதிப்ரிய பதிப்ரிய:

முன் கூறப்பட்ட ஒன்பது நிதிகளில் ஆசை கொண்டவர்களும்

அதன் தலைவர்களுமான குபேரன் முதலியவர்களாலும் உபாஸிக்கப் படுகின்றவர்.

80. हिरण्मयपुरान्तस्थः ஹிரண்மய புராந்தஸ்த:

அறிவு வடிவமான பரபிரும்பத்தின் தோற்றத்திற்கு இருப்பிட-மான பட்டணம் போல் இருக்கும் உடலின் நடுவே உள்ள உள்ளத்தில் சிறிய ஆகாசத்தில் இருப்பவர் (தோன்றுபவர்). 'தஹராகாச'த்தின் நடுவே இருப்பவர் என்பது கருத்து.

81. सूर्यमण्डलमध्यगः ஸௌர்யமண்டல மத்யக:

ஸௌர்ய மண்டலத்தின் நடுவே கணேசரை த்யானிக்க வேண்டும் என்று சாஸ்திரம் உபதேசிப்பதால்—கதிரவனின் ஒளிக்கூட்டங்களின் நடுவில் இருப்பவர்.

82. कराहतिध्वस्तसिन्धुसलिलः கராஹதி த்வஸ்த ஸிந்து ஸலில:

நீண்டதும், பருத்ததும், உருண்டதும், மிகப் பெரியதுமான துதிக்கையால் கடலை அடித்துக் கலக்கி அதிலுள்ள வெள்ளத்தை உருஞ்சி வற்றச் செய்தவர்.

83. पूषदन्तभित्: பூஷதந்தபி த்

''ஸ்ரீ ருத்ர தேவனுக்கு ஹவிர்பாகத்தை அளிக்காமல் தக்ஷப்பிரஜாபதியால் செய்யப்பட்ட யாகத்தில், சிவபெருமானின் கணதேவதையான வீரபத்ரர் சிவனை அவமதித்த ''பூஷா'' என்றும் தேவனுடைய பற்களை உடைத்தார். ஆகவே வீரபத்ரரின் வடிவமாய் இருக்கும் கணேசரும் ''பூஷதந்தபித்'' என்ற திருநாமத்தால் அழைக்கப்படுகிறார்,

84. उमाङ्ककेलिकुतुकी உமாங்ககேளிகுதுகீ

அன்னைக்கு மட்டிலா மகிழ்ச்சியை அளிப்பதற்காகவே பார்வதீ தேவியின் மடியில் ஸந்தோஷத்துடன் விளையாட்டுகள் புரிகின்றவர்.

85. मुक्तिदः முக்தித:

சிறையில் இரும்புச் சங்கிலியால் கட்டுண்டு துயரத்தில் ஆழ்ந்தி-ருக்கும் அடியார்களை அத்தகைய கட்டிலிருந்து விடுவிப்பவர். அல்லது, பிறப்பு இறப்பு ஆகிய ஸம்ஸாரத் தளையிலிருந்து மோக்ஷமடைய விருப்பமுள்ள அடியார்களை விடுதலை செய்பவர்.

86. कुलपालनः குலபாலன:

உலகம் அனைத்திற்கும் அன்னையான பராசக்தியை வழிபடும் முறைகளுள் "வாமமார்க்கம்", "கௌல மார்க்கம்" என்ற முறைகளை வழி வகுத்துக் கூறும் தந்திர நூல்களையும் அழிந்து போகாதபடிக் காப்பாற்றுபவர்.

87. किरीटी கிரீடி

அழகிய மகுடம் சூடியவர், அல்லது கிரீடி என்று பெயர் பூண்ட அர்ஜுனனின் வடிவமாய் இருப்பவர்.

88. कुण्डली குண்டலீ

மனோஹரமான கர்ணாபரணத்தை அணிந்திருப்பவர். அல்லது வட்டமிட்டு வீற்றிருக்கும் ஆதிசேஷனாக இருப்பவர்.

89. हारी ஹாரீ

முத்துக்கள், இரத்தினங்கள், பவழங்கள் இவைகளாலான மாலையுடன் விளங்குபவர். அல்லது இணையற்ற அழகு பொருந்தியவர்.

90. वनमाली வனமாலீ

பல நிறமுள்ள பூக்களால் தொடுக்கப்பட்டதும், திருவடிகள் வரை தொங்குகின்றதுமான அழகிய பூமாலையைத் தரித்திருபபவர்.

91. मनोमयः மனோமய:

தன் விருப்பத்தை அனுசரித்தே உடலை அடைபவர் (அவதாரம் செய்பவர்). (முற்பிறவிகளில் தங்களால் செயயப்பட்ட வினைகளின் பயனாக உடலை அடைந்து பிறக்கும் ஜீவர்கள் போன்று கணேசர் உடலை அடைபவர் இல்லை என்பது கருத்து).

92. वैमुख्यहतदैत्यश्रीः வைமுக்ய ஹததைத்யஸ்ரீ:

தன்னுடைய திருக்கண் பார்வைக்கு இலக்கு ஆகாததனால் அஸுரர்களை ஐச்வர்யம் இழந்தவர்களாகச் செய்பவர்.

93: पादाहतिजितक्षितिः பாதாஹதிஜித க்ஷிதி:

இறுமாப்பு அடைந்த பூமியைத் தன் திருவடியால் அடித்து கர்வத்தை அடக்கி வணக்கம் உள்ளவளாகச் செய்தவர்.

94. सद्योजातस्वर्णमुञ्जमेखली ஸத்யோ ஜாத ஸ்வர்ண முஞ்ஜமேகலீ
புதியதும், தங்கநிறமுள்ளதுமான முஞ்ஜை எனப்படும் ஒருவகைப் புற்களால் செய்யப்பட்ட 'மௌஞ்ஜீ' என்ற (பிரம்மசாரிகளால் தரிக்கப்படும்) கடிஸூத்ரத்தைத் தரித்திருப்பவர்.

95. दुर्निमित्तहृत् துர்நிமித்த ஹ்ருத்
காரணமின்றியே கோயில்களில் வழிபடப்படும் தெய்வ பிம்பங்கள் உடைந்து விழுதல், பூமி ஆட்டமடைதல், வானத்திலிருந்து எரிந்து கொண்டு கொள்ளிக் கட்டைகள் விழுதல்—இது முதலானவைகள், வரப்போகும் தீமைகளை அறிவிக்கின்றன. அத்தகைய தீமைகளை அறவே ஒழிப்பவர்.

96. दुःस्वप्नहृत् துஸ்வப்ன ஹ்ருத்
அடியார்களுக்குக் கெட்ட ஸ்வப்னத்தால் அறிவிக்கப்படும் கஷ்டங்களை இல்லாமல் செய்து நல்ல ஸ்வப்னங்களால் அடையத்தகுந்த நன்மைகளை அளிப்பவர்.

97. प्रसहन: ப்ரஸஹன:
பக்தர்களின் குற்றங்களைப் பொறுத்துக் கொள்பவர்.

98. गुणी குணீ
பசியின்மை, தாஹமின்மை, பிறப்பிறப்பு இல்லாமை, சோக மோஹங்கள் அற்ற தன்மை இது முதலான குணங்கள் நிறைந்தவர்.

99. नादप्रतिष्ठित: நாதப்ரதிஷ்டித:
ப்ரணவம் எட்டு அக்ஷரங்கள் கொண்டதாகும். அவை அகரம், உகரம், மகரம், பிந்து, நாதம், கலை, கலாதீதம், பரம் எனப்படும். அவைகளில் மூன்ருவதான நாதாக்ஷரத்தில் நிலை பெற்றிருப்பவர் (நாதத்தின் பொருளாக இருப்பவர்) (பிரணவம், அஷ்டாக்ஷரம் என்பதை தாரஸாரோபநிஷத்தில் காண்க.)

100. सुरूप: ஸுரூப:
மிக்க லாவண்யம் வாய்ந்தவர். அல்லது தத்வங்களைத் தன்னை வழிபடும் சிஷ்யர்களுக்கு நன்கு நிரூபணம் செய்பவர்.

101. सर्वनेत्राधिवास: ஸர்வ நேத்ராதிவாஸ:

அனைவருடையவும் கண்களில் வஸிப்பவர். "य एषो अक्षिणि पुरुष: एष आत्मा" ய ஏஷோ, அக்ஷிணி புருஷ: ஏஷ ஆத்மா" என்று சாங்தோக்ய உபநிஷத்தில் கூறியிருப்பது இதற்கு மூலமாகும்.

102. वीरासनाश्रय: வீராஸனாச்ரய:

இடது காலின் முட்டியின் மீது வலதுகாலைப் பொருத்தி வைப்பது வீராஸனம் எனப்படும். அத்தகைய வீராஸனத்தில் அமர்ந்திருப்பவர்.

103. पीताम्बर: பீதாம்பர:

வானத்தை விழுங்கியவர். அல்லது மஞ்சள் நிறமுள்ள ஆடையை உடுத்தியிருப்பவர்

104. खण्डरद: கண்டரத:

முறிந்ததும், பாதியாய் இருப்பதுமான தந்தத்தைத் தரித்திருப்பவர்.

105. खण्डेन्दुकृतशेखर: கண்டேந்துக்ருதசேகர:

பாதி சந்திரனைத் தலையில் அணிந்திருப்பவர்.

106. चित्राङ्कश्यामदशन: சித்ராங்கச்யாம தசன:

பெரும்பாலும் நீல வர்ணத்தாலான சித்திரங்களால் தந்தமானது அழகு நிறைந்திருக்கும்போது அறிஞர்களால் "சித்ராங்கச்யாம தசன" என்ற திருநாமத்தால் புகழப்படுகிறார்.

107. भालचन्द्र: பாலசந்தர:

பாலசந்திரர் என்று சங்கரரால் அழைக்கபபட்டவர். நெற்றியில் சந்திரனைத் தாங்குபவர். அல்லது எட்டாம் பிறைச் சந்திரனைப் போன்று வளைந்து அழகு மிகுந்த நெற்றிப் பிரதேசத்தை அடைந்தவர் [சங்கரர் விநாயகருக்கு உபநயனகாலத்தில் சந்திரகலையைப் பரிசாக அளித்து "பாலசந்திரர்" என்று அழைத்தார் என்று 'दत्वा चन्द्रकलां नाम भालचन्द्रेति चाकरोत्' கணேசபுராணம் உத்திரகண்டம் 10 வது. அத்யாயம் கூறுகிறது.

108. चतुर्भुजः சதுர்புஜ:

நான்கு கைகளை உடையவர்.

109. योगाधिपः யோகாதிப:

லிங்க புராணத்தில் "யோக மார்க்கத்தை உலகில் பரவச் செய்வதற்காக "லகுளீசர்" முதலாக யோகாசிரியர்கள் இருபத்தெட்டு பேர்கள் அவதரித்திருக்கின்றனர்" என்று கூறப்பட்டிருக்கின்றது. அத்தகைய யோகிகளின் வடிவமாய் இருப்பவர்

110. तारकस्थः தாரகஸ்த:

ஓங்காரத்தில் இருப்பவர். ஓங்காரத்தின் பொருளாக விளங்குபவர் என்பது கருத்து.

111. पुरुषः புருஷ:

'புரம்' (பட்டணம்) என்று வேதங்களில் குறிக்கப்படும் உடல்களில் வாழும் ஜீவராசிகளுக்கு ஸாக்ஷியாக (கண்காணிப்பாளராக) இருப்பவர்.

112. गजकर्णकः கஜகர்ணக:

யானையினுயிடய செவிகளைப் போன்ற செவிகளை அடைந்தவர்

113. गणाधिराजः கணாதிராஜ:

"ச்லேஷம்", "ப்ரஸாதம்" முதலிய குணங்கள், "வைதர்பீ", "கௌடீ" முதலிய ரீதிகள், "யமகம்", "உபமை" முதலான சொற்களுடையவும், பொருள்களுடையவும் அலங்காரங்கள் (அணிகள்), "சிருங்காரம்", "வீரம்" முதலிய ரஸங்கள் எனப்படும் கூட்டங்கள் எங்கெந்த இலக்கியங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றனவோ அத்தகைய இலக்கியங்களால் வருணிக்கப்படுகின்றவர்.

114. विजयस्थिरः விஜயஸ்திர:

தன்னைப் பஜிக்கும் பக்தர்களுக்கு வெற்றியையும், அதற்கு நிலையான தன்மையையும் அளிப்பவர்.

115. गजपतिध्वजी கஜபதி த்வஜீ

சிறந்த யானையைக் கொடியில் அடையாளமாகக் கொண்டவர்.

116. देवदेव: தேவதேவ:

இந்திரன் முதலான வானவர்களாலும் பூஜிக்கப்படுகின்றவர்.

117. स्मरप्राणदीपक: ஸ்மரப்ராண தீபக:

சிவனுல் எரிக்கப்பட்ட காமனை உயிரைக் கொடுத்து பிழைப்பு ஊட்டியவர்.

118. वायुकीलक: வாயுகீலக:

ஒன்பது துவாரங்கள் (ஓட்டைகள்) கொண்ட மானிட உடல்-களிலிருந்து காற்று வடிவமான உயிர்கள் வெளியே செல்லாமல் நிறுத்தி வைப்பவர்.

119. विपश्चिद्वरद: விபச்சித்வரத:

"விபச்சித்" எனப்படும் வேந்தனுக்கு விரும்பியவற்றை அளித்தவர்.

120. नादोन्नादभिन्नबलाहक: நாதோன்னுத பின்ன பலாஹக:

சிறிதும் பெரிதுமான தன்னுடைய ஒலிகளால் வானத்திலுள்ள மேகங்களைக் கலையும்படி செய்தவர்.

121. वराहरदन: வராஹரதன:

யஜ்ஞ வராஹத்தின் தித்திப் பல்லின் அழகைக் குறைக்கும் அளவிற்கு அழகு வாய்ந்த ஒற்றைத் தந்தத்துடன் கூடியவர் (பவி-ஷ்ய புராணத்தில் இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது.)

122 मृत्युञ्जय: மிருத்யுஞ்ஜய:

நூறுவயது நிறம்பியபின், காலத்தில் உயிர்துறப்பதையும் இல்லாமல் செய்பவர். அல்லது கவனக்குறைவை அகற்றுபவர். [மஹாபாரதத்தில் (ப்ரமாதம்) கவனக்குறைவு ம்ருத்யுவாகும் என்று ஸநத்ஸுஜாதர் த்ருதராஷ்டிரனுக்கு உபதேசித்திருப்பது கவனத்திற்-குரியதாகும்.]

123: व्याघ्राजिनाम्बर: வ்யாக்ராஜினும்பர:

புலித்தோலை ஆடையாக உடுத்தி இருப்பவர்.

124. इच्छाशक्तिधरः இச்சாசக்திதர:

இவ்வுலகத்தைப் படைப்பதற்குக் காரணமான இச்சை (விருப்பம்) எனப்படும் சக்தியை அடைந்தவர்.

125. देवतात्मा தேவதாத்மா

அஸுரர்களிடமிருந்து அச்சமுற்ற வானவர்கள் அனைவரையும் காப்பாற்றுகின்றவர்.

126. दैत्यविमर्दनः தைத்யவிமர்தன:

தேவர்களின் பகைவர்களான அஸுரர்களை நாசம் செய்பவர்.

127. शम्भुवक्त्रोद्भवः சம்புவக்த்ரோத்பவ:

பரமசிவனுடைய முகத்திலிருந்து அவதரித்தவர்.

(கணேசபுராணம் உபாஸனுகாண்டம் 45 வது அத்யாயம் பார்க்க)

128. शम्भुकोपहा சம்புகோபஹா

குழந்தைப் பருவத்திற்குரிய பாலலீலைகளால் தந்தை பரமசிவனுடைய சினத்தைத் தணித்தவர்.

129. शम्भुहास्यभूः சம்புஹாஸ்யபூ:

அறிவில்லாதவனைப் போன்று பலவிதமான வேடிக்கைகளைப் புரிந்து மஹாதேவனை நகைக்கும்படி செய்தவர்.

130. शम्भुतेजाः சம்புதேஜா:

பரமசிவனுடைய மஹிமை அனைத்துடன் கூடியிருப்பவர்.

துராஸனுடைய துன்பம் தாளாத தேவர்களின் முறையீட்டைக் கேட்டு சினங்கொண்ட பார்வதீ தேவியின், வாய், மூக்கு, கண் இவைகளிலிருந்து ஒளி வடிவமாக விநாயகர் தோன்றினுர்

'तस्याः क्रोधेन तप्ताया निःश्वसन्त्याः पुनःपनः ।
आस्यान्नासांपुटान्नेत्रान्निःसृतं तेज उत्तमम्
प्रत्याहतदृशः सर्वे ददृशुः ज्ञानचक्षुषा
वैनायकीं महामूर्ति दशहस्तां तमोनुदाम्"

என்று கணேசபுராணம் உத்தரகண்டம் 40 வது அத்யாயம் கூறுகிறது.

131. शिवाशोकहारी சிவாசோகஹாரீ

மஹிஷாஸுரன் முதலிய கொடியவர்களை அழிப்பதற்கான போரில் ஈடுபட்டிருக்கும் பார்வதீதேவிக்குச் சிறிது உத்ஸாஹம் குறைந்த-போது அதை அகற்றி அளவில்லாத பராக்ரமத்தை வளர்த்து அன்னையின் சோகத்தைப் போக்கடித்தவர்.

132. गौरीसुखावहः கௌரீ ஸுகாவஹ:

தவம்புரிந்து கொண்டிருக்கும் கௌரிக்கு ஸந்தோஷத்தை அளித்தவர்.

133. उमाङ्कमलजः உமாங்க மலஜ:

பார்வதீதேவியின் கைகளில் உண்டான வியர்வை ஜலத்தி-னின்றும் பிரித்த சிறிய மண்ணிலிருந்து தோன்றியவர்.

("ஒரு ஸமயம் தன் ஆணையை மீருது பணிவிடை செய்யும் புதல்-வனை உண்டுபண்ண எண்ணிய பார்வதி தன் கை வியர்வை ஜலத்திலிருந்த மண்ணம்சத்தை ஒரு புருஷக் குழந்தையாகப் படைத்தார்." என்று एवं विचार्य सा देवी करयोर्जलम्भवम् । पङ्कमुत्सार्य तेनैव निर्ममे पुत्रकं शुभम्" ।। ஏவம் விசார்ய ஸாதேவீ கரயோர் ஜலஸம்பவம் பங்கமுத்ஸார்ய தேனைவ நிர்மமே புத்ரகம் சுபம்" சிவபுராணம் ஞானஸம்ஹிதை 32 ஆம் அத்யாயம் கூறியிருப்பது பிரமாணமாகும்.)

134. गौरीतेजोभूः கௌரீ தேஜோபூ:

பார்வதீதேவியின் முகத்திலிருந்து புறப்பட்ட ஒளிக்கூட்டத்தில் தோன்றியவர் அல்லது மஹிஷாஸுரனை நாசம் செய்வற்கு முற்பட்ட பார்வதீ தேவியிடம் ஒன்று சேர்ந்தவைகளான பிரும்மா, விஷ்ணு முதலிய தேவர்களின் தேஜஸ்ஸிற்கு ஆதாரமாக இருந்தவர்.

135. स्वर्धुनीभवः ஸ்வர்துனீபவ:

கங்கையில் தோன்றிய கார்த்திகேயனின் வடிவமாக இருப்பவர். அல்லது கங்காநதியை தோறறிவைத்தவர்.

[குறிப்பு: 136 முதல் 176 வரை உள்ள நாமாக்கள் உலகங்கள் அனைத்தையுமே தனது உருவமாகக் கொண்டவரான (விராட்ரூபரான விநயகப் பெருமானின் பெருமையைப் போற்றுகின்றன.]

136. यज्ञकाय: யஜ்ஞகாய:

அச்வமேதம் முதலிய வேள்விக் கூட்டத்தை உடலாகக் கெண்டவர்.

137. महानाद: மஹாநாத:

वषट् "வஷட்," अस्तु श्रौषट् அஸ்து ச்ரௌஷட்", ये यजामहे யே யஜாமஹே, 'आश्रावय" ஆச்ராவய", என்று அடிக்கடி யாகங்களில் ருத்விக்குகளால் உரக்கக் கூறப்படும்போது ஏற்படும் பெரிய ஒலிகளின் வடிவமானவர்.

138. गिरिवर्ष्मा கிரிவஷ்ர்மா

மலைகளை உடலாக அமைந்தவர்.

139. शुभानन: சுபாநந:

உயிரினங்களின் உடல்களிலிருந்து உயிர் (பிராணன்) வெளிக் கிளம்பியவுடன் அவ்வுடல்கள் அமங்கலமாகின்றன. கண், காது, கை, கால் முதலிய உறுப்புகள் உடல்களை விட்டு அகன்றிடினும் அவைகள் உடல்களை அசுபமாக்குவதில்லை. ஆகவே ப்ராணனே சுபனுகிருன். எங்கும் நிறைந்திருக்கும் சுபனுன ஸமஷ்டி பிராணனுக்கும் பிராணனுக இருந்து அதனைப் படைத்தவர்.

140. सर्वात्मा ஸர்வாத்மா

ஸகல பொருள்களிலும் நிறைந்திருப்பவர். सर्वं खल्विदं ब्रह्म. "ஸர்வம் கல்விதம் பிரம்ம" என்ற சாந்தோக்யோபநிஷத் வாக்யம் இதற்கு மூலப் பிரமாணமாகும்.)

141. सर्वदेवात्मा ஸர்வதேவாத்மா

தேவர்கள் அனைவரையும் தனது உடலில் உறுப்புகளாகக் கொண்டவர்.

142. ब्रह्ममूर्धा பிரும்மமூர்தா

நான்முகனைத் தலையாகக் கொண்டவர்: (ஸத்யலோகம் வரை வியாபித்துள்ள உடலை அடைந்தவர் என்பது கருத்து)

143. ककुप्श्रुति: ககுப்ச்ருதி:

திசைகளைச் செவியாக அடைந்தவர்.

144. ब्रह्माण्डकुम्भ: பிரும்ஹாண்ட குமப.

கவிழ்ந்திருக்கும் கொப்பரை போன்ற பிரும்மாண்டத்தை தனது பானை உடலில் தலையில் மேல் பாகத்திலுள்ள உறுப்பாகக் கொண்டவர்.

145. चिद्व्योमभाल: சித்வ்யோமபால:

பிரும்மாண்டத்தின் மேல் பாகத்தில் உள்ளே நிறைந்திருக்கும் சிதாகாசத்தை நெற்றிப் பிரதேசமாகக் கொண்டவர்.

146. सत्यशिरोरुह: ஸத்ய சிரோருஹ;

ஸத்ய லோகத்தைத் (பூமியிலிருந்து மேலே ஏழாவதாக இருக்கும் பிரம்ம லோகத்தை) தலைமுடிகளாகக் கொண்டவர்.

147. जगज्जन्मलयोन्मेषनिमेष: ஜகஜ்ஜன்மலயோன்மேஷ நிமேஷ:

இமைத்தல் என்னும் செயல் நிகழும்போது கண்ணைத் திறந்து உலகத்தைப் படைக்கவும், கண்ணை மூடி உலகை அழிக்கவும் செய்பவர்.

148. अग्न्यर्कसोमदृक् அக்ன்யர்க ஸோமத்ருக்

அக்நி, ஸூர்யன், சந்திரன் இவர்களை முறையே தன்னுடைய நெற்றிக்கண், வலக்கண், இடக்கண் ஆகியவைகளாகக் கொண்டவர்

149. गिरीन्द्रैकरद: கிரீந்த்ரைகரத:

தங்கமலை எனப்படும் மேருமலையை வெளியில் காணப்படும் பருமனான தனது முக்கியமான தந்தமாகக் கொண்டவர்.

150. धर्माधर्मोष्ठ: தர்மாதர்மோஷ்ட:

புண்ணியத்தை மேலுதடாகவும், பாவத்தைக் கீழுதடாகவும், கொண்டவர். (धर्मोत्तरोष्ट:, दुरिताधरोष्ट: "தர்மோத்தரோஷ்டோ துரிதாதரோஷ்ட:" என்ற ஸ்ம்ருதி வசனம் இதற்கு மூலமாகும்)

151. सामबृंहित: ஸாமப்ருஹ்மித:

ஸாமவேதத்தை ப்ரும்ஹிதம் (யானையின் சப்தம்) எனப்படும் தன்னுடைய ஒலியாகக் கொண்டவர்.

152. ग्रहर्क्षदशन: க்ரஹர்க்ஷதசந:

ஸூர்யன் முதலிய கிரஹங்களேயும், கிருத்திகை முதலிய நக்ஷத்திரங்களேயும் வாயில் இருக்கும் பற்களாக அடைந்தவர்.

153. वाणीजिह्व: வாணீஜிஹ்வ:

ருக்வேதம், யஜுர்வேதம், அதர்வவேதம், இதிஹாஸம், புராணம், ந்யாயம், மீமாம்ஸை முதலிய சப்தராசியை நாக்காகக் கொண்டவர்

154. वासवनासिक: வாஸவநாஸிக:

இந்திரனே மூக்காக அடைந்தவர்.

155. कुलाचलांस: குலாசலாம்ஸ:

''விந்தியம்'' முதலிய குல பர்வதங்களேத் தன்னுடைய தோளாக அடைந்தவர்.

156. सोमार्कघण्ट: ஸோமார்க்க கண்ட:

யானையின் உடலில் கழுத்திற்கு மேல் உயர்ந்து பருமனுக இருக்கும் இரண்டு மாம்ஸ பிண்டங்களுக்குக் கண்டிகை எனப் பெயர். சந்திரனேயும் ஸூர்யனேயும் அத்தகைய கண்டிகையாக அடைந்தவர். இங்கே சிலர், ஸ்ரீகணேசரின் யானை உடலில் இரண்டு பக்கங்களிலும் தொங்குகின்ற மணிகளாக ஸூர்யனும் சந்திரனும் இருக்கின்றனர் என்று கூறுகின்றனர்.

157. रुद्रशिरोधर: ருத்ரசிரோதர:

ஸ்ரீ ருத்ர தேவனே கழுத்தாகக் கொண்டவர்.

158. नदीनदभुज: நதீநத புஜ:

கங்கை, யமுனே முதலான (கிழக்கு, வடக்கு திக்குகளே நோக்கி ஓடுகின்றவைகளான) நதிகளேயும், சோணம் முதலிய (மேற்கு திசையை நோக்கிப் பிரவஹிக்கின்ற) நதங்களேயும் கைகளாகக் கொண்டவர்.

159. सर्पाङ्गुलीक: ஸர்பாங்குலீக:

ஆதிசெஷன் முதலிய பெரிய பாம்புகளே விரல்களாகச் செய்து கொண்டவர்.

160. तारकानख: தாரகாநக:

துருவன் முதலிய தாரைகளை (கை, கால் விரல்களிலுள்ள) நகங்களாக அமைத்துக் கொண்டவர்.

161 भ्रूमध्यसंस्थितकर: ப்ரூமத்யஸம்ஸ்திதகர:

புருவங்கள் இரண்டும் மூக்கின் மேல் பக்கமும் சேருமிடமான, புருவங்களின் நடுவில் இருப்பதாக மறைகளால் பறை சாற்றப்படும் தத்துவத்தையே துதிக்கையாகச் செய்து கொண்டவர்.

162 ब्रह्मविद्यामदोत्कट: பிரம்மவித்யா மதோத்கட:

இவ்வுலகங்களின் தோற்றத்தையே மறக்கும்படி செய்கின்ற அறிவுவடிவமான பரபிரும்மானந்தத்தை இரண்டு கன்னப் பிரதேசங்களிலும் வழிந்து ஓடும் மதஜலப்பெருக்காகக் கொண்டவர்.

163. व्योमनाभि: வ்யோமநாபி:

மண்ணுலகின் மேல் துவாரம் (துளை) போன்று காணப்படும், வானத்தை (அந்தரீக்ஷ லோகத்தை, புவர்லோகத்தை) தன்னுடைய மிகவும் ஆழமுள்ள தொப்புளாகக் கொண்டவர்.

164. श्रीहृदय: ஸ்ரீ ஹ்ருதய:

ருக், யஜுஸ், ஸாம என்ற மூன்று வேதங்களாகிற அழிவில்லாத ஐச்வர்யத்தை (ஸ்ரீயை) உள்ளமாகக் கொண்டவர். **ऋचो यजूंषि समानि सा हि श्रीरमृता सताम्** "ருசோ யஜூம்ஷி ஸாமானி ஸாஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்" என்ற வேதவசனம் இதற்குப் பிரமாணமாகும்.

165. मेरुपृष्ठ: மேருப்ருஷ்ட:

மேரு மலையை உடலின் பின்பாகமாக அமைத்துக் கொண்டவர்

166. अर्णवोदर: அர்ணவோதர:

கடல்கள் அனைத்தையும் வயிற்றினில் உள்ளிருக்கும் நீராகக் கொண்டவர்.

167. कुक्षिस्थयक्षगन्धर्वरक्ष:किन्नरमानुष:

குக்ஷிஸ்தயக்ஷகந்தர்வரக்ஷ:கிந்நரமானுஷ:

யக்ஷர்கள், கந்தர்வர்கள், அரக்கர்கள், கிந்நரர்கள், மனிதர்கள்

ஆகியவர்களை வயிற்றின் உள்ளிருக்கும் நாடி நரம்புகளாகக் கொண்டவர்.

168. पृथ्वीकटि: ப்ருத்வீகடி:

இம்மண்ணுலகைத் தன்னுடைய இடையாகக் கொண்டவர்.

169. सृष्टिलिङ्ग: ஸ்ருஷ்டிலிங்க:

ஆண் பெண் உறவால் தோன்றிய உயிரினங்களைத் தனது குஹ்யேந்திரியமாகக் (ஆண் குறியாக) கொண்டவர்,

170. शैलोरु: சைலோரு:

(மண்ணுலகைத் தாங்கிக் கொண்டிருக்கும்) மலைகளைத் தன்னுடைய முழங்கால்களாகக் கொண்டவர்.

171. दस्रजानुक: தஸ்ரஜானுக:

அச்வினீ தேவர்களைத் தனது முழங்கால்களாகக் கொண்டவர்.

172. पातालजङ्घ: பாதாலஜங்க:

மண்ணுலகின் கீழே இருக்கும் பாதாளத்தை (அதலம், விதலம், ஸுதலம், ரஸாதலம், தலாதலம், பாதாலம் ஆகிய ஏழு லோகங்களை) கணைக்காலாகக் (கால்மணிக்கட்டாக) கொண்டவர்.

173. मुनिपात् முநிபாத்

பாதாளத்தின் கீழே அதை இருப்பிடமாகக் கொண்டு கடுந்தவம் புரிந்து கொண்டிருக்கும் முனிவர்களை உள்ளங்கால்களாகக் கொண்டவர்.

174. कालाङ्गुष्ठ: காலாங்குஷ்ட:

பித்ருக்களின் உலகத்திற்கு அரசனான யமதர்மராஜனை கால் கட்டை விரலாகக் கொண்டவர்.

175. त्रयीतनु: த்ரயீதனு:

மூன்று வேதங்களை (இங்கு முன்பு கூறப்படாதவைகளான) மீதமுள்ள தன்னுடைய உறுப்புகளாகக் கொண்டவர்.

176. ज्योतिर्मण्डललाङ्गूल: ஜ்யோதிர்மண்டல லாங்கூல:

''சிம்சுமாரம்'' என புராணத்தில் புகழப்படுகின்ற, துருவன்

முதலிய ஜயோதிர் மண்டலத்தை, பிரும்மாண்டத்தின் மேல் பாகத்தை தொட்டுக் கொண்டு உயர்ந்திருக்கும் தனது யானை உடலிலிருக்கும் வாலாகச் செய்து கொண்டவர்.

177. हृदयालाननिश्चल: ஹ்ருதயாலான நிச்சல:

யானை வடிவமான தனது ஸ்வரூபத்தை இடைவிடாமல் வழிபடுகின்ற பக்தர்களின் உள்ளங்களைத் தன் யானை வடிவத்தைக் கட்டுவதற்கான யானைக் கொட்டிலாக அமைத்து, அதில் கட்டுண்டு அசையாமல் இருப்பவர்.

178. हृत्पद्मकर्णिकाशालिवियत्केलिसरोवर:

ஹ்ருத் பத்மகர்ணிகாசாலி வியத்கேளி ஸரோவர:

பக்தனுடைய உள்ளத் தாமரையின் உள்ளிருக்கும் தகராகாசத்தை (சிறிய ஆகாசத்தை) யானை வடிவத்துடன் தான் குளித்து, களித்து, கேளிக்கைகள் புரியும் குளமாகக் கொண்டவர்.

179. सद्भक्तध्याननिगड: ஸத்பக்த த்யான நிகட:

சிறந்த பக்தர்களால் தொடர்ச்சியாய் நிகழ்த்தப்படும் தியானத்தை, யானை வடிவனான தன்னை கட்டுவதற்குறிய சங்கிலியாகக் கொண்டவர் (எங்கும் நிறைந்திருப்பவரானாலும் கணேசர் அடியார்களின் பக்தி நிறைந்த உள்ளத்தில் கட்டுண்டவர் போன்று காக்ஷியளிப்பவர் என்பது கருத்து)

180. पूजावारीनिवारित: பூஜாவாரீநிவாரித:

யானையை அங்குமிங்கும் அலையாதபடி கட்டிப் போடுவதற்கு உபயோகிக்கப்படும் பெரிய சங்கிலியானது வாரீ எனப்படும். பக்தர்களுடைய பூஜையை அத்தகைய வாரீயாகச் செய்து கொண்டு, தடை செய்யப்பட்டவர் போல் பூஜையில் ஈடு பட்டவராய் வெளியில் செல்வதில்லை. (பக்தர்களால் செய்யப்படும் பூஜையில் கணேசர் எப்போதும் பிரஸன்னமாய் இருக்கிறார் என்பது கருத்து)

181. प्रतापी ப்ரதாபீ

(நிகரற்ற) பராக்ரமம் பொருந்தியவர்.

182. **कश्यपसुत:** கச்யபஸுத:

நான்முகன் கூறியபடி, கச்யப முனிவருடைய மனைவி அதிதி தேவியினுடைய வயிற்றிலிருந்து பத்தாவது மாதத்தில் தோன்றியவர். 'ततो बहुतिथे काले दिति: सा गर्भमादधे । सम्पूर्णे नवमे मासे सुषुवे पुत्रमुत्तमम् ॥ ब्रह्मवाक्यादभूत् ख्यातो नाम्ना कश्यपनन्दन:'' என்று கணேச புராணம் உத்தரகண்டம் 6வது அத்யாயமறிவிக்கின்றது.]

183. **गणप:** கணப:

பெரிய வேள்விகளை நடத்தி முடிக்கும் 'அத்வர்யுகணம்', 'ஹோத்ரு கணம்', உத்காத்ரு கணம்', 'பிரும்மகணம்' என்ற நான்கு கணங்களைக் காப்பாற்றுகின்றவர். (கணம் என்பது நான்கு நபர்கள் அடங்கிய கூட்டமாகும்)

184. **विष्टपी** விஷ்டபீ

உலகங்களைத் தாங்கிக் கொண்டிருப்பவர்.

185. **बली** பலீ

உயிர்களின் உடல்களிலும், புலன்களிலும் இருக்கும் வலிமை அனைத்தையும் குன்றுமல் வளரும்படி செய்யுமளவிற்கு வலிமை நிறைந்தவர்.

186. **यशस्वी** யசஸ்வீ

புண்ணியத்தைத் தரும் புகழுடன் கூடியவர்.

187. **धार्मिक:** தார்மிக:

நல்ல காரியங்களை நாட்டில் வளரும்படி செய்பவர்.

188. **स्वौजा:** ஸ்வௌஜா:

மிகவும் மங்களகரமான ஓஜஸ்ஸை, தேஜஸ்ஸை (எட்டாவது தாதுவை) பெற்றிருப்பவர்.

189. **प्रथम:** ப்ரதம:

மாந்தர்கள் அனைவராலும் ஆரபிக்கப்படும் எல்லா கார்யங்களிலும் முதலில் பூஜை செய்யப்பட வேண்டியவர்.

190. प्रथमेश्वर: ப்ரதமேச்வர:

தேவர்களுள் முதல்வர்கள் எனப்படும் சிவன், விஷ்ணு, பிரும்மா ஆகிய மூன்று பேர்களுக்கும் தலைவராக இருப்பவர்.

[குறிப்பு:- மஹாகணபதியின் இருப்பிடமான மணித்தீவு, கல்பகவனம், இரத்தின மண்டபம், இரத்தின ஸிம்ஹாஸனம் இவைகளை கீழ்கண்ட நான்கு நாமாக்கள் உரைக்கின்றன]

191. चिन्तामणिद्वीपपति: சிந்தமணித்வீப பதி:

(ஓங்கார வடிவமான கரும்புச்சார் கடலில் இருக்கும்) சிந்தாமணித் தீவில் அதன் தலைவனாக வஸிப்பவர்.

192. कल्पद्रुमवनालय: கல்பத்ரும வனாலய:

(மணித்தீவிலிருக்கும்) கல்பக மரங்களால் மனோகரமான உத்யாந வனத்தில் வசிப்பவர்.

193. रत्नमण्टपमध्यस्थ: ரத்னமண்டபமத்யஸ்த:

(கல்பகச்சோலையில்) இரத்தினங்களால் இழைக்கப்பட்ட அழகிய மண்டபத்தின் நடுவே இருப்பவர்.

194. रत्नसिंहासनाश्रय: ரத்ன ஸிம்ஹாஸனாச்ரய:

(கல்பக மரத்தின் அடியில்) இரத்தின மயமான சிங்காஸனத்தின் மேல் இருப்பவர்.

195. तीव्राशिरोधृतपाद: தீவ்ராசிரோத்ருதபத:

தீவ்ரை எனப்படும் பீடசக்தியால் தலையால் தாங்கப்படும் திருவடியை உடையவர்.

196. ज्वालिनीमौलिलालित: ஜ்வாலினீமௌலி லாலித:

ஜ்வாலினீ எனப்படும் பீடசக்தியால் தலைவணங்கிப் பூஜிக்கப் பட்டவர்.

197. नन्दानन्दितपीठश्री: நந்தாநந்தித பீடஸ்ரீ:

நந்தை என்ற பீடசக்தியால் அழகுள்ளதாகச் செய்யப்பட்ட பீடத்தை அலங்கரிப்பவர்

198. भोगदाभूषितासन: போகதாபூஷிதாஸன:

போகதை எனப்படும் சக்தியால் மனதைக் கவரும்படி சோபனமாகச் செய்யப்பட்ட பீடத்தில் விளங்குபவர்.

199. सकामदायिनीपीठ: ஸகாமதாயிநீபீட:

காமதாயினீ என்ற பீடசக்தியால் தாங்கப்படும் பீடத்தில் இருப்பவர்.

200. स्फुरदुग्रासनाश्रय: ஸ்புரதுக்ராஸனுச்ரய:

ஒளி மிகுந்த உக்ரை எனப்படும் பீடசக்தியால் நன்கு பிரகாசிக்கின்ற பீடத்தில் இருப்பவர்.

201 तेजोवतीशिरोरत्नम् தேஜோவதீ சிரோரத்னம்

தேஜோவதீ என்னும் பீடசக்தியின் தலையில் இரத்தினம் போன்று துலங்குபவர்

202. सत्यानित्यावतंसित: ஸத்யாநித்யாவதம்ஸித:

ஸத்யை எனப்படும் பீடசக்தியால் எப்பொழுதும் சிரஸ்ஸின் அழகிற்காக அணியப்படும் மலர்மாலை போன்று தலைமீது தாங்கப்படும் திருவடிகளை உடையவர்.

203. सविघ्ननाशिनीपीठ: ஸவிக்னநாசினீபீட:

விக்னநாசினீ என்ற பீடசக்தியால் தாங்கப்படும் பீடத்தில் இருப்பவர்.

204. सर्वशक्त्यम्बुजाश्रय: ஸர்வசக்த்யம்புஜாச்ரய:

தீவ்ரை முதல் விக்னநாசினீ முடிய எல்லாவிதமான (ஒன்பது) சக்திகளால் (தாமரைப் பூவின் எட்டிதழ்களிலும், அதன் உள்ளிலுள்ள மொட்டிலும் இருப்பவைகளால்) நிறைந்திருக்கும் எட்டிதழ் தாமரைப் பூவில் இருப்பவர்.

205. लिपिपद्मासनाधार: லிபிபத்மாஸனுதார:

முன்பு கூறப்பட்ட தாமரைப் பூவில் கிழக்கிலிருந்து ஐந்து இதழ்களில், முறையே 'க' முதல் ஐந்து, 'ச' முதல் ஐந்து, 'ட' முதல் ஐந்து, 'த' முதல் ஐந்து, 'ப' முதல் ஐந்து, என இருபத்தைந்து எழுத்துக்கள், ஆறுவது, ஏழாவது, எட்டாவது இதழ்களில்,

முறையே, ய, ர, ல, வ என்று நான்கு, ச, ஷ, ஸ என மூன்று, ஹ, க்ஷ என்று இரண்டு என ஒன்பது எழுத்துக்கள், பூவின் உள்ளே மொட்டைச் சுற்றித் தொட்டிருக்கும் எட்டு கிஞ்ஜல்கங்களிலும், ஒவ்வொன்றிலும் இரண்டு வீதம் அகரம் முதலான பதினாறு உயிரெழுத்துக்கள் இவ்விதம் வடமொழியிலுள்ள ஐம்பது உயிர்மெய் எழுத்துக்களால் நிறைந்த தாமரைப் பூவை இருப்பிடமாகக் கொண்டவர்.

206. **वन्हिधामत्रयाश्रय:** வஹ்னிதாமத்ரயாச்ரய:

எட்டிதழ் தாமரைப் பூவின் நடுவேயுள்ள மொட்டின் மேல், ஒன்றின்மேல் ஒன்றாய் இருக்கும் ஸூர்யமண்டலம், அக்நிமண்டலம் சந்திரமண்டலம் எனப்படும் மூன்று மண்டலங்களின் மேல் கோயில் கொண்டிருப்பவர்.

[குறிப்பு: 207 முதல் 242 வரை உள்ள நாமாக்கள் மஹாகணபதியின் திருவடி முதல் திரு முடிவரை உறுப்புகள், ஆடை, ஆபரணம், ஆயுதம், திருமேனியின் நிறம் முதலானவைகளின் மஹிமையை வருணிக்கின்றன.]

207. **उन्नतप्रपद:** உன்னதப்ரபத:

(ஆமையின் மேல் பக்கம் போன்று) மேலே உயர்ந்த திருவடியை உடையவர்.

"**कूर्मपृष्ठजयिष्णुप्रपदान्विता**" "கூர்மப்ருஷ்ட ஜயிஷ்ணுப்ரபதாந்விதா" என்ற லலிதா ஸஹஸ்ரநாமம் பார்க்க)

208. **गूढगुल्फ:** கூடகுல்ப:

(வெளியில் தெரியாமல்) உள்ளே மறைந்திருக்கும் கால்மணிக் கட்டுகளை உடையவர்.

209. **संवृत्तपार्ष्णिक:** ஸம்வ்ருத்தபார்ஷ்ணிக:

(மாம்ஸபுஷ்டியுடன் கூடியிருப்பதால்) நன்கு சேர்ந்து வட்டமாய் இருக்கும் கால்மணிக்கட்டின் கீழ்பாகத்தை உடையவர்,

210. पीनजङ्घः பீனஜங்க:

வேண்டிய அளவிற்கு மாம்ஸ வளரச்சியை அடைந்து (கட்டி-யாகவும்) பருமனுகவும் உள்ள கணுக்கால்களை உடையவர்.

211. श्लिष्टजानुः ச்லிஷ்டஜானு:

கால்களையும், துடைகளையும் சேர்த்து வைக்கின்றதும், ஒன்று-போல் சேர்ந்து அழகு பொருந்தியிருப்பதுமான முழங்கால்களை உடையவர்.

212. स्थूलोरुः ஸ்தூலோரு:

(யானையின் துதிக்கை, அம்பராத்துணி, வாழைமரத்தின் கீழ்-பாகம் போன்ற உருவமுள்ள) பருமனுன இரண்டு தொடைகளை உடையவர்.

213. प्रोन्नमत्कटिः ப்ரோன்னமத்கடி:

(அழகிய இடையுடன் கூடிய தன்னை) பணிவுடன் வணங்கி வழி படுகின்ற அடியார்களுக்கு, ஓங்கி உயர்ந்து வளரும் நிலையை அளிக்கும் இடையை உடையவர்.

214. निम्ननाभिः நிம்நநாபி:

மிகவும் ஆழமுள்ள தொப்புள் ப்ரதேசத்தை உடையவர்.

215. स्थूलकुक्षिः: ஸ்தூல குக்ஷி:

பருத்த வயிற்றை உடையவர்.

216. पीनवक्षाः பீனவக்ஷா:

வலிமையுள்ள மார்பை உடையவர்.

217. बृहद्भुजः ப்ருஹத்புஜ:

முழங்கால் வரை நீண்டவைகளும், உருண்டு பருத்திருப்பவை-களுமான கைகளை உடையவர்.

218. पीनस्कन्धः பீனஸ்கந்த:

மாம்ஸ புஷ்டியுள்ள தோள்களால் அழகியவர்.

219. कम्बुकण्ठ: கம்புகண்ட:

வலம்புரி சங்கைப் போன்று மூன்று வரைகளுடன் கூடியதும் அழகியதுமான கழுத்துடன் விளங்குபவர்.

220. लम्बोष्ठ: லம்போஷ்ட:

தொங்குகின்ற கீழ் உதடுடன் கூடியவர் (யானை முகத்தோரான கணேசருக்கு யானையைப் போன்று கீழ் உதடு தொங்குகின்றது என்பது கருத்து)

221. लम्बनासिक: லம்பநாஸிக:

தொங்குகின்ற மூக்கை உடையவர். (யானை முகத்தோரான கணபதிக்கு மூக்கின் ஸ்தானத்தில் இருக்கும் துதிக்கையானது தொங்கிக் கொண்டிருப்பதால் அவ்விதம் கூறப்பட்டது.)

222. भग्नवामरद: பக்நவாமரத:

முனையில் ஒடிந்திருக்கும் இடது பக்கத்திலிருக்கும் தந்தத்துடன் கூடியவர்.

223. तुङ्गसव्यदन्त: துங்கஸவ்யதந்த:

உயர்ந்து நன்கு துலங்குகின்ற வலது பக்கத்திலிருக்கும் தந்தத்துடன் கூடியவர்.

224. महाहनु: மஹாஹநு:

நன்கு பருத்து மனத்தைக் கவரும் அழகு வாய்ந்த கன்னப் பிரதேசத்தை அடைந்தவர்.

225. ह्रस्वनेत्रत्रय: ஹ்ரஸ்வநேத்ர த்ரய:

(யானையின் உடலுக்கேற்ப பெரியதாக இல்லாமல்) மிகச்சிறியவைகளான மூன்று கண்களைப் படைத்தவர்

226. शूर्पकर्ण: சூர்பகர்ண:

முறத்தின் உருவத்தை ஒத்த செவிகளை அடைந்தவர்.

227. निबिडमस्तक: நிபிடமஸ்தக:

(பாறைக்கல்லைப் போன்றும், இரும்புக் கட்டியைப் போன்றும்) மிகவும் கட்டியான தலையைப் பெற்றவர்

228. स्तबकाकारकुम्भाग्र: ஸ்தபகாகாரகும்பாக்ர:

மலர்க் கொத்தைப் போன்று அழகு வாய்ந்த தலையின் முன்-பாகத்தை உடையவர்.

229. रत्नमौलि: ரத்னமௌலி:

இரத்தினங்கள் பதித்து நன்கு துலங்குகிற சிறந்த கிரீடம் தரித்திருப்பவர்.

230. निरङ्कुश: நிரங்குச:

(தலையில் குத்தி யானையை அடக்குவதற்கு உபயோகிக்கப்படும்) அங்குசம் எனப்படும் மாவட்டியின் சேர்க்கையை அடையாத யானைத் தலையை உடையவர் அல்லது ஒருவருக்கும் அடிமை இல்லாதவர்.

231. सर्पहारकटीसूत्र: ஸர்பஹாரகடீஸூத்ர:

மாலையைப் போன்று (ஸர்பத்தை) பாம்பை வளையமாகச் செய்து இடுப்பில் அரைஞாணாகக் கட்டியிருப்பவர்.

232. सर्पयज्ञोपवीतवान् ஸர்பயஜ்ஞோபவீதவான்

இடது தோளிலிருந்து இடுப்பு வரை பாம்பை குறுக்காக மார்பில் யஜ்ஞோபவீதமாக (பூணூலாக) அணிந்திருப்பவர்.

233. सर्पकोटीरकटक: ஸர்பகோடீரகடக:

அரவத்தை கிரீடத்தில் அழகிற்காகவும், கைகளில் வளையல்-களாகவும் அணிந்திருப்பவர்.

234. सर्पग्रैवेयकाङ्गद: ஸர்பக்ரைவேயகாங்கத:

பாம்புகளை, கழுத்தில் அணியப்படும் அட்டிகை என்ற ஆபரணமாகவும், தோளில் தரிக்கப்படும் வளையல்களாகவும் செய்து கொண்டவர்.

235. सर्पकक्ष्योदराबन्ध: ஸர்பகக்ஷ்யோதராபந்த:

இடுப்பையும், வயிற்றையும் சுற்றி இரண்டு பாம்புகளை அணிந்திருப்பவர்.

236. सर्पराजोत्तरीयक: ஸர்பராஜோத்தரீயக:

அரவரசனாகிய வாஸுகியை உடலின் மேல் பாகத்தில் அங்கவஸ்திரமாகத் தரித்திருப்பவர்.

237. रक्त: ரக்த:
சிவந்த நிறத்துடன் கூடிய திருமேனியை உடையவர்.

238. रक्ताम्बरधर: ரக்தாம்பரதர:
சிவப்பான வஸ்திரத்தை உடுத்தியிருப்பவர்.

239. रक्तमाल्यविभूषण: ரக்தமால்யவிபூஷண:
சிவந்த நிறமுள்ள மலர்மாலையையும், பலவிதமான ஆபரணங்களையும் அணிந்திருப்பவர்.

240. रक्तेक्षण: ரக்தேக்ஷண:
சிவந்த கண்களை உடையவர்.

241. रक्तकर: ரக்தகர:
சிவந்த கைகளை உடையவர்.

242. रक्तताल्वोष्ठपल्लव: ரக்ததால்வோஷ்ட பல்லவ:
தளிர் போன்று சிவந்திருக்கும் தாடைகளையும், (கன்னங்களின் அடிப்பிரதேசங்களையும்) உதட்டின் முன்பக்கங்களையும் உடையவர்.
[குறிப்பு: 243 முதல் 247 வரை உள்ள ஐந்து நாமாக்கள் நல்லறிவைப் பெறுவதற்கு விருப்பமுள்ள அடியார்களுக்குத் தியானம் செய்வதற்குரிய உருவத்தை வருணிக்கின்றன]

243. श्वेत: ச்வேத:
வெண்மையான மேனியை உடையவர்.

244. श्वेताम्बरधर: ச்வேதாம்பரதர:
தூய வெண்மையான வஸ்திரத்தை உடுத்தியவர்.

245. श्वेतमाल्यविभूषण: ச்வேதமால்யவிபூஷண:
வெண்மை நிறமுள்ள பூமாலைகளையும், அணிகளையும் அணிந்திருப்பவர்.

246. श्वेतातपत्ररुचिर: ச்வேதாதபத்ரருசிர:
வெண்குடையின் அடியில் அழகாக வீற்றிருப்பவர்,

247. श्वेतचामरवीजित: ச்வேதசாமர விஜித:
வெண்சாமரங்களால் வீசப்பட்டவர்.

248. सर्वावयवसम्पूर्णसर्वलक्षणलक्षित:
ஸர்வாவயவஸம்பூர்ண ஸர்வலக்ஷணலக்ஷித:
தனது உடலில் உள்ள உறுப்புகள் அனைத்திலும் ஸாமுத்ரிக சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கும் எல்லாவிதமான இலக்கணங்களும் நிறைந்து விளங்குபவர்.

249. सर्वाभरणशोभाढ्य: ஸர்வாபரணசோபாட்ய:
ஒவ்வொரு உறுப்பிலும் அதற்குத் தகுந்த அழகிய அணிகளால் அலங்கரிக்கப்பட்டு மிக்க அழகுடன் பிராகசிப்பவர்.

250. सर्वशोभासमन्वित: ஸர்வசோபாஸமன்வித:
உடலின் ஒவ்வொரு உறுப்பிலும் 'லாவண்யம்' என வழங்கப்படும் இயற்கை அழகுடன் கூடியவர்.

251. सर्वमङ्गलमाङ्गल्य: ஸர்வமங்கலமாங்கல்ய:
கல்யாணங்களுக்குக் காரணமாக இருக்கும் பொருள்கள் அனைத்திற்கும் கல்யாணத்தை அளிப்பவர்.

252. सर्वकारणकारणम् ஸர்வகாரணகாரணம்
உலகங்கள் அனைத்திற்கும் மூலகாரணம் அவ்யக்தம் ஆகும். அதற்கும் காரணமாக கணபதி விளங்குகிறார். (அவ்யக்தத்தின் தோற்றத்திற்கும் இருப்பிற்கும் ஆதாரமாக விளங்குகிறார்)

253. सर्वैककर: ஸர்வதைககர:
யாவருக்கும் அனைத்தையும் வாரி வழங்குவதில் புகழ் பெற்ற கைகளை உடையவர்.

254. शार्ङ्गी சார்ங்கீ
ச்ருங்கமெனப்படும் விலங்கினத்தினுடைய கொம்பில் தயாரிக்கப்பட்ட வில்லையுடையவர்.

[குறிப்பு: 255 முதல் 264 வரை உள்ள பத்து நாமாக்கள் வரமஹா கணபதியின் பத்து கைகளில் தாங்கப்படும் ஆயுதம் முதலியவற்றை

வருணிக்கின்றன] 'बीजापूर-गदा-इक्षुकार्मुक रुजा-चक्र-अब्ज-पाश-उत्पल व्रीह्याग्र-स्वविषाण-रत्नकलश-प्रोद्यत्कराम्भोरुहः" என்ற வரமஹா கணபதி த்யான ச்லோகத்தில் கூறப்பட்டவைகளே மேலே வருணிக்கப்படுகின்றன.

255. बीजापूरी பீஜாபூரீ

மாதுலம் பழத்தைக் கையில் வைத்திருப்பவர்.

256. गदाधरः கதாதர:

கதையைத் தாங்கி நிற்பவர்.

157. इक्षुचापधरः இக்ஷுசாபதர:

இனிப்பான ரஸமுடைய கரும்பு எனப்படும் அழகிய கம்பு வடிவமான மரத்தை வில்லாகப் பிடித்திருப்பவர்.

258. शूली சூலீ

மேல் பாகத்தில் கூர்மையான மூன்று முனைகளுடன் கூடிய சூலம் எனப்படும் ஆயுதத்தை உடையவர்.

259. चक्रपाणिः சக்ரபாணி:

அநேகம் முனைகளுடன் கூடியதும் வட்டமாய் இருப்பதுமான சக்கரம் எனப்படும் ஆயுதத்தைக் கையில் ஏந்தியிருப்பவர்.

260. सरोजभृत् ஸரோஜப்ருத்

அழகிய தாமரை மலரை வைத்திருப்பவர்

261. पाशी பாசீ

(ஜீவ ராசிகள் அனைவருடையும் ஆசைகளின் வடிவமாய் இருக்கும் பாசத்தை (ஜீவர்களை அடிமையாக்கி ஆட்டிவைக்கும் கயிற்றை) தரிப்பவர். (லலிதா ஸஹஸ்ரநாமத்தில் "रागस्वरूपपाशाढ्या" "ராகஸ்வரூப பாசாட்யா" என்ற நாமம் இக்கருத்தை அறிவிக்கின்றது.)

262. धृतोत्पलः த்ருதோத்பல:

நீல நிறமுடைய நீலோத்பல மலரைத் தாங்கி நிற்பவர்.

263. शालिमञ्जरीभृत् சாலீமஞ்ஜரீப்ருத்

சம்பா நெல் கதிர்க் கொத்தைக் கையில் ஏந்தியிருப்பவர்.

264. स्वदन्तभृत् ஸ்வதந்தப்ருத்

முறிந்ததும், தன்னுடையதுமான தந்தத்தைத் தாங்கி நிற்பவர்.

[குறிப்பு: 265 முதல் 277 வரை உள்ள பதிமூன்று நாமாக்கள் மஹா கணபதியை பலவிதமான மந்திரங்களால் வழிபடுகின்ற அடியார்களுக்குத் தியானம் செய்யும்படி கூறப்பட்டுள்ள ஆயுதம் முதலியவைகளையும் சேர்த்து ஸ்ரீ கணேசரை வருணிக்கின்றன]

265. कल्पवल्लीधर: கல்பவல்லீதர:

தாமரை மலர் போன்ற கையில், கல்பகக் கொடியைத் தாங்கியிருப்பவர்.

266. विश्वाभयदैककर: விச்வாபயதைககர:

எங்கும், எப்போதும், எல்லாவற்றிலிருந்தும் அடியார்களுக்கு ஏற்படும் அச்சத்தை அகற்றி அவர்களைக் காப்பாற்றிய புகழ் பெற்ற கையை உடையவர்.

267. वशी வசீ

உலகம் அனைத்தையும் தனக்கு அடிமையாகச் செய்து கொண்டவர். (கணேசரின் விருப்பப்படியே இவ்வுலகம் அனைத்தும் இயங்குகிறது என்பது கருத்து)

268. अक्षमालाधर: அக்ஷமாலாதர:

மந்திர ஜபம் செய்வதற்குரிய அக்ஷமாலையை தருத்திருப்பவர். (வடமொழியில் 'அ' முதல் 'க்ஷ' வரை உயிரெழுத்துக்கள் பதினாறும், மெய்யெழுத்துக்கள் முப்பத்து நான்கும் சேர்ந்து ஐம்பது எழுத்துக்கள் உள்ளன. இம்மாத்ருகாக்ஷரங்களாகப் பாவனை செய்து ஐம்பது பளிங்குக்கற்களால் செய்யப்பட்ட மாலையே அக்ஷமாலை எனப்படும்)

269. ज्ञानमुद्रावान् ஞானமுத்ராவான்

வலது கையிலுள்ள ஆள்காட்டி விரலைக் கட்டை விரலுடன் சேர்த்து வைத்துக் கொண்டு ஞான முத்திரையுடன் விளங்குபவர்.

(மனிதன் ஒவ்வொருவனுடையவும் கைக்கட்டை விரலின் அளவே அவனுடைய ஜீவாத்மா என உபநிஷத் கூறுகிறது. எனவே, கட்டை விரலை ஜீவாத்மா என்று கொள்ள வேண்டும். ஆள்காட்டிவிரலை அசைத்து பிறரை அச்சமுறச் செய்வது பண்டிதனுக்கும் பாமரனுக்கும் இயற்கையாகும். எனவே ஆள்காட்டி விரலை உலகம் அனைத்தையும் பயத்துடன் இயங்கச் செய்யும் பரப்பிரம்மமாக, எண்ண வேண்டும். இவ்விரண்டு விரல்களின் சேர்க்கை ஜீவனுக்கும் பிரும்மத்திற்கும் உள்ள ஐக்யத்தை அறிவிப்பதாகும். இக்காரணத்தாலேயே இவ்விரு விரல்களின் சேர்க்கை ஞானமுத்திரை என அறிஞர்களால் வழங்கப்படுகின்றது) ('अङ्गुष्ठतर्जनीयोगमुद्राव्याजेन देहिनाम् । श्रुत्यर्थं ब्रह्मजीवैक्यं दर्शयन्नोवताच्छिवः।।'' "அங்குஷ்ட தர்ஜநீ யோகமுத்ரா வ்யாஜேன தேஹி நாம்| சுருத்யர்தம் பிரும்ம ஜீவைக்யம் தர்சயன்னோவதாச்சிவ:'' என்ற ஸ்லோகத்தில் ஞான முத்திரையின் பொருள் விளக்கப்பட்டுள்ளது)

270. मुद्गरायुध: முத்கராயுத:

அடியார்களுக்கு (இடையூற்றை அகற்றி) இன்பத்தைத் தருகின்ற தன்னுடைய மந்திரங்களையே ஆயுதமாக வைத்திருப்பவர். அல்லது மிகப் பெரியதும் கட்டியானதுமான ஒரு உருளையை முனையில் கொண்ட உலக்கையை ஆயுதமாகக் கொண்டவர்.

271. पूर्णपात्री பூர்ணபாத்ரீ

(வேள்விகளை நிகழ்த்தும் தீக்ஷிதர்களால் புகழப்படும்) "பூர்ண பாத்திரத்து''டன் கூடிய யாகத்தின் வடிவமாய் இருப்பவர். அல்லது, அமுது நிறைந்த குடத்துடன் கூடியவர்.

272. कम्बुधर: கம்புதர:

சங்கைக் கையில் தரித்திருப்பவர்.

273. विधृतालिसमुद्गक: வித்ருதாலிஸமுத்கக:

தன் கன்னப்பிரதேசங்களில் வழிந்து ஓடும் மதஜலப்பெருக்கில், தேன் கூடுகளைப் போல் காக்ஷியளிக்கும் பல வண்டுக் கூட்டங்களைத் தாங்கிக் கொண்டிருப்பவர்.

274. मातुलिङ्गधरः மாதுலிங்கதர:
மாதுளம்பழத்தைக் கையில் வைத்திருப்பவர்.

275. चूतकलिकाभृत् சூதகலிகாப்ருத்
மாம்பூ கொத்தைக் கையில் வைத்திருப்பவர்.

276. कुठारवान् குடாரவான்
யோகிகளின் மாசற்ற உண்மை அறிவிற்கு ஸாக்ஷியாக இருப்பவர்.

277. पुष्करस्थस्वर्णघटीपूर्णरत्नाभिवर्षकः

புஷ்கரஸ்தஸ்வர்ணகடீபூர்ணரத்நாபிவர்ஷக:

(தன்னை வழிபடும் அடியார்களுக்கு) தனது துதிக்கையின் நுனியில் இருப்பதும், இரத்தினங்களால் நிறைந்திருப்பதுமான தங்கக் குடத்திலிருந்து இரத்தினங்களைப் பொழிகின்றவர். रत्नकलशप्रोद्यत्कराम्भोरुहः என்று வரமஹாகணபதி த்யானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது இங்கு வருணிக்கப்பட்டிருக்கிறது.]

278. भारतीसुन्दरीनाथः பாரதீஸுந்தரீநாத:

ஸரஸ்வதி, பார்வதி, லக்ஷ்மி இவர்களின் கணவர்களான பிரம்மதேவன், பரமசிவன், நாராயணன் இவர்களின் வடிவமாக இருப்பவர். [भारतीसुन्दरीनाथः ब्रह्मविष्णुशिवात्मकः । लक्ष्मीवाचकमीकारं 'प्राशित्वा थोऽयमूह्यताम् ।। [खद्योतं பார்க்க]

279. विनायकरतिप्रियः விநாயகரதிப்ரிய:

"விநாயகர்" எனப்படும் தனக்குப் பணிபுரியும் பரிவார தேவதைகளுடன் விளையாட்டாக கேளிக்கை புரிவதில் ஆசை உடையவர். அல்லது, பறவைகளின் வேந்தனை கருடனுடன் விளையாடுவதில் ஸந்தோஷம் உள்ளவர்.

280. महालक्ष्मीप्रियतमः மஹாலக்ஷ்மீப்ரியதம:
மஹாலக்ஷ்மி என்ற மனைவிக்கு மிகவும் இஷ்டமானவர்.

281. सिद्धलक्ष्मीमनोरमः ஸித்தலக்ஷ்மீ மனோரம:

ஸித்தலக்ஷ்மி என்ற மற்றொரு மனைவிக்கும் இன்பத்தை அளிப்பவர்.

[குறிப்பு: 282 முதல் 285 வரை உள்ள நான்கு நாமாக்கள் ஐந்து ஆவரணங்களுடன் செய்யப்படும் மஹாகணபதி பூஜையில் மஹா கணபதியைச் சுற்றி நான்கு திக்குகளில் இருக்கும் முதலாவது ஆவரண தேவதைகளை வருணிக்கின்றன]

282. रमारमेशपूर्वाङ्गः ரமாரமேசபூர்வாங்க:

தன்னுடைய திருக்கோயிலுக்குக் கிழக்கு திசையில் (வில்வ-மரத்தடியில்) லக்ஷ்மீநாராயணருடன் இருப்பவர்.

283. दक्षिणोमामहेश्वरः தக்ஷிணோமாமஹேச்வர:

தன் திருக்கோயிலுக்குத் தென்புறத்தில் (ஆலமரத்தடியில்) பார்வதி பரமேச்வரருடன் இருப்பவர்.

284. महीवराहवामाङ्गः மஹீவராஹ வாமாங்க:

தனது கோயிலின் வடக்குப் பக்கத்தில் (''ப்ரியங்கு'' மரத்தடி-யில்) பூமிதேவி யஞ்யவராஹருடன் இருப்பவர்.

285. रतिकन्दर्पपश्चिमः ரதிகந்தர்ப பச்சிம:

திருக் கோயிலின் மேற்கு திசையில் (பிப்பல மரத்தடியில்) ரதி தேவி மன்மதனுடன் இருப்பவர்.

[குறிப்பு: 286 முதல் 297 வரை உள்ள பன்னிரண்டு நாமாக்கள் மஹாகணபதியைச் சுற்றி ஆறு கோணங்களில் இருக்கும் இரண்டாவது ஆவரண தேவதைகளான ஆமோதாதி ஆறு கணபதிகளையும், அவர்களுடைய மனைவிகளையும் வருணிக்கின்றன.

286. आमोदमोदजननः ஆமோத மோத ஜனன:

ஆமோத கணபதிக்கு ஆனந்தத்தை அளிப்பவர்.

287. सप्रमोदप्रमोदनः ஸப்ரமோதப்ரமோதன:

ப்ரமோத கணபதியை இன்பமுற்றிருக்கச் செய்பவர்.

288. समेधितसमृद्धश्रीः ஸமேதித ஸம்ருத்தஸ்ரீ:
ப்ரமோத கணபதியின் மனைவியான ஸம்ருத்தி தேவிக்கு ஸகல ஸௌபாக்கியங்களையும் வளரும்படி செய்பவர்.

289. ऋद्धिसिद्धिप्रवर्तकः ருத்தி ஸித்திப்ரவர்தக:
ஆமோத கணபதியின் மனைவி ருத்தி தேவிக்கு அபீஷ்டங்கள் அனைத்தும் ஸித்திக்கும்படி செய்பவர்.

290. दत्तसौमुख्यसुमुखः தத்தஸௌமுக்ய ஸுமுக:
தனது அடியார்களிடம் ஸுமுக கணபதியை ஸந்தோஷத்துடன் அருள் புரியும்படி செய்பவர்.

291. कान्तिकन्दलिताश्रयः காந்திகந்தலிதாச்ரய:
காந்திதேவிக்குத் தனது கணவனான ஸுமுக கணபதியிடம் அன்பைத் தளிர் விடும்படி செய்பவர்.

292. मदनावत्याश्रिताङ्घ्रिः மதனாவத்யாச்ரிதாங்க்ரி:
(துர்முக கணபதியின் மனைவியான) மதனாவதி தேவியால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவர்.

293. कृत्तदौर्मुख्यदुर्मुखः க்ருத்த தௌர்முக்ய துர்முக:
துர்முக கணபதிக்கு ஏற்பட்ட தௌர்முக்யத்தை (சினத்தை) அறவே நாசம் செய்தவர்.

294. विघ्नसम्पल्लवोपघ्नः விக்னஸம்பல்லவோபக்ன:
விக்ன கணபதியின் எல்லாவிதமான பெருமைகளின் வளர்ச்சிக்கும் மூல காரணமாக இருப்பவர்.

295. सेवोन्निद्रमदद्रवः ஸேவோந்நித்ர மதத்ரவ:
விக்ன கணபதியின் மனைவியான மதத்ரவா தேவியினால் சோம்பலில்லாமல் எப்போதும் பூஜிக்கப்படுகின்றவர்.

296. विघ्नकृन्निघ्नचरणः விக்னக்ருந்நிக்ன சரண:
''விக்னக்ருத்'' என்ற கணபதியின் பக்திக்குக் கட்டுப்பட்டுத் தன் திருவடிகளை (எப்போதும் பூஜிப்பதற்காக) அவரிடம் ஒப்படைத்திருப்பவர்.

297. द्राविणीशक्तिसत्कृत: த்ராவிணீ சக்திஸத்க்ருத:

'விக்நக்ருத்' கணபதியின் மனைவியான த்ராவிணி தேவியால் ஆதரவுடன் பூஜிக்கப்படுபவர்.

[குறிப்பு: 298 முதல் 303 வரை உள்ள ஆறு நாமாக்கள் மஹாகண பதியைச் சுற்றி வீற்றிருந்து ஆராதனை புரியும் 'தீவ்ரை' முதலிய ஆறு சக்திகளைக் கூறுகின்றன]

298. तीव्राप्रसन्ननयन: தீவ்ராப்ரஸன்ன நயன:

(ஆதரவுடன் தன்னை ஆராதனை செய்யும்) தீவ்ராசக்தியிடம் கருணை நிறைந்த அருள் நோக்குடன் கூடியவர்.

299. ज्वालिनीपालितैकदृक् ஜ்வாலிநீ பாலிதைகத்ருக்

(தன்னைத் தாங்கி நிற்கும்) ஜ்வாலிநீ சக்தியைக் காப்பாற்றுவதில் எப்பொழுதும் கண்ணும் கருத்துமாக இருப்பவர்.

300. मोहिनीमोहन: மோஹினி மோஹன:

மோஹினி சக்திக்கும் மயக்கத்தை அளிக்கும் உவமை அற்ற அழகு வாய்ந்தவர்.

301. भोगदायिनीकान्तिमण्डित: போகதாயிநீ காந்திமண்டித:

(தன்னை இடையறாது வழிபடும்) போகதாயினீ சக்தியின் சோபையால் அலங்கரிக்கப்பட்டத் திருப்பாதங்களை உடையவர்.

302. कामिनीकान्तवक्त्रश्री: காமினீ காந்த வக்த்ரஸ்ரீ:

காமினி சக்கியின் முகத்தில் நிறைந்திருக்கும் ஸௌந்தர்யத்தின் வடிவமாக இருப்பவர்.

303. अधिष्ठितवसुन्धर: அதிஷ்டிதவஸுந்தர:

"வஸுந்தரா" சக்தியைத் தோற்றுவித்து அதற்கு ஆதாரமாக இருப்பவர்.

[குறிப்பு: 304, 305 நாமாக்கள், ஆறு கோணத்திற்கு தெற்கிலும் வடக்கிலும் இரு பக்கங்களிலும் இருந்துகொண்டு மஹாகணபதியை உபாஸிக்கும் இரண்டாவது ஆவரணதேவதைகளான சங்கநிதியையும் பத்மநிதியையும் கூறுகின்றன]

304. वसुन्धरामदोन्नद्धमहाशङ्खनिधिप्रभु:

வஸுந்தராமதோந்நத்த மஹாசங்கநிதிப்ரபு:

(மிகவும் அழகு வாய்ந்த) வஸுந்தரை எனப்படும் மனையாளுடன் குதூஹலத்துடன் இருக்கும் பெருமை வாய்ந்த சங்கநிதியால் உபாஸிக்கப்படும் தலைவர்.

305. नमद्वसुमतीमौलिमहापद्मनिधिप्रभु:

நமத்வஸுமதீ மௌலிபஹாபத்மநிதிப்ரபு:

(மிகுந்த பக்தியுடன்) வஸுமதீ என்ற மனைவியால் தலை வணங்கிப் பூஜிக்கப்படுகின்றதும் மேன்மை தாங்கியதுமான பத்மநிதியால் பஜிக்கப்படும் யஜமானர்.

[குறிப்பு: 306 முதல் 328 வரை உள்ள இருபத்து மூன்று நாமாக்கள் மஹாகணபதியை அவருடைய பக்கத்திலிருந்து ஸேவிக்கும் நூற்று ஒன்று குருக்களின் மண்டலம், மூன்றுவது ஆவரணத்தில் பூஜனை செய்யப்பட வேண்டிய ஹ்ருதயம் முதலிய ஆறு அங்கதேவதைகள், ஐராவதம் முதலிய எட்டு திக்கஜங்கள், ஐந்தாவது ஆவரணத்தில் வழிபடவேண்டிய இந்திரன் முதலான எங்டு திக்பாலர்கள். அவர்களின் ஆயுதங்கள், சண்டன் முதலிய கண தேவதைகள், ஜயை முதலிய எட்டு ப்ராண சக்திகள், மூன்று விதமான ப்ரும்ம சக்திகள், ஸுபகை முதலிய நான்கு கணேச சக்திகள் ஆகியவைகளை வருணிக்கின்றன ]

குறிப்பு 903 வது ''अष्टमातृसमावृ: என்ற நாமத்தால், நான்காவது ஆவரண தேவதை கூறப்பட்டிருக்கிறது.

306. सर्वसद्गुरुसंसेव्य: ஸர்வஸத்குருஸம்ஸேவ்ய:

ஸகல குருக்களாலும் ஸேவிக்கத் தகுந்தவர், (கணக்ரீடர் முதலான குலகுருக்கள் ஒன்பது. ஸுரானந்தர் முதலிய வித்யா குருக்கள் ஒன்பது. விநாயகா தொடங்கிய ஸந்தான குருக்கள் இருபதாகும். இவர்களுள் திவ்யௌகர், ஸித்தௌகர், மானவௌகர், என்ற மூன்று விதமான உட்பிரிவுகளைக் குருமுகத்திலிருந்து தெரிந்து கொள்ள வேண்டும் கபிலர் முதல் வியாஸ முனிவர் வரை மஹர்ஷி குருக்கள் இருபத்தொன்று ஆகும். கணகர் முதல் சங்கர பகவத் பாதர் வரை ஸம்ப்ரதாய குருக்தள் நாற்பத்து இரண்டாகும். ஸ்ரீ சங்கராசார்யர் முதல் தன்னுடைய குருநாதன் வரை உள்ள குருபரம்பரையைத்

தன்னுடைய குருவினிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும். இவ்விஷயம் ஸ்ரீ வித்யாரண்ய ஸவாமிகள் இயற்றிய வித்யார்ணவம் என்ற நூலில் கூறப்பட்டிருக்கிறது. இந்த ஸஹஸ்ரநாமத்தில் முதல் இருநூறு நாமாக்களில் நூற்றுஒன்று குருக்களின் நாமாக்களும் ஆங்காங்கு சேர்க்கப்பட்டிருக்கின்றன).

307. शोचिष्केशहृदाश्रय: சோசிஷ்கேசஹ்ருதாச்ரய:

ஹ்ருதய ரூப அங்கத்தின் தேவதைகளான ஆஹவநீயம் முதலான அக்நிகளுக்கு இருப்பிடமானவர்.

308. ईशानमूर्धा ஈசானமூர்த்தா

சிரோரூப அங்கத்தின் தேவதையான ஈசானராலும் தலைமேல் வைத்து பூஜிக்கப்படுபவர்.

309. देवेन्द्रशिखा தேவேந்த்ர சிகா

சிகை எனப்படும் அங்கத்தின் தேவதையான தேவராஜனாலும் பஹுமானிக்கப்படுகின்றவர்.

310. पवननन्दन: பவனநந்தன:

கவசம் எனப்படும் அங்கத்திற்குத் தேவதையான (உடலைக் காப்பாற்றுகின்ற) பிராணவாயுவிற்கும் பிராணனாக இருந்து அதனைக் காப்பாற்றுகின்றவர்.

311. अग्रप्रत्यग्रनयन: அக்ரப்ரத்யக்ர நயன:

நேத்ரத்ரயம் (நெற்றிக் கண்ணுடன் இரு கண்கள்) என்ற அங்கத்துடைய தேவதைகளை (ஸூர்யன், சந்திரன், அக்நி ஆகியவர்களை) ஸூக்ஷ்மமானதும், தெளிவானதும், கேடற்றதுமான கண்களாகக் கொண்டவர்.

312. दिव्यास्त्राणां प्रयोगवित् திவ்யாஸ்த்ராணாம் ப்ரயோகவித்

''அஸ்திரம்'' எனப்படும் அங்கத்திற்குரிய இந்திரன், அக்நி முதலிய தேவதைகளையும், அஸ்திர வித்யையையும், அதன் பிரயோகத்தையும் நன்கு அறிந்தவர்.

313. ऐरावतादिसर्वाशावारणावरणप्रिय:
ஐராவதாதி ஸர்வாசாவாரணாவரணப்ரிய:
எல்லா திக்குகளிலும் பூமியின் அடியில் இருந்து கொண்டு அதைத் தாங்கி நிற்கும் ஐராவதம் முதலிய திக்கஜங்களைத் தன்னை சூழ்ந்திருக்கச் செய்து அதில் ஸந்தோஷப்படுகின்றவர்.

314 वज्राद्यस्त्रपरीवार: வஜ்ராத்யஸ்த்ர பரீவார:
இந்திரன் முதலிய திக்பாலகர்களாலும், அவர்களுடைய வஜ்ரம் முதலிய ஆயுதங்களாலும் சூழப்பட்டிருப்பவர்.

315. गणचण्डसमाश्रय: கணசண்டஸமாச்ரய:
சண்டன், பிரசண்டன் முதலிய கணதேவதைகளுக்குப் பலத்தை அளிப்பவர்.

316. जयाजयपरीवार: ஜயாஜயபரீவார:
"ஜயா", "அஜயா" எனப்படும் ப்ராணசக்திகளால் சூழப்பட்டிருப்பவர்.

317. विजयाविजयावह: விஜயாவிஜயாவஹ:
விஜயா எனப்படும் ப்ராணசக்திக்கு வெற்றியை அளிப்பவர்.

318. अजितार्चितपादाब्ज: அஜிதார்சித பாதாப்ஜ:
அஜிதை எனப்படும் ப்ராணசக்தியால் பூஜிக்கப்பட்ட தனது திருவடித்தாமரையை உடையவர்.

319. नित्यानित्यावतंसित: நித்யாநித்யாவதம்ஸித:
நித்யை எனப்படும் ப்ராண சக்தியால் சிரமேல் வைத்து எப்பொழுதும் போற்றிப் புகழப்படுகின்றவர்.

320. विलासिनीकृतोल्लास: விலாஸினீக்ருதோல்லாஸ:
விலாஸினீ என்ற பிராண சக்தியின் ஸேவையால் ஸந்தோஷித்திருப்பவர்.

321. शौण्डासौन्दर्यमण्डित: சௌண்டிஸௌந்தர்ய மண்டித:
சௌண்டி எனப்படும் ப்ராணசக்தியால் ஸமர்ப்பிக்கப்பட்ட

ஸௌந்தர்யத்தால் மிக்க சோபையுடன் விளங்கும் திருவடிகளுடன் கூடியவர்.

322. अनन्तानन्तसुखद: அனந்தாநந்தஸுகத:

அனந்தா என்னும் பிராணசக்திக்கு அழிவில்லாத இன்பத்தை அளிப்பவர்.

323. सुमङ्गलसुमङ्गल: ஸுமங்கல ஸுமங்கல:

ஸுமங்கலா எனப்படும் பிராணசக்தியால் வஸிக்கப்படும் பீடத்திற்கு ஸகல கல்யாணங்களையும் செய்பவர்.

324. इच्छाशक्तिज्ञानशक्तिक्रियाशक्तिनिषेवित:

இச்சாசக்தி ஞானசக்திக்ரியாசக்தி நிஷேவித:

பிர்பஞ்சந்தைப் படைக்கும்போது பிரம்மத்திடம் தோன்றுபவைகளும், சைதன்யவடிவங்களுமான அறிவு, விருப்பம், முயற்சி ஆகிய மூன்று விதமான சக்திகளாலும் பஜிக்கப்படுகின்றவர்.

325. सुभगासंश्रितपद: ஸுபகாஸம்ச்ரிதபத:

"ஸுபகா" என்ற சக்தியால் எப்போதும் வழிபடப்படுகின்ற திருவடிகளை உடையவர்.

326. ललिताललिताश्रय: லலிதாலலிதாச்ரய:

லலிதா என்ற சக்தியால் ஸந்தோஷத்துடன் உபாஸிக்கப்படுகின்ற திருவடிகளை உடையவர்.

327. कामिनीकामन: காமினீகாமன:

"காமகலா" என்று புகழ்பெற்ற காமினீ சக்தியை ஆனந்திக்கும்படி செய்பவர்.

328. काममालिनीकेलिलालित: காமமாலினீ கேலிலாலித:

"காமேசீ" எனப்படும் காமமாலினீ சக்தியால் அன்புடன் நிகழ்த்தப்படும் கேளிக்கைகளால் கொண்டாடப்படுகின்றவர்.

329. सरस्वत्याश्रय: ஸரஸ்வத்யாச்ரய:

கல்வித்தலைவி வாணியால் ஆராதிக்கப்படுபவர்.

330. गौरीनन्दनः கௌரீநந்தந:
அன்னை பார்வதிதேவியை எப்பொழுதும் ஆனந்திக்கச் செய்பவர்.

331. श्रीनिकेतनः ஸ்ரீநிகேதந:
செல்வத்தலைவிக்குக் குடியிருப்பிடமாக இருப்பவர்.

332. गुरुगुप्तपदः குருகுப்தபத:
மஹாகணபதியின் வழிபாட்டின் பெருமையை உபதேசிப்பதில் குருஸ்தானம் வகிக்கும் கணக்ரீடர் முதலிய குருக்களால் தகுதியுள்ள அடியார்களுக்கு உபதேசித்து ஆதரித்தும், தகுதியற்றவர்களுக்கு உபதேசிக்காமல் அம்மந்திரத்திற்குக் களங்கம் ஏற்படாமலும் நன்கு காப்பாற்றப்பட்ட தன் திருவடியின் மஹிமையை உடையவர்.

333. वाचासिद्धः வாசாஸித்த:
தன்னை வழிபடும் அடியார்களுக்குப் பேசும் திறனை அளிப்பவர்.

334. वागीश्वरीपतिः வாகீச்வரீபதி:
'நகுலீ' எனப்படும் வாகீச்வரி சக்திக்குத் தலைவனாக இருப்பவர்.

335. नलिनीकामुकः நலினீகாமுக:
'ஸுராபகா' எனப்படும் நளினீ சக்தியின் இஷ்டங்களைப் பூர்த்தி செய்து வைப்பவர்.

336. वामारामः வாமாராம:
"வாமா" எனப்படும் பிரும்ம சக்தியிடம் அன்புடன் இருப்பவர்.

337. ज्येष्ठामनोरमः ஜ்யேஷ்டாமனோரம:
ஜ்யேஷ்டா எனப்படும் விஷ்ணு சக்தியின் உள்ளத்தைக் குளிரும்-படி செய்பவர்.

338. रौद्रीमुद्रितपादाब्जः ரௌத்ரீ முத்ரித பாதாப்ஜ:
ருத்ர சக்தியால் இடையருமல் பஜிக்கப்படும் திருவடித்தாமரை-யுடன் கூடியவர்.

339. हुंबीजः ஹும்பீஜ:

"வக்ரதுண்டாய ஹும்" என்ற தனது ஆறு எழுத்து மந்திரத்தில் ஆறுவதான "ஹும்" என்ற எழுத்தை அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு புருஷார்த்தங்களும் உண்டாவதற்கு (முளைப்பதற்கு) வித்து போல் இருக்கச் செய்தவர்.

340. तुङ्गशक्तिकः துங்கசக்திக:

"வ,க்ர, து,ண்டா, ய, ஹும்" என்ற ஆறு எழுத்து மந்திரத்திலுள்ள "து" எழுத்தையும், "ஸ்ரீம், ஹ்ரீம், க்ளீம், க்லௌம், கம், கணபதயே, வர, வரத, ஸர்வஜனம், மே, வசம், ஆனய' ஸ்வாஹா" என்ற இருபத்து எட்டு எழுத்து மந்திரத்திலுள்ள 'கம், என்ற எழுத்தையும் அடியார்களுக்கு எல்லாவிதமான மேன்மைகளையும் அளிப்பதற்குச் சக்திகளாகக் கொண்டவர்.

341. विश्वादिजननत्राणः விச்வாதி ஜநநத்ராண:

விச்வன், தைஜஸன், ப்ராக்ஞன் என்ற (வ்யஷ்டி) ஜீவாத்மாக்களையும், விராட், ஹிரண்யகர்பன், ஈச்வரன் என்ற (ஸமஷ்டி) பரமாத்மாக்களையும் படைத்துக் காப்பாற்றுகின்றவர்.

342. स्वाहाशक्तिः ஸ்வாஹாசக்தி:

(படைத்தல், காத்தல் இவைகளில் சக்தி உள்ளவர் போன்று) ஸ்வாஹா என்று ஹோமம் செய்யப்படும் பொருளை விழுங்குவதிலும் திறமை படைத்தவர். அல்லது, ஸ்வாஹா என்ற மந்திர சக்தியுள்ளவர்.

343. सकीलकः ஸகீலக:

"ஸ" என்ற அக்ஷரத்துடன் கூடின, ம்ருத்யுஞ்ஜய மந்திரத்திற்கும் (திரயம்பக மந்திரத்திற்கும்) ஸூர்ய மந்திரத்திற்கும் (காயத்ரீ மந்திரத்திற்கும்) பொருளாக இருப்பவர். மிகவும் முக்கியமான "ஸ" என்ற அக்ஷரத்தைத் தன் மந்திர ஜபத்தின், அங்கங்களுள் முக்கியமான கீலகம் எனப்படும் அங்கத்தில் சேர்த்துக் கொண்டிருப்பவர்.

344. अमृताब्धिकृतावासः அம்ருதாப்திக்ருதாவாஸ:

ஸுராஸமுத்ரம், பாற்கடல், கரும்புச்சார்க் கடல் ஆகிய இனிப்பான ரஸமுடைய கடல்களில் எப்பொழுதும் வஸிப்பவர்.

345. मदघूर्णितलोचनः மதகூர்ணித லோசன:

ஸுரை, பால், கரும்புச்சார் இவைகளைப் பருகுவதில் எப்பொழுதும் ஈடுபாடு உள்ளவர்.

346. उच्छिष्टगण: உச்சிஷ்டகண:

அறிவு, ஆசாரம், சீலம், இவைகள் நிறைந்து சிறப்பு வாய்ந்தவர்களான அடியார்களின் கூட்டங்களை உடையவர்.

347. उच्छिष्टगणेशः உச்சிஷ்டகணேச:

''உச்சிஷ்டம் நாமரூபம் ச'' उच्छिष्टम् नामरूपं च என்று தொடங்குகின்றவைகளும். அதர்வ வேதத்தில் உள்ளவைகளுமான இருபத்து ஏழு ருக்குகளால் புகழ்ந்து பாடப்படுகின்றவர். அல்லது ''ஹஸ்தி பிசாசி லிகே ஸ்வாஹா'' हस्तिपिशाचिलिखे स्वाहा என்ற ஒன்பது அக்ஷரங்கள் கொண்ட உச்சிஷ்ட கணபதி மந்திரத்தை ஜபம் செய்யும் பொழுது அந்த பக்தனுல் கொழக்கட்டையை பக்ஷிக்கின்றவராக கணபதி த்யானம் செய்யத் தகுந்தவர்.

348. गणनायकः கணநாயக:

இவ்வுலகில் கணக்கிடப்படும் ஸகல கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமானவர்.

349. सार्वकालिकसंसिद्धिः ஸார்வகாலிகஸம்ஸித்தி:

அடியார்களுக்கு ஒருபொழுதும் அழியாத ஸித்திகளை அளிப்பவர்.

350. नित्यशैवः நித்ய சைவ:

எப்பொழுதும் பரமசிவனையே த்யானித்துக் கொண்டிருப்பவர்.

351. दिगम्बरः திகம்பர:

திக்குகளையே வஸ்திரமாக உடுத்தி இருப்பவர். (எல்லா திக்குகளிலும் நிறைந்திருப்பவர் என்பது கருத்து)

[குறிப்பு: 352 முதல் 667 வரை உள்ள முந்நூற்றுப் பதினாறு நாமாக்களில் 'அ' முதல் 'க்ஷ' வரை ஐம்பது வடமொழி எழுத்துக்களுள், உயிரெழுத்தில் 'ரு', 'லூ' என்ற இரண்டு எழுத்துக்களையும், மெய்யெழுத்தில் 'ங', 'ஞ', 'ண' என்ற மூன்று எழுத்துக்களையும், சேர்த்து

ஐந்து எழுத்துக்களை விடுத்து மீதமுள்ள நாற்பத்து ஐந்து எழுத்துக்களில் முறையாக ஆரம்பித்து மஹாகணபதியின் பலவிதமான மேன்மைகள் வருணிக்கப்பட்டிருக்கின்றன.]

352. अनपायः அநபாய:

ஒரு பொழுதும் அழியாத மங்கள கார்யங்களை உடையவர். அல்லது அழிவில்லாதவர்.

353. अनन्तदृष्टिः அனந்த த்ருஷ்டி:

எண்ணிறந்த கண்களை உடையவர். அல்லது நாசத்தை அடையாத அறிவுக் கண் உடையவர்.

354. अप्रमेयः அப்ரமேய:

கண், காது முதலிய புலன்களுக்கும், மனத்திற்கும், வாக்கிற்கும் எட்டாதவர்.

355 अजरामरः அஜராமர:

மூப்பு, இறப்பு அற்றவர். "விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகித்ஸ:" विजरो विमृत्युर्विशोको विजिघित्सः [छा 8.1.5] என்று சாந்தோக்யோபநிஷத்தில் கூறியிருப்பது இந்த நாமத்திற்கு மூலப் பிரமாணமாகும்.

356. अनाविलः அநாவில:

இடையூறுகளை தகர்த்து எறியும் எண்ணிறந்த சக்தியுடன் கூடியிருப்பதால் எள்ளளவும் கலக்கம் அற்றவராக இருப்பவர்.

357. अप्रतिरथः அப்ரதிரத:

தன்னை எதிர்ப்பதற்கு உரிய பௌருஷம் உள்ள வீரபுருஷன் அற்றவர். நிகர் அற்றவர் என்பது கருத்து.

358. अच्युतः அச்யுத:

அழிவில்லாதவர். அல்லது அழிவில்லாத நாராயணனிடமிருந்து வேறுபடாதவர்.

359. अमृतम् அம்ருதம்

அமுதமாக இருப்பவர். அல்லது மோக்ஷ ஸ்வரூபமாக இருப்பவர்.

360. अक्षरम् அக்ஷரம்

எங்கும் நிறைந்திருப்பவர். அல்லது அழிவில்லாதவர்.

361. अप्रतर्क्यः அப்ரதர்க்ய:

குயுக்தியால் (கோணல் புத்தியால்) அறிய முடியாதவர். (வேதங்களால் உபதேசிக்கப்பட்ட யுக்திகளாலேயே அறியத் தகுந்தவர் என்பது கருத்து)

362. अक्षयः அக்ஷய:

தனக்கு என்று விடுதி இல்லாதவர். எங்கும் இருப்பவர் என்பது கருத்து.

363. अजय्यः அஜய்ய:

ஒருவராலும் வெற்றி கொள்ள முடியாதவர்.

364. अनाधारः அனுதார:

உலகத்தைத் தாங்கி நிற்கும் தனக்கு ஒரு ஆதாரமும் இல்லாதவர்.

365. अनामयः அனுமய:

பிணியற்றவர்.

366. अमलः அமல:

அவித்யை எனப்படும் மாசற்றவர்.

367. अमोघसिद्धिः அமோகஸித்தி:

தன்னை வழிபடும் அடியார்களுக்கு அளிக்கப்படும் ஸித்தியை ஒரு காரணத்தாலும் வீண்போகாமல் காப்பாற்றிப் பயனுள்ளதாகச் செய்பவர்.

368. अद्वैतम् அத்வைதம்

உண்மையில் தன்னைத் தவிர்த்து இரண்டாவது பொருள் இல்லாததால் இரண்டற்ற பொருளாக இருப்பவர் "प्रपञ्चोपशमं शान्तं शिवमद्वैतम्" "ப்ரபஞ்சோபசமம் சாந்தம், சிவம், அத்வைதம்" என்று மாண்டூக்யோபநிஷத்தில் கூறியிருப்பது இந்நாமத்திற்கு மூலமாகும்.

369. अघोर: அகோர:

ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்துவித சிவ மூர்த்திகளுள் அகோர சிவ மூர்த்தியாய் இருப்பவர். அல்லது அடியார்களுடைய அச்சத்தை அறவே இல்லாமல் செய்பவர்.

370. अप्रमितानन: அப்ரமிதாநந:

எண்ணிறந்த முகங்களுடன் கூடியவர்.

371. अनाकार: அனாகார:

அடியார்களை அநுக்ரஹிப்பதற்குப் பலவிதமான உருவங்களை அடைந்தவராய் இருப்பினும் உண்மையில் உருவம் அற்றவர்.

372. अब्धिभूम्यग्निबलघ्न: அப்திபூம்யக்னிபலக்ன:

மண்ணில் தோன்றிய பொருளால் வெட்டி முறிக்கவும், இடித்துப் பொடியாக்கவும், தண்ணீரால் நனைக்கவும், தீயால் பொசுக்கவும், காற்றால் உலர்த்தவும் முடியாத தன்னுடைய ஸ்வரூபத்தில் மண் முதலான நான்கு பூதங்களின் திறமையைப் பயனற்றதாகச் செய்பவர். அல்லது, கடல், பூமி, அக்நி ஆகியவர்களின் கொழுப்பை அடக்கியவர்.

"भू–वन्हि–तेजो–मरुतां बलानि
संस्तम्भन–क्लेदन–दाह–शोषा: ।
त्वयि क्षमास्ते न भवन्ति तेन
त्वमाब्धि भूम्यग्निबलघ्न उक्त: ।। என்ற खद्योत இங்கு கவனத்திற்குறியதாகும்.

373. अव्यक्तलक्षण: அவ்யக்த லக்ஷண:

உள்ளத்தில் தத்வவிசாரத்தில் ஊக்கம் இல்லாதவர்களும், வெளி விஷயங்களில் உள்ளத்தைப் பறி கொடுத்தவர்களுமான அறிவிலிகளுக்கு விளங்காத இருப்பு, மெய்யறிவு, ஆனந்தம் என்ற தனது ஸ்வரூப இலக்கணத்தையும், இவ்வுலகின் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தடஸ்த இலக்கணத்தையும் உடையவர்.

374. आधारपीठ: ஆதாரபீட:

"சிவன் முதல் பூமி வரை, பூமி முதல் சிவன் வரை" என்று அறிஞர்களால் கணக்கிடப்படும் முப்பத்து ஆறு தத்துவங்களுக்குப் பீடமாக (இருப்பிடமாக) இருப்பவர்.

375. आधार: ஆதார:

'அ' என்ற சொல்லின் பொருள் வாஸுதேவன், 'ஆ' என்ற சொல்லின் பொருள் பிரம்மதேவன் இவ்விருவர்களையும் தாங்கிக் கொண்டிருப்பவர். [மணிபூரத்திலும், ஸ்வாதிஷ்டானத்திலும் இருக்கும் விஷ்ணுவையும், பிரம்மதேவனையும் மூலாதாரத்தில் இருக்கும் கணபதியே தாங்கிக் கொண்டிருக்கிறார் என்பது கருத்து.]

376. आधाराधेयवर्जित: ஆதாராதேயவர்ஜித:

எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கும் தனக்கு ஆதாரம் ஒன்றும் இல்லாததாலும், ஆதேயம் என்று கூறப்படும் பொருள்கள் எல்லாம் உண்மையிலேயே இல்லாததாலும் ஆதாரம், ஆதேயம் என்ற இரண்டுமே இல்லாதவர்.

377. आखुकेतन: ஆகுகேதன:

பெரிச்சாளியைத் தனது வெற்றிக் கொடியில் அடையாளமாகக் கொண்டவர்.

378. आशापूरक: ஆசாபூரக:

ப்ருசுண்டி என்ற முனிவரால் பக்தியால் "ஆசாபூரகர்" என்று அழைக்கப்பட்டவர். அல்லது, தனது புகழால் திக்குகள் அனைத்தையும் வியாபித்திருப்பவர். அல்லது தனது அடியார்களின் விருப்பம் அனைத்தையும் பூர்த்தி செய்து வைப்பவர். காசிராஜனால் அழைக்கப்பட்டு காசீநகரம் வந்து தன்னுடைய தைவமான கஜானனை வணங்கி வழிபட்டு, ப்ருசுண்டி என்ற முனி ஆசாபூரகர் என்ற நாமத்தை கஜானனுக்குச் சூடினார். "आशापूरक इत्येवं नाम ते ख्यातिमेतु च । भक्तिभावादिदं नाम त्वयोक्तं ख्यातिमेष्यति" என்று கணேசபுராணம் உத்தரகண்டம் 17வது அத்யாயம் கூறுகிறது.]

379. आखुमहारथः ஆகுமஹாரத:
பெரிச்சாளியால் இழுக்கப்படும் பெரிய தேரில் வீற்றிருப்பவர்.

380. इक्षुसागरमध्यस्थः இக்ஷுஸாகரமத்யஸ்த:
கரும்புச் சார்க்கடலின் நடுவில் வீற்றிருப்பவர்.

381. इक्षुभक्षणलालसः இக்ஷுபக்ஷணலாலஸ:
கரும்பைச் சுவைப்பதில் மிக்க ஆசையுள்ளவர்.

382. इक्षुचापातिरेकश्रीः இக்ஷுசாபாதிரேகஶ்ரீ:
மன்மதனைக் காட்டிலும் மிக்க அழகு வாய்ந்தவர்.

383. इक्षुचापनिषेवितः இக்ஷுசாபநிஷேவித:
தன் திருக் கோயிலுக்கு மேற்கு திக்கில் ரதி தேவியுடன் கூடிய மன்மதனால் பூஜிக்கப்படுகின்றவர்.

[குறிப்பு: 384 முதல் 387 வரை உள்ள நான்கு நாமாக்கள் அடியார்களுடைய அபீஷ்டங்களைப் பூர்த்தி செய்து வைப்பதற்கென்று நான்கு யுகங்களிலும் வெவ்வேறான நிறத்தையுடைய மஹாகணபதியை அறிவிக்கின்றன.

384. इन्द्रगोपसमानश्रीः இந்த்ரகோபஸமானஶ்ரீ:
பத்மராகம், பட்டுப்பூச்சி போன்று சிவந்த நிறத்துடன் சோபிப்பவர்.

385. इन्द्रनीलसमद्युतिः இந்த்ரநீலஸமத்யுதி:
இந்த்ரநீலக்கல் எனப்படும் இரத்தினத்தைப் போன்று நீல நிறத்துடன் துலங்குபவர்.

386. इन्दीवरदलश्यामः இந்தீவரதலச்யாம:
நீலோத்பல மலரின் இதழ் போன்று கருநீல நிறத்துடன் சோபிப்பவர்.

387. इन्दुमण्डलनिर्मलः இந்துமண்டல நிர்மல:
சந்திர மண்டலத்தைப் போன்று தூய வெண்மை நிறமுடையவர்.

388. इध्मप्रिय: இத்மப்ரிய:

மறைகளிலும், அறநூல்களிலும் உபதேசிக்கப் பட்டுள்ள அக்நி வடிவனுக இருந்துகொண்டு (அதனில் ஹோமம் செய்யப்படும்) அரசு, புரசு, வன்னி முதலிய ஸமித்துகளில். (சிறிய கம்புகளில்) இஷ்டமுள்ளவர்.

389. इडाभाग: இடாபாக:

"இடா" என்ற வடமொழிச் சொல்லிற்கு, பூமி, யாகத்தில் ஹோமம் செய்யப்படுகின்ற திரவ்யம், பசு என்று மூன்றுவித பொருள்கள் உள்ளன. மஹாகணபதி, யாகத்தை நடத்தி வைக்கும் அத்வர்யு, ஹோதா, உத்காதா, பிரும்மா எனப்படும் நான்கு ருத்விக்குகளின் வடிவனுக இருந்து கொண்டு, பூமியையும், பசுவை-யும் தக்ஷிணையாகவும் ஹோமம் செய்யப்பட்ட திரவ்யத்தின் சேஷத்தை உண்பதற்கும் உரித்தான பங்கைப் பெற்றுக் கொள்கிறுர்.

390. इराधामा இராதாமா

பூமியை இருப்பிடமாகக் கொண்டவர். (பூமியில் இருந்துகொண்டு அதனை அடக்கி ஆள்கின்றவர்.) 'यः पृथिव्यां तिष्ठन्' "ய: ப்ருதிவ்யாம் திஷ்டன்" என்ற பிருஹதாரண்ய கோபநிஷத் வாக்யம் இந்நாமத்திற்கு மூலப்பிரமாணமாகும்.

391. इन्दिराप्रिय: இந்திராப்ரிய:

பக்தியுடன் தன்னை வழிபடும் மஹாலக்ஷ்மியிடம் அன்பு கொண்டவர்.

392. इक्ष्वाकुविघ्नविध्वंसी இக்ஷ்வாகுவிக்ன வித்வம்ஸீ

ஸூர்ய குலத்தில் உதித்த இக்ஷ்வாகு என்ற வேந்தனுக்கு நேர்ந்த இடையூற்றைப் போக்கடித்தவர். அல்லது, பேச்சுற என்ற மலையாள மொழியிலும், பாகல் என்று தமிழ் மொழியிலும் வழங்கப் படுவதும் கைப்புரஸமுள்ளதும், படர்ந்து வளருவதுமான கடுதும்பி போன்று கசப்பைத் தரும் தடைகளைத் தகர்த்து எறிந்தவர்.

393. इतिकर्तव्यतेप्सित: இதிகர்தவ்யதேப்ஸித:

கல்பஸூத்திரங்களில் வகுத்துக் கூறிய முறையைத் தழுவி வேள்விகளை அனுஷ்டிப்பவர்களுக்குத் தக்க பயனை அளிப்பவர்.

394. ईशानमौलि: ஈசானமௌலி:

அரசன் (மனிதர்களின் தலைவன்), குபேரன் (யக்ஷர்களின் தலைவன்), இந்திரன் (தேவர்களின் தலைவன்) முதலான தலைவர்களுக்குத் தலை போன்று விளங்கும் தலைவர்.

395. ईशान: ஈசாந:

தலைவர்களை உயிர்வாழும்படி செய்பவர்.

396. ईशानसुत: ஈசானஸுத:

வேள்விக்காக இறைவனால் தோற்றி வைக்கப்பட்ட ஸோமலதை (சிந்திக்கொடி) வடிவமாக இருப்பவர். அல்லது பரமசிவனுடைய புதல்வர்.

397. ईतिहा ஈதிஹா

பயிரினங்களுக்கு ஈதி எனப்படும் அதிகமழை, மழை இன்மை, எலிகள், வெட்டுப்பூச்சி, கிளி முதலிய பறவைகள் முதலியவற்றால் ஏற்படும் தீங்குகளை இல்லாமல் செய்பவர்.

398. ईषणात्रयकल्पान्त: ஈஷணாத்ரயகல்பாந்த:

மனைவி, மக்கள், செல்வம் இவைகளில் ஏற்படும் மூன்று விதமான ஆசைகளை அகற்றி அடியார்க்கு ஸம்ஸாரத்தில் வெறுப்பைத் தோற்றி வைப்பவர்.

399. ईहामात्रविवर्जित: ஈஹாமாத்ரவிவர்ஜித:

அசைவற்று அறிவு வடிவமாக இருப்பதால் ஆசை லேசமும் அற்றவர். "निश्चेष्टचित्स्वरूपत्वादीहामात्रविवर्जित:" என்ற खद्योत கவனத்திற்குறியதாகும்.

400. उपेन्द्र: உபேந்த்ர:

இந்திரனுக்கு இளையோனாகவும், கச்யப முனிவருக்குப் புதல்வனாகவும் தோன்றிய வாமன ரூபியான விஷ்ணுவாக இருப்பவர்.

401. उडुभृन्मौलि: உடுப்ருன்மௌலி:

நக்ஷத்ரங்களுடன் கூடிய தேவலோகத்தைத் தலையாகச் செய்து கொண்ட விராட்புருஷனாக இருப்பவர். "தயாம் மூர்தானம்" ("दयाम् मूर्धानम्) முதலான விராட்புருஷனை வர்ணிக்கும் உபநிஷத் வசனங்கள் இதில் பிரமாணமாகும். அல்லது நக்ஷத்ரங்களின் தலைவனான சந்திரனைத் தலையில் தரித்து இருப்பவர்.

402. उंडेरकबलिप्रिय: உண்டேரகபலிப்ரிய:

சர்க்கரையுடன் மாவைச் சேர்த்து நெய்யில் பாகம் செய்தவைகளும் வட்டமானவைகளுமான உண்டேரகம் (உண்ணியப்பம்) எனப்படும் பணியாரத்தில் விருப்பம் உள்ளவர்.

403. उन्नतानन: உந்நதாநந:

எல்லாவிதமான சிறப்புகளாலும் உயர்ந்து நிற்பவர்களான பிரும்மதேவன் முதலியவர்களையும் உயிர்வாழும்படி செய்பவர்

404. उत्तुङ्ग: உத்துங்க:

(நீரில் மறைந்த மண்ணுலகத்தை வெளியில் கொண்டு வருவதற்கு) வெண்மை நிறமுள்ள பன்றியாகத் தோன்றித் தனது தித்திப் பல்லால் "துங்கை" என்னும் நதியையும் மேலே எடுத்து வந்தவர்.

405. उदारत्रिदशाग्राणी: உதாரத்ரிதசாக்ரணீ:

வேண்டிக் கொள்பவர்களுக்கு வாரி வழங்குவதில் கொடை வள்ளல், குணக்குன்று என்று புகழ்பெற்ற வானவர்களின் வரிசையில் முன்னணியில் இருப்பவர்.

406. ऊर्जस्वान् ஊர்ஜஸ்வான்

ஒரு பொழுதும் குன்றாத ஒளிகள் நிறைந்த தேஜஸ்ஸுடன் கூடியவர்.

407. ऊष्मलमद: ஊஷ்மலமத:

இரண்டு கன்னப் பிரதேசங்களிலிருந்தும் பெருக்கெடுத்து வெளி வரும் சூடான மத ஜலத்துடன் கூடியவர்.

408. ऊहापोहदुरासद: ஊஹாபோஹதுராஸத.

''இதுவே தத்துவம்'' எனத் தீர்மானிப்பதற்கு கையாளப்படும் யுக்தி ''ஊஹம்'' எனப்படும். ''இது தத்வமல்ல'' எனத் தீர்மானிப்ப தற்குக் காட்டப்படும் யுக்தி ''அபோஹம்'' எனப்படும். இவ்விரண்டு விதமான யுக்திகளுக்கும் எட்டாதவர்.

409. ऋग्यजुस्सामसम्भूति: ருக்யஜுஸ்ஸாமஸம்பூதி:

ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் இவைகளைத் தோற்றி வைத்தவர். 'अस्य महतो भूतस्य निश्वसितं यदृग्वेद: यजुर्वेद:सामवेद:'' ''அஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதம் யத்ருக்வேதோ யஜுர்வேத: ஸாமவேத:) என்ற பிருஹதாரண்யகோபநிஷத் வாக்யம் இந்நாமத்தின் தோற்றத்திற்கு மூலமாகும்.

410. ऋद्धिसिद्धिप्रवर्तक: ருத்தி ஸித்தி ப்ரவர்தக:

தன்னை வழிபடும் அடியார்களுக்கு அவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப அணிமா முதலிய எட்டு விதமான ஸித்திகளையும் ராஜ்யம் முதலிய ஸுகங்களையும் அளிப்பவர்.

411. ऋजुचित्तैकसुलभ: ருஜு சித்தைகஸுலப:

சமம், தமம் முதலான ஆத்ம குணங்கள் நிறைந்ததும், ஸத்குரு-வினுடைய சாஸ்திர உபதேசத்தால் மாசற்றுத் தூய்மை பெற்றது மான உள்ளம் படைத்தவர்களாலேயே எளிதில் அடையத் தகுந்தவர்.

412. ऋणत्रयविमोचक: ருணத்ரய விமோசக:

தன்னை வழிபடும் அடியார்களை, அவர்களின் விருப்பப்படி மறைகளை முறைப்படி ஓதும்படி செய்து, வேள்விகளைத் தவருமல் அனுஷ்டிக்கும்படி செய்து, குலத்திற்கு அனுகூலனுன புதல்வனையும் அளித்து, முனிவர்களுக்கான கடன், தேவர்களுக்கான கடன், பித்ருக்களுக்கான கடன் ஆகிய மூன்று கடன்களிலிருந்தும் விடுவிப்பவர்.

413. लुप्तविघ्न: स्वभक्तानाम् லுப்த விக்ன: ஸ்வபக்தானும்

தன்னை வழிபடும் ப்க்தர்களின் இடையூறுகளை வேருடன் அகற்றுபவர்.

414. लुप्तशक्तिः सुरद्विषाम् லுப்தசக்தி: ஸுரத்விஷாம்
(உலகத்தினருக்குத் துன்பத்தைத் தருகின்றவர்களும்), தேவர்களுடைய பகைவர்களுமான அஸுரர்களின் பலத்தை அழிப்பவர்.

415. लुप्तश्रीर्विमुखार्चिनाम् லுப்தஸ்ரீர் விமுகார்சாநாம்
தன் திருவடிகளை மலர்களைக் கொண்டு பூஜை செய்ய மறந்திருப்பவர்களின் ஐச்வர்யத்தைக் குறையும்படி செய்பவர்.

416. लूताविस्फोटनाशनः லூதாவிஸ்போடநாசன:
தன்னை வழிபடும் அடியார்களுக்கு, வாயினுள் பற்களை ஒட்டி ஏற்படும் "லூதா" என்ற பிணியையும், உடலின் மேல் கொப்பளமாகத் தோன்றி உடையும் சிறங்கு முதலிய ரோகங்களையும் நாசம் செய்பவர். அல்லது. சிலந்தி என்ற விஷ ஜந்து கடித்ததனுல் தோன்றும் கொப்புளம் முதலிய துன்பத்தைப் போக்குபவர்.

417 एकारपीठमध्यस्थः ஏகாரபீடமத்யஸ்த:
முககோண வடிவமான பீடத்தின் நடுவில் பிந்துவில் வஸிப்பவர்.

418. एकपादकृतासनः ஏகபாதக்ருதாஸன:
ஏழு விதமான மோக்ஷபுரிகளுள் ஒன்முன காசீ க்ஷேத்ரத்தில் பரமசிவனுடைய வரத்தால் கொழுப்பை அடைந்த துராஸதனுடைய தலையில் ஒரு காலை வைத்துக் கொண்டு ஒற்றைக்காலால் நின்று கொண்டிருப்பவர். ஒரு ஸமயம் பஸ்மாஸுரனின் மைந்தன் துராஸதன் என்ற அஸுரன் சிவனைக் குறித்து காசீபுரியில் மணிகர்ணிகை என்னும் கங்கைக் கரையில் கடும் தவம் புரிந்தான். சிவபெருமானும் அவனிடம் இரக்கம் கொண்டவராய் "என் சக்தியின் புதல்வனையன்றி வேறு ஒருவரிட மிருந்தும் உனக்குத் துன்பம் நேருது. சக்தியின் புதல்வன் உன் தலையில் காலை வைக்கும்போது நீ தோல்வி அடைந்து உயிர் மாத்திரமாக இருப்பாய். அவன் உன் தலையிலிருந்து காலை எடுத்தால் மீண்டும் எங்கும் வெற்றி கொள்வாய்"

"शक्तितेजोद्भवः कश्चित् जिन्वा संजीवयिष्यति ।
शिरसि स्थाप्य चरणं धरिष्यति निरन्तरम् ॥

निष्कासितो यदा तेन चरणस्ते शिरोगतः
तदा पुनस्त्रिलोकीं त्वं बलाज्जेष्यसि तेजसा''

சக்தி தேஜோத்பவ: கச்சித் ஜித்வா ஸம்ஜீவயிஷ்யதி ।
சிரஸி ஸ்தாப்ய சரணம் தரிஷ்யதி நிரந்தரம் ॥
நிஷ்காசிதோ யதா தேன சரணஸ்தே சிரோகத:
ததா புனஸ்த்ரிலோகீம் த்வம் பலாஜ்ஜேஷ்யஸி தேஜஸா''
என்று சிவபெருமான் கூறியதாக கணேச புராணம் உத்தரகண்டம் 38 வது அத்யாயம் உரைக்கின்றது.

ஸ்காந்த புராணம் காசீ கண்டமும் இதனை வலியுறுத்துகின்றது.

419. एजिताखिलदैत्यश्री: ஏஜிதாகிலதைத்ய ஸ்ரீ:
(நல்லவர்களுக்குத் தீங்கு இழைக்கும்) அஸுரர்கள் அனைவருடையவும் ஐச்வர்யத்தை நடுங்கும்படி செய்பவர். (அடிக்கடி அவர்களை விட்டு அகலும்படி செய்பவர்)

420. एधिताखिलसंश्रय: ஏதிதாகில ஸம்ச்ரய:
தன் திருவடிகளை எப்பொழுதும் வழிபட்டுவரும் தொண்டர்களின் ஐச்வர்யத்தை மேன்மேலும் வளரும்படி செய்பவர்.

421. ऐश्वर्यनिधि: ஐச்வர்யநிதி:
தன்னுடைய பக்தர்களிடத்தில் எல்லாவிதமான செல்வச் சிறப்புகளையும் நிலையாக இருக்கும்படி செய்பவர்.

422. ऐश्वर्यम् ஐச்வர்யம்
ஈசுவரர்களிடம் (அரசன், இந்திரன், குபேரன் முதலிய தலைவர்களிடம்) காணப்படும் ஐச்வர்யத்தின் (தலைமையின்) வடிவமாக இருப்பவர். 'एषास्य परमा संपत्' ''ஏஷாஸ்ய பரமா ஸம்பத்'' என்ற பிருஹதாரண்யக வாக்யம் இதற்கு மூலப்ரமாணமாகும்.

423. ऐहिकामुष्मिकप्रद: ஐஹிகாமுஷ்மிகப்ரத:
அடியார்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் ஸகல ஸௌக்யங்களையும் அளிப்பவர்.

424. ऐरम्मदसमोन्मेष: ஐரம்மதஸமோன் மேஷ:
கண்ணைக் கூசும் அளவிற்கு ஒளி மிகுந்த மின்னலுக்கு ஒப்பான ஒளியை (நிலையாக) அடைந்திருப்பவர்.

425. ऐरावतनिभानन: ஐராவதநிபாநந:
பாற்கடலில் தோன்றி வானவர் உலகில் வஸிக்கும் ஐராவதம் என்ற வெள்ளை யானையின் முகத்தை ஒத்த முகத்தை உடையவர்

426. ओङ्कारवाच्य: ஓங்காரவாச்ய:
பெருமை வாய்ந்த "ஓங்காரம்" என்ற சொல்லிற்குப் பொருளாக இருப்பவர், (பதஞ்ஜலி முனிவர் இயற்றிய யோகசாஸ்திரத்தில் "ஜீவாத்மாக்களைப் போன்று க்லேசங்கள், கர்மாக்கள் முதலியவை-களால் தீண்டப்படாதவன் ஈச்வரன். அவனைக் குறிக்கும் சொல் ஓங்காரம் ஆகும் என்று "क्लेशकर्म विपाकाशयैरपरामृष्टः पुरुषविशेषः ईश्वरः:" (க்லேசகர்ம விபாகாசயைரபராம்ருஷ்ட: புருஷவிசேஷ: ஈச்வர:) तस्य 'वाचकः प्रणवः" (தஸ்ய வாசக: ப்ரணவ:) என்ற ஸூத்ரங்க-ளால் கூறப்பட்டிருப்பது கவனத்திற்கு உரியதாகும்.

427. ओङ्कार: ஓங்கார:
ஓங்காரத்தின் பொருளாக இருப்பது போலவே ஓங்காரம் என்ற சொல்லின் வடிவமாகவும் இருப்பவர்.

428. ओजस्वान् ஓஜஸ்வான்
ஓஜஸ்ஸுடன் கூடியவர். (சௌர்யம், வீர்யம், தைர்யம், முதலான பெருமைகளுக்குக் காரணமாக இருப்பது எட்டாவது தாதுவாகும். இதுவே ஓஜஸ் எனப்படும்' என்று வேதபாஷ்யத்தில் ஸாயணா-சார்யரால் கூறப்பட்டிருப்பது கவனத்திற்கு உரியதாகும்.)

429. ओषधीपति: ஓஷதீபதி:
ஓஷதிகளுக்குத் தலைவர். ஓஷதிகளின் வளர்ச்சிக்குக் காரணமாக இருப்பவர் என்பது கருத்து. (பழங்களை அடைந்தவுடன் அழிந்து-விடும் கொடி செடிகள் ஓஷதிகள் எனப்படும். வாழை முதலியவை ஓஷதிகளாகும்)

430. औदार्यनिधि: ஔதார்ய நிதி:

அடியார்களுக்கு எப்பொழுதும் அனைத்தையும் வாரி வழங்கும் கொடை வள்ளலாக இருப்பவர்

431. औद्धत्यधुर्य: ஔத்தத்யதுர்ய:

தனது பக்தர்களை அனுக்ரஹிப்பதற்கு விருப்பம் உள்ளவராய், தனது மேன்மைகளைத் தயங்காமல் அடிக்கடி வெளியிடுவதில் மிகச் சிறந்தவர்.

432. औन्नत्यनिस्वन: ஔந்நத்யநிஸ்வந:

ஒலிகளுக்கு எல்லாம் மேலான ஒலியான யானையின் ஒலியை (ப்ரும்ஹிதத்தை) உடையவர்.

433. अङ्कुश: सुरनागानाम् அங்குச: ஸுரநாகாநாம்

மேலுலகத்தில் வாழும் தேவர்கள் முதல் கீழ் உலகத்தில் வாழும் ஸர்ப்பங்கள் வரை மூன்று உலகங்களிலும் வஸிக்கும் ஸகல ஜீவராசிகளையும் அடக்கி ஆளுபவர்.

434. अङ्कुश: सुरविद्विषाम्

அங்குச: ஸுரவித்விஷாம்

(உலகத்தின் நன்மைக்கான செயல்களில் ஈடுபாடுடைய) தேவர்களுக்கும், ஞானிகளுக்கும் தீங்கிழைக்கும் பகைவர்களைத் தண்டிப்பவர்.

435. अ: समस्तविसर्गान्तपदेषु परिकीर्तित:

அ: ஸமஸ்தவிஸர்காந்த பதேஷு பரிகீர்தித:

'அ' முதலான ஐம்பத்தோரு எழுத்துக்களில் ஆரம்பிக்கப்படுபவைகளும், விஸர்கத்தில் முடிகின்றவைகளுமான எல்லா சொற்களாலும் வருணிக்கப்படுகின்றவர்.

436. कमण्डलुधर: கமண்டலுதர:

அமுதம் நிறைந்த குடத்தை தந்தத்தால் தாங்கி நிற்பவர்.

437. कल्प: கல்ப:

உலகங்கள் அழிந்து போகும் பிரளய காலமாக இருப்பவர். அல்லது எதையும் எளிதில் செய்து முடிக்கும் திறமை வாய்ந்தவர்.

438. कपर्दी கபர்தீ

தாமரைமணி மாலையைத் தரித்திருப்பவர். அல்லது மல்லர்களின் (கைச்சண்டைக்காரர்களின்) பகைவர். அல்லது சடை முடியர். [‘वराटधारी मल्लारिस्त्वं कपर्दी अथवा जटी’ खद्योतं பார்க்க]

439. कलभानन: கலபாநந:

இவ்வுலகத்தின் ஒலியையும், ஒளியையும் குன்ருமல் காப்பாற்று கின்றவர். அல்லது யானை முகத்தையுடையவர்.

440. कर्मसाक्षी கர்மஸாக்ஷீ

ஜீவர்களால் காணப்படாதவைகளும், அவர்களால் நிகழ்த்தப் படுபவைகளுமான வினைகளை நேரில் காண்பவர்.

441. कर्मकर्ता கர்மகர்தா

தீக்ஷிதர்களுடைய உள்ளங்களில் இருந்து கொண்டு யாகம் முதலிய நல்ல செயல்களில் ஈடுபடும்படி அவர்களைத் தூண்டுபவர்.

442. कर्माकर्मफलप्रद: கர்மாகர்ம பலப்ரத:

யாகம் முதலிய ஸத்கர்மாக்களின் பயனான ஸ்வர்கத்தையும், ஆத்ம ஸ்வரூப ஞானத்தின் பயனான மோக்ஷத்தையும் தகுதியுள்ள அடியார்களுக்கு அளிப்பவர்.

443. कदम्बगोलकाकार: கதம்பகோலகாகார:

உடல் முழுவதும் பரவியிருக்கும் நாடிகள் அனைத்தும் தோன்றும் இடமாக இருப்பதும் கதம்பகுஸுமம் (கடம்பமலர்) போன்று இருப்பது மான ஹ்ருதயம் முழுவதும் வ்யாபித்து தேவதா வடிவமாக இருப்பவர்.

444. कूष्माण्डगणनायक: கூஷ்மாண்ட கணநாயக:

ஜீவராசிகளுக்குத் துன்பத்தை விளைவிக்கும் கூஷ்மாண்டம் முதலான துஷ்ட கிரஹங்களின் கூட்டத்தைத் தன் இஷ்டப்படி நடத்துபவர்.

445. कारुण्यदेह: காருண்யதேஹ:

தயையின் வடிவமாக இருப்பவர்.

446. कपिल: கபில:

(கர்தம முனிவருக்குப் புதல்வனுகத் தோன்றிய) கபில வாஸுதேவராக இருப்பவர்.

447. कथक: கதக:

(தத்வத்தை முறையாக அறிய விரும்புகின்ற அடியார்களின் அருகாமையில் வந்து) அவர்களது காதுகளில் ஸம்ப்ரதாயத்தை ரஹஸ்யமாகக் கூறி உபதேசிப்பவர்.

448. कटिसूत्रभृत् கடிஸூத்ரப்ருத்

இரத்தினங்கள் கோர்த்த தங்கமயமான அரைஞாண் அணிந்திருப்பவர்.

449. खर्व: கர்வ:

கச்யப முனிவருக்கு மகனுகத் தோன்றிய வாமன ரூபியான விஷ்ணுவாக இருப்பவர்.

450. खड्गप्रिय: கட்கப்ரிய:

'கட்கம்' எனப்படும் ஒருவகை மானிடம் அன்பு கொண்டவர். அல்லது தீயவர்களைத் தண்டிப்பதற்கு கத்தி என்ற ஆயுதத்தில் பிரியமுள்ளவர்.

451. खड्गखान्तःस्थ: கட்ககாந்தஸ்த:

'கட்க' என்ற சொல்லில் ख 'க' என்ற எழுத்தை அடுத்துள்ள ड 'ட' என்ற எழுத்திற்கும் அடுத்து நிற்கும் ग 'க' என்ற எழுத்தில் (தன்னுடைய மந்திர பீஜாக்ஷரத்தில்) நிலை பெற்றிருப்பவர்.

452. खनिर्मल: கநிர்மல:

ஆகாசம் போன்று எங்கும் இருப்பவர் ஆனாலும் மாசு லேசமும் இல்லாமல் இருப்பவர்.

453. खल्वाटशृङ्गनिलय: கல்வாடச்ருங்கநிலய:

முடியில்லாத தலையைப் போன்று மரங்களில்லாமல் மொட்டையாக இருக்கும் குன்றின் சிகரத்தின் மேல் வஸிப்பவர் (திருச்சிராப்

பள்ளியில் மலைக்கோட்டையில் உச்சிப்பிள்ளையார் கோயில் என்ற புகழ்பெற்ற மலைமேல் மஹாகணபதி வஸித்துக் காக்ஷி அளிக்கிறார்.)

454. खट्वाङ्गी கட்வாங்கீ

"கட்வாங்கம்" என்ற பெயருள்ள ஒருவகைக் கத்தியைத் தாங்கி நிற்பவர். (கணபதியின் இருபத்து ஒன்பது விதமான ஆயுதங்களுள் கட்வாங்கமும் ஒன்றாகும். இது நீளமான கத்தி, போரில் படைகளை வெட்டப்பயன்படுவது. இதில் ஒரு முனையுடையதும், இரு முனை-யுடையதும் உண்டு. குத்துக் கத்தியாகக் கூறிய நுனியுடையதும் உண்டு. பழங்கால மன்னர்கள் இதை இடுப்பில் செருகியிருப்பது வழக்கம்.)

455. खदुरासद: கதுராஸத:

உருவமற்ற ஆகாயம் கட்டிப்பிடிக்க முடியாதது போன்று (பக்தி இல்லாத) ஒருவராலும் அணுகமுடியாதவர்.

456. गुणाढ्य: குணாட்ய:

எண்ணிறந்த கல்யாண குணங்கள் நிறைந்தவர்.

457. गहन: கஹந:

வெளி விஷயங்களிலேயே ஈடுபாடு உள்ளவர்களும் புண்ணியம் செய்யாதவர்களுமான மாந்தர்களால் அறிந்து கொள்ள முடியாதவர்.

458. गस्थ: கஸ்த:

(ग) "க" என்ற தன்னுடைய மந்திர பீஜாக்ஷரத்தில் எப்-பொழுதும் நிலைத்து இருப்பவர்.

459. गद्यपद्यसुधार्णव: கத்யபத்ய ஸுதார்ணவ:

வசன வடிவமானதும், செய்யுள் வடிவமானதும், காவ்ய ரஸம் நிறைந்ததுமான இலக்கியங்கள் தோன்றுவதற்கு அமுதத்தைத் தோற்றி வைத்த பாற்கடல் போன்று இருப்பிடமானவர். (மஹா கவி ஆவதற்கு மஹாகணபதியின் கருணை இன்றி அமையாதது என்பது கருத்து)

460. गद्यगानप्रियः கத்யகானப்ரிய:

கானம் செய்யத் தகுந்த (வேறு ஒன்ருலும் நிஷேதிக்கப்படாத) ஸாமகானத்தைக் கேட்டுக் கொண்டிருப்பதில் திருப்தி உள்ளவர்.

461. गर्जः கர்ஜ:

மேகத்தின் ஒலி வடிவமாக இருப்பவர்.

462. गीतगीर्वाणपूर्वजः கீதகிர்வாண பூர்வஜ:

'கீதம்' (பாட்டு) முதலான சொற்கள் நாதத்திலிருந்து தோன்றின. நாதத்தின் பொருளிலிருந்து தேவர் முதலானேர் தோன்றினர். இவ்விரண்டின் வடிவமாக இருப்பவர்.

463. गुह्याचाररतः குஹ்யாசாரரத:

புத்தி எனப்படும் குஹையில் துலங்கும் ஜீவாத்மாவையும், பரமாத்மாவையும் தெளிந்த மனத்தால் அடைந்து, வெளிவிஷயங்களை மறந்திருக்கும் மஹான்களிடம் மிக்க ஸந்தோஷம் அடைந்தவர்.

464. गुह्यः குஹ்ய:

தனிமையில் இருந்து அறியத் தகுந்தவர். அல்லது, இளையோனுன முருகனுக்கு நன்மை செய்தவர்.

(வள்ளியை மணம் புரிவதற்கு முயற்சி செய்யும் முருகனுக்கு நன்மை செய்ய விருப்பம் கொண்ட கணேசர் யானை உருவம் தாங்கி வள்ளியை அச்சமுறச் செய்து தன்னை அடைவதற்குக் காத்திருக்கும் கந்தனை ஓடி அடையும்படி செய்தார் என்ற கதை நினைவிற்குக் கொண்டுவரத் தக்கது).

465. गुह्यागमनिरूपितः குஹ்யாகமநிருபித:

ரஹஸ்ய நூல்களான வேதாந்தங்களால் தெளிவுபடக் கூறப்பட்ட மஹிமை வாய்ந்தவர்.

466. गुहाशयः குஹாசய:

புத்தி எனப்படும் குஹையில் (ஹ்ருதயாகாசத்தில்) படுத்திருப்பவர் (அறியத் தகுந்தவர்) 'यो वेद निहितं गुहायाम्' (யோ வேத நிஹிதம் குஹாயாம்) என்ற தைத்தரிய உபநிஷத் வாக்யம் இதில் பிரமாணமாகும்)

467. गुहाब्धिस्थ: குஹாப்திஸ்த:

ஹ்ருதய குஹையில் கடல் போன்று ஆழம் காண முடியாததாக இருக்கும் அவ்யாகிருதாகாசத்தில் (எல்லாவற்றிற்கும் மூல காரண-மான மாயையில்) இருப்பவர். அவ்யாகிருதாகாசத்தைத் தாங்கி நிற்பவராய் இருந்துகொண்டு அதனுள் காணப்படுகின்றவர்.

468. गुरुगम्य: குருகம்ய:

ஸம்பிரதாயம் அறிந்த ஸத்குருவினுல் உபதேசிக்கப்பட்ட ஞான-யோகத்தால் அடையத் தகுந்தவர்.

469. गुरोर्गुरु: குரோர்குரு:

உலகம் அனைத்திற்கும் குருவான பிரும்மதேவனுக்கும் வேதங்களை உபதேசித்த குருவாக இருப்பவர். "यो ब्रह्मांणं विदधाति पूर्वम् यो वै वेदांश्च प्रहिणोति तस्मै" (யோ பிரும்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச பிரஹிணோதி தஸ்மை) என்ற வேதவசனம் இங்கு பிரமாணமாகும். சிவ ஸூத்திரத்தில் गुरुरूपाय "குருருபாய" என்று கூறியிருப்பதும் இதற்குத் தக்க ஆதாரமாகும்.

470. घण्टाघर्घरिकामाली கண்டாகர்கரிகாமாலீ

பெரிய வெண்கல மணியின் ஒலி போன்ற ஒலியை உடைய, சிறிய மணிகளால் செய்யப்பட்ட மாலையை உடையவர்.

471. घटकुम्भ: கடகும்ப:

கவிழ்த்து வைக்கப்பட்டிருக்கும் இரண்டு தண்ணீர்க் குடங்களைப் போன்று இரண்டு முண்டுகளுடன் கூடிய தலையை உடையவர்.

472. घटोदर: கடோதர:

குடம் போன்ற பெரிய வயிற்றை உடையவர்.

473. चण्ड: சண்ட:

பராக்ரமம் (எளிதில் பகைவர்களால் எதிர்க்க முடியாத உடல், புலன் முதலியவற்றின் வலிமை) உடையவர்.

474. चण्डेश्वरसुहृत् சண்டேச்வர ஸுஹ்ருத்

பரம சிவனுடைய தொண்டர்களின் தலைவனான சண்டேச்வரருக்கு நெருங்கிய நண்பர்.

475. चण्डीश: சண்டீச:
சண்டிகா தேவிக்குத் தலைவர்.

476. चण्डविक्रम: சண்டவிக்ரம:
மிக்க சினமுடைய கணங்களை (தொண்டர் கூட்டங்களை) பராக்ர-மத்தால் தன் அடிமையாகக் கொண்டவர்.

477. चराचरपति: சராசரபதி:
அசையும் பொருளும், அசையாப் பொருளும் நிறைந்த இந்த உலகிற்கு நிகர் இல்லாத ஒரே தலைவர்.

478. चिन्तामणिचर्वणलालस: சிந்தாமணி சர்வண லாலஸ:
அடியார்களால் உள்ளத்தில் எண்ணிக் கூடப் பார்க்காதவை-களான நன்மைகளை அவர்களுக்கு அளித்து, கொடையில் பெயர் பெற்ற தேவலோகத்திலுள்ள சிந்தாமணி இரத்தினத்தில் புகழை அழித்தவர்.

479. छन्द: சந்த:
''காயத்ரீ'', ''உஷ்ணிக்'', ''அநுஷ்டுப்'' முதலிய சந்தஸ்ஸின் வடிவமாக இருப்பவர்.

480. छन्दोवपु: சந்தோவபு:
ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற நான்கு வேதங்களையே தனது உடலாகக் கொண்டவர்.

481. छन्दोदुर्लक्ष्य: சந்தோ துர்லக்ஷ்ய:
வேதங்களாலும் எளிதில் விளக்கம் தர முடியாத ஸ்வரூபத்தை உடையவர்.

482. छन्दोविग्रह: சந்தோவிக்ரஹ:
அடியார்களின் பக்திக்குக் கட்டுப்பட்டுத் தன் இஷ்டப்படிப் பலவிதமான உடல்களை அடைந்து அவதரித்தவர்.

483. जगद्योनि: ஜகத்யோநி:
உலகங்கள் அனைத்திற்கும் காரணமாக இருப்பவர்.

484. जगत्साक्षी ஜகத்ஸாக்ஷீ

இவ்வுலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்தையும் நேரில் காண்பவர்.

485. जगदीश: ஜகதீச:

உலகத்தினர் அனைவரையும் அவரவருடைய முற்பிறவியில் செய்துள்ள வினைகளுக்கு ஏற்பச் செயல்படும்படி ப்ரேரணை செய்யும் தலைவர்.

486. जगन्मय: ஜகன்மய:

உலகம் அனைத்தையும் (மூலாதாரமாக இருந்து) தாங்கி நிற்பவர்.

487. जप: ஜப:

தெய்வங்களைக் குறிக்கும் மந்திரங்களை ஆவர்த்தி செய்வது ஜபமாகும். மனத்தினுள் மந்திரங்களை ஆவர்த்திப்பது மானஸ ஜபம் (मानसजप:) பிறர் செவியில் விழாமல் மெதுவாகக் கூறுவது உபாம்சு ஜபம் (उपांशुजप:) உரக்க வாய்விட்டு பிறர் கேட்கும்படி உரைப்பது உச்சைர்ஜபம் (उच्चैर्जप:) இத்தகைய மூன்று விதமான ஜபத்தின் வடிவமாக இருப்பவர்.

488. जपपर: ஜபபர:

மந்திரத்தைத் தொடர்ச்சியாக ஜபம் செய்துவரும் பக்தனாகவும் இருப்பவர்.

489. जप्य: ஜப்ய:

மானிடர்கள் அனைவரும் மேன்மை அடைவதற்குகென்று ஏழு கோடி மஹா மந்திரங்கள் முக்காலமுணர்ந்த முனிவர்களால் உபதேசிக்கப்பட்டுள்ளன. அம்மந்திரங்கள் அனைத்தாலும் ஜபம் செய்யத் தகுந்தவர்.

490. जिह्वासिंहासनेश्वर: ஜிஹ்வாஸிம்ஹாஸநேச்வர:

புகழும் பெருமையும் பொருந்திய மஹாராஜனை சிங்காஸனத்தில் அமர்த்திப் பஹுமானிப்பதுபோல பெருமை வாய்ந்த கணபதியின் திருநாமத்தைத் தன்னுடைய நாவாகின்ற சிங்காஸனத்தில் இருத்தி

இடையராது பக்தி சிரத்தையுடன் ஆராதனை (ஜபம்) செய்பவனுக்கு அந்நாமம் எல்லா செல்வங்களையும் அளிக்கின்றது. அத்தகைய திரு நாமம் உடையவர்.

491. झलज्झलोल्लसद्दानझङ्कारि-भ्रमराकुल:

ஜலஜ்ஜலோல்லஸத்தாநஜங்காரி—ப்ரமராகுல:

தனது காதுகளின் அருகாமையில் இரு கன்னங்களிலிருந்தும் 'ஜல ஜல' என்று ஓசையுடன் பெருக்கெடுத்தோடும் மதஜலப் பெருக்கைப் பருகுவதற்கு ஜங்காரத்துடன் விரைந்து ஓடிவரும் வண்டுகளால் சூழப்பட்டவர்.

492. टङ्कारस्फारसंराव: டங்காரஸ்பார ஸம்ராவ:

நீண்ட தூரம் வியாபித்து கணீரென்று ஒலிக்கும் வெண்கலத்தின் ஒலியைப் போன்ற இனிமையான குரலை உடையவர்.

493. टङ्कारिमणिनूपुर: டங்காரிமணிநூபுர:

ஒலியுடன் கூடியதும், இரத்தினங்களால் அழகு வாய்ந்ததுமான (பாதஸரத்துடன்) கால் சிலம்புடன் கூடியவர்.

494. ठद्वयीपल्लवान्तःस्थसर्वमन्त्रैकसिद्धिद:

டத்வயீபல்லவாந்த:ஸ்தஸர்வமந்த்ரைகஸித்தித:

பக்தர்களால் ச்ரததையுடன் ஜபம் செய்யப்படுகின்ற 'ஸ்வாஹா' என்ற சொல்லில் முடிவடையும் எல்லா மந்திரங்களிலிருநதும் ஏற்படுகின்ற மிக்க மேன்மையான ஸித்திகளை (ஸகலவிதமான இம்மை மறுமைப் பெருமைகளை) தந்து அருளுபவர்.

495. डिण्डमुण्ड: டிண்டிமுண்ட:

கவிழ்த்து வைக்கப்பட்டிருக்கும் 'டிண்டிமம்' எனப்படும் துந்துபி வாத்யங்கள் இரண்டைப் போன்ற இரண்டு முண்டுகளுடன் கூடிய தலையை உடையவர்.

(பீமஸேனனை பீமன் என்றும், ஸத்யபாமையை பாமை என்றும் வழங்குவது போல இங்கு டிண்டிமமானது டிண்டி என்று முழுச் சொல்லின் ஒரு பகுதியால் வழங்கப்பட்டிருக்கிறது.)

496. डाकिनीश: டாகினீச:

டாகினிகளின் தலைவர். (டாகினி என்று வழங்கப்படும் ஸத்ய-கணம் முதலிய யோகினி தேவதைகள், ஸ்ரீவித்யை முதலிய உபாஸனைகளைச் செய்பவர்களால் ஆறு விதமான ந்யாஸத்தில் ஆதரித்துப் பூஜனை செய்யப்படுபவைகளாகும்)

497. डामर: டாமர:

டாமரம் என்று புகழ் பெற்ற ஒப்புயர்வற்ற தந்திர சாஸ்திர வடிவமாக இருப்பவர்.

498. डिण्डिमप्रिय: டிண்டிமப்ரிய:

துந்துபி வாத்யத்தின் முழக்கத்தைக் கேட்பதில் மிக்க ஸந்தோஷ-முடையவர்.

499. ढक्कानिनादमुदित: டக்காநிநாதமுதித:

'உடுக்கை' எனப்படும் வாத்யத்திலிருந்து வெளிவரும் ஒலியைக் கேட்பதில் மிக்க ஆனந்தமுடையவர்.

500. ढौक: டௌக:

ஜீவராசிகள் அணுவருடையவும் புலன்களில் வஸிக்கின்றவராய் எல்லாவற்றையும் நேரில் அறிகின்றவர். गत्यर्थात् ढौकृतेढौक: सर्वगोवासिसर्ववित् । खद्योतम् —பார்க்க

501. ढुण्ढिविनायक: டுண்டிவிநாயக:

ஸம்ஸாரக் கடலைக் கடந்து வீட்டை அடைய விருப்பம் உள்ள அடியார்களுக்கு தத்வ விசாரத்தால் அறியத் தகுந்தவரும், அறிந்து அடையத் தகுந்தவருமான ஸகலவருக்கும் மேலான தலைவர் [काशीखण्डे ढुण्ढिधातु: प्रथितो ऽन्वेषणार्थक: विशिष्टो नायकोऽन्वेष्य इति ढुंढिविनायक: ।। खद्योतं பார்க்க]

502. तत्वानां परमं तत्वं தத்வானும் பரமம் தத்வம்

தத்வங்களுக்கெல்லாம் மேலான தத்வமாக இருப்பவர்.

ஸாங்கியர்கள் எனப்படும் தத்வவாதிகள் கபிலமுனிவரின் கொள்கைகளைப் பின்பற்றி தத்வங்களை இருபத்தைந்தாகக் கணக்கிட்டுக் கூறுகின்றனர்.

ஒரு பொழுதும் கார்யமாகாமல எப்பொழுதும் காரணமாகவே இருக்கும் பிரகிருதி தத்வம், காரணமாகவும், கார்யமாகவும் ஆகும் இயல்புடையவைகளான மஹத்தத்வம், அஹங்கார தத்வம், சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் எனப்படும் ஐந்து தன்மாத்திரைகளான ஐந்து தத்துவங்கள் ஆக ஏழு தத்துவங்களாகும். ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஆகாயம் முதலிய பூதங்கள் ஐந்து, மனம் ஒன்று ஆக பதினாறு தத்துவங்கள் ஆகும். இவை எப்பொழுதும் கார்யமாகவே இருப்பவைகள் ஆகும். ஒன்றிற்கும் காரணமாகவோ கார்யமாகவோ இல்லாமல் பந்தம், மோக்ஷம் இவைகளை அனுபவிக்கும் ஜீவாத்மா ஒரு தத்வமாகும். இந்த இருபத்தைந்து தத்துவங்களுக்கும் தத்துவமாக (காரணமாக) இருப்பவர்.

503. तत्त्वंपदनिरूपित: தத்வம் பதநிரூபித:

'தத்வமஸி' என்ற வேதாந்த மஹாவாக்யத்தில் அடங்கியிருக்கும் தது, த்வம் (तत्. त्वम्) என்ற இரண்டு சொற்களும் முதலில் வாச்யப் பொருளாக, படைத்தல், காத்தல், அழித்தல் என்ற தர்மங்கள் சேர்ந்த பரமாத்மாவையும், ஜாகரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி (விழிப்பு, கனவுநிலை, ஆழ்ந்த உறக்கம்) ஆகிய தர்மங்கள் சேர்ந்த ஜீவாத்மாவையும் முறையே அறிவிக்கின்றன. முரண்பாடுள்ள தர்மங்கள் நிறைந்த ஜீவாத்மாவிற்கும், பரமாத்மாவிற்கும் ஐக்யம் (ஒன்றுகும் தன்மை) பொருந்தாதுபற்றி மேற்படி சொற்கள் லக்ஷணையால் முரண்பாடுகளுள்ள அந்த தர்மங்களை விடுத்து, ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றுவதற்கு ஏற்றதான சச்சிதானந்த ஸ்வரூபத்தைப் போதிக்கின்றன. அத்தகைய ஸச்சிதானந்த வடிவமான ஜீவபரமாத்ம ஸ்வரூபமாக இருப்பவர்.

504. तारकान्तरसंस्थान: தாரகாந்தரஸம்ஸ்தான்:

கண்ணில் கருப்பு விழியில் இருப்பவர். 'य एषोन्तरक्षिणि पुरुषो दृश्यते' (ய ஏஷோந்தரக்ஷிணி புருஷோ த்ருச்யதே') என்ற சாந்தோக்யோபநிஷத் வசனம் இதற்கு மூலமாகும்.

505. तारक: தாரக:

துறவிகளால் வழிபடப்படும் 'ஓங்காரம்' போன்று பிறப்பு,

இறப்பாகிற ஸம்ஸாரக் கடலிலிருந்து ஜீவர்களைக் கரை ஏற்றி விடுபவர்

506. तारकान्तक: தாரகாந்தக:

தேவர்களைத் துன்புறுத்திய தாரகாஸுரனைக் கொன்ற கந்த பெருமானாக இருப்பவர்

507. स्थाणु: ஸ்தாணு:

பிரளய காலத்தில் உலகத்தை அழிககத் தோன்றும் மிக்க கொடிய காற்று, தீ, நீர், இவைகளால் சிறிதும் கேடு அடையாமல் அசைவற்று இருப்பவர்.

508. स्थाणुप्रिय: ஸ்தாணுப்ரிய:

பரமசிவனுடைய அன்பிற்கு இருப்பிடமான மைந்தர்.

509. स्थाता ஸ்தாதா

போர்க்களத்தில் ஆகாயம் போன்று அசையாமல் முன் வைத்த காலை எடுக்காமல் நிற்பவர் (எப்பொழுதும் வெற்றியுடன் இருப்பவர்). கல்பகாலத்திலும் (எல்லாம் அழியும் காலத்திலும்) அழியாமல் நிற்பவர்.

510. स्थावरं जङ्गमं जगत् ஸ்தாவரம் ஜங்கமம் ஜகத்

அசையும் பொருளும் அசையாப் பொருளுமாக இருக்கும் இப் பிரபஞ்சத்தின் வடிவமாக இருப்பவர்

511. दक्षयज्ञप्रमथन: தக்ஷயஞப்ரமதன:

தக்ஷயாகத்தை நாசம் செய்த வீரபத்ரராக இருப்பவர்.

512. दाता தாதா

தானம் செய்பவர். தான் ஈட்டிய பொருளைத் தகுதி பெற்ற பெரியவர்களுககு அளித்து அதனைத் தூய்மைப்படுத்துவது போல கணேசர் தன்னை வந்தடைந்த அடியார்களின் பாவங்களைப் போக்கி அவர்களைப் பரிசுத்தமாக்குகிறவர்

513. दानवमोहन: தானவமோஹன:

(மிகவும் கொடியவர்களான) அஸுரர்களை நேர்மையான வழி-யில் நாட்டமற்றவர்களாகச் செய்து அவர்களுக்கு உள்ளக் கலக்கத்தை ஏற்படுத்துகிறார்.

514. दयावान् தயாவான்
மிக்க இரக்கம் உள்ளவர் (எப்போதும் அடியார்களின் துன்பங்களை அகற்றுவதில் விருப்பம் உள்ளவர்.)

515. दिव्यविभवः திவ்யவிபவ:
தன்னை பஜிப்பவர்களிடம் எல்லாவிதமான செல்வங்களும் வந்து சேரும்படி செய்பவர்.

516. दण्डभृत् தண்டப்ருத்
இவ்வுலகில் குற்றம் புரிந்தவர்களைத் தண்டிப்பதற்கான நீதி குன்றாமல் அதைக் காப்பாற்றுகின்றவர்.

517. दण्डनायकः தண்டநாயக:
எல்லா திசைகளிலும் உயிரினங்கள் நெறி தவறாமல் இருக்கும்படி ஆட்சி புரிகின்ற யமன் முதலிய திக்பாலர்களை நேர்மையாக நடக்கும் படி செய்பவர்.

518. दन्तप्रभिन्नाभ्रमालः தந்தப்ரபிந்நாப்ரமால:
தலையை அசைப்பதனாலேயே மேகங்களின் வரிசையை அங்கு-மிங்கும் கலைந்து போகும்படி செய்பவர். [தலையை அசைக்கும்போது முகத்திலிருந்து வெளிவந்தவைகளும் நீண்டவைகளுமான தந்தங்க-ளால் குத்தப்பட்டு மேகங்கள் கலைகின்றன என்பது கருத்து]

519. दैत्यवारणदारणः தைத்யவாரணதாரண:
(நாட்டிற்கு நலந்தரும் நல்ல காரயங்களையும், நல்லவர்களையும் நாசம் செய்யும் பணியில் முனைத்திருக்கும்) தானவர்களைத் தடுத்து வேருடன் அவர்களை அழிப்பவர். [वारयन्दा ' यन्दैत्यान्दैत्यवारणदारणः खद्योतं பார்க்க]

520. दंष्ट्रालग्नद्विपघटः தம்ஷ்ட்ராலக்னத்விபகட:
போரில், பகைவர்களுடைய யானைகளின் கூட்டத்தைத் தனது கடைவாய்ப்பல்லின் இடையே இருக்கும்படி செய்பவர்.

521. देवार्थनृगजाकृतिः தேவார்தந்ருகஜாக்ருதி:
தேவர்களின் வேண்டுகோளின்படி, அவர்களுடைய விருப்பத்தை

நிறைவேற்றுவதற்காக கழுத்தின் மேல்பாகத்தில் யானையினுடையவும் கீழ்பாகத்தில் மனிதனுடையவும் உருவத்தைத் தாங்கித் தோன்றியவர்.

522. धनधान्यपतिः தனதான்யபதி:

தன்னை வழிபடும் அடியார்களுக்கு இரத்தினம், தங்கம், வெள்ளி போன்ற ஐச்வர்யத்தையும், நெல், கோதுமை, உளுந்து, பயறு முதலிய தான்யங்களையும் வாரி வழங்குபவர்.

523. धन्यः தன்ய:

நிறை செல்வம் படைத்தவர் அல்லது புண்யம் நிறைந்தவர்.

524. धनदः தனத:

செல்வங்களுக்குத் தெய்வமான குபேரனாக இருப்பவர்.

525. धरणीधरः தரணீதர:

ஆதி சேஷனாகவும், ஆதிவராஹ ரூபியாகவும் இருந்து கொண்டு பூமியை தாங்கி நிற்பவர்.

526 ध्यानैकप्रकटः த்யானைகப்ரகட:

உள்ளம் உருகித் தன்னை எப்பொழுதும் தியானம் செய்து கொண்டிருக்கும் பக்தனுடைய உள்ளத்தில் மாசற்ற கண்ணாடியில் போன்று துலங்குபவர்.

குறிப்பு:— 527 முதல் 529 வரை உள்ள மூன்று நாமாக்கள் உள்ளத்தால் நிகழத்தப்படும் செயலான த்யானமும், அச்செயலின் செய்பொருளாகவும், அச்செயலைச் செய்பவனாகவும் அதாவது 'த்ரிபுடீ' त्रिपुटी ஆக இருப்பவர் என்று அறிவிக்கின்றன.

527. ध्येयः த்யேய:

எப்பொழுதும் த்யானம் (தொடர்ச்சியாய் உள்ளத்தில் செய்யப்படும் பாவனை) செய்யப்பட வேண்டியவர்

528. ध्यानं த்யானம்

தியானமாக (இடையறாமல், தொடர்ந்து உள்ளத்தில் ஏற்படுவதும், ஒரே பொருளைப் பற்றி நிற்பதுமான மனோவிருத்தியாக (உள்ளத்தின் ஒருவகை உருவமாக), இருப்பவர்.

529. ध्यानपरायण: த்யானபராயண:

எப்பொழுதும் த்யானத்தில் (நிரந்தரமாக உள்ளத்தில் செய்யப்படும் பாவனையில்) ஈடுபட்டிருக்கும் பக்தனாக இருப்பவர்.

530. नन्द्य: நந்த்ய:

மேன்மை அடைய விரும்புகின்ற மாந்தர்களனைவராலும் ஸந்தோஷிக்கும்படி செய்யத் தகுந்தவர்.

குறிப்பு:- இந்த நாமம் 'நந்த: (नन्द:) என்று அச்சிட்ட புத்தகங்களில் காணப்படுகின்றது. உரையாசிரியர் 'नन्द्य:' நந்த்ய: என்று பாடத்தைக் கையாண்டு नन्द्य आनन्दनीयोऽसि நந்தய ஆனந்த நீயோஸி என்று அதற்கு உரை செய்திருக்கிறார். எனவே 'नन्द्य:' நந்த்ய: என்ற பாடமே ஏற்க்கத்தகுந்ததாகும்.

531. नन्दिप्रिय: நந்திப்ரிய:

சிவனடியார்களுடைய முன்னணியில் நிற்கும் நந்திகேச்வரப் பெருமாளுக்கு மிகவும் இஷ்டமானவர்.

532. नाद: நாத:

ஹ்ருதய குகையில் தோன்றும் பத்து விதமான ஒலி வடிவமாக இருப்பவர்.

533. नादमध्यप्रतिष्ठित: நாதமத்யப்ரதிஷ்டித:

நாதத்தின் நடுவே நிலைபெற்றிருப்பவர். நாதானுஸந்தானம் செய்து அடையத்தகுந்தவர் என்பது கருத்து.

534. निष्कल: நிஷ்கல:

உறுப்புகள் இல்லாதவர். (உறுப்புகளால் ஏற்படும் வளர்ச்சி, தளர்ச்சி அற்றவர்.)

535. निर्मल: நிர்மல:

குற்றமற்றவர்

536. नित्य: நித்ய:

அழிவு இல்தாதவர்.

537. नित्यानित्य: நித்யாநித்ய:

அழிவில்லாத ஆகாயத்தினுடையவும், அழிவை உடைய மண் முதலியவைகளுடை யவும் வடிவமாக இருப்பவர்.

538. निरामय: நிராமய:

'அவித்யை' என்ற பெரும் பிணியால் பீடிக்கப்படாதவர்.

539. परंव्योम பரம்வ்யோம

பெயருடனும், உருவத்துடனும் துலங்குகின்ற பிரபஞ்சம் அனைத்தையும், பிரளயகாலத்தில் துலங்காமல் தன்னுள் வைத்திருக்கும் அவ்யாகிருத ஆகாசமாக இருப்பவர்.

540. परंधाम பரம்தாம

உலகத்தை விளங்கச் செய்யும் ஒளி மிகுந்த ஸூர்யன் முதலிய ஜ்யோதிகளுக்கும் ஜ்யோதியாக இருப்பவர்.

541. परमात्मा பரமாத்மா

ஸகல ஜீவாத்மாக்களுக்கும் மேலான ஆத்மாவாக இருப்பவிர்.

542. परंपदं பரம்பதம்

கைலாஸம், வைகுண்டம், ஸத்யலோகம் ஆகிய ஸ்தானங்களுக்கும் மேலான இடமாக இருப்பவர்.

543. परात्पर: பராத்பர:

மேன்மை தாங்கிய நான்முகன், நாராயணன், மஹாதேவன் இவர்களைக் காட்டிலும் மேன்மை தாங்கியவர்.

544. पशुपति: பசுபதி:

பிரும்மதேவன் முதல் சிறிய பூச்சி வரை உள்ள எல்லா ஜீவராசிகளையும் காப்பாற்றுகிறவர்.

545. पशुपाशविमोचक: பசுபாசவிமோசக:

'ஸாங்கியம்' முதலான தந்திர நூல்களில் ஜீவராசிகள் கட்டுண்டு துன்பமடையக் காரணமாக ஐம்பத்து இரண்டு விதமான பாசங்கள் கூறப்பட்டுள்ளன. அத்தகைய பாசங்களிலிருந்து பிரும்மதேவன் முதலான ஜீவர்களை விடுவிப்பவர்.

546. पूर्णानन्द: பூர்ணாநந்த:

ஸுகத்தின் அனுபவம், அதை அனுபவிப்பவன், அனுபவிக்கப்படும் பொருள் அதாவது கிரியை, கர்தா, கர்ம என்ற திரிபுடியான நிலை மறைந்து, வேறு ஒன்றும் கலவாத முழுமையான ஆனந்த ஸ்வரூபமாக இருப்பவர்.

547. परानन्द: பரானந்த:

முந்திய ஆனந்தத்தைக் காட்டிலும் பிந்திய ஆனந்தம் நூறு மடங்கு அதிகமானது என்ற கணக்கை அனுஸரித்து, மனுஷ்ய ஆனந்தம், மனுஷ்யகந்தர்வ ஆனந்தம், தேவ கந்தர்வ ஆனந்தம், பித்ரு ஆனந்தம், கர்ம தேவ ஆனந்தம், தேவ ஆனந்தம், தேவேந்திர ஆனந்தம், பிருஹஸ்பதி ஆனந்தம், விராட் ஆனந்தம், ஹிரண்யகர்ப ஆனந்தம் என்ற வரிசையில், மனுஷ்ய ஆனந்தத்தைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகமான ஹிரண்யகர்ப ஆனந்தத்திற்கும் மேலான ஆனந்தமாக இருப்பவர்.

(ஆனந்தத்தின் வேறுபாடுகளை தைத்தரீய உபநிஷத் பிரும்மானந்தவல்லியில் காண்க.)

548. पुराणपुरुषोत्तम: புராண புருஷோத்தம:

இவ்வுலகில் அடிக்கடி தோன்றி அழியும் பொருள்கள் அனைத்தும் க்ஷரம் எனப்படும். அங்ஙனம் அவைகள் தோன்றுவதற்கும், அழிவதற்கும் மூல காரணமான அவ்யாகிருதம் அக்ஷரம் எனப்படும். இத்தகைய க்ஷரம், அக்ஷரம் என்ற இரண்டினைக் காட்டிலும் உத்க்ருஷ்டமானவரும். என்றென்றும் புதுமையுடன், ஆதியற்றவராய் காட்சியளிப்பவருமாவர். [यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तम: अतोऽस्मि लोके वेदे च प्रथित:पुरुषोत्तम: என்ற கீதாவசனம் இங்கு கவனத்திற்குரியது.]

549. पद्मप्रसन्ननयन: பத்மப்ரஸந்நநயன:

நன்கு இதழ்கள் விரிந்து மலர்ந்த தாமரை மலரின் இதழ் போன்று அழகிய கண்களை உடையவர்.

550. प्रणताज्ञानमोचन: ப்ரணதாஜ்ஞாநமோசந:

தன் திருவடிகளில் வணங்கி வழிபடும் அடியார்களுக்கு உண்மை அறிவை உபதேசித்து அவர்களது அறியாமையை அகற்றுபவர்.

551. प्रमाणप्रत्ययातीत: ப்ரமாணப்ரத்யயாதீத:

கண், காது முதலான புலன்களின் வழியாக உள்ளத்தில் தோன்றும் அறிவுகள் யாவும் அழிவுள்ளவைகளாகும். புலன்களையும் உள்ளத்தையும், அதனுல் தோன்றும் அறிவுகளையும் பிரகாசப்படுத்தும் அழிவில்லாத ஆத்ம ஸ்வரூப ஞானமாக இருப்பவர்.

552. प्रणतार्तिनिवारण: ப்ரணதார்திநிவாரண:

தன்னை வணங்கி வழிபடும் பக்தர்களின் துன்பங்களைப் போக்கடித்து விளங்குபவர்.

553. फलहस्त: பலஹஸ்த:

தனது திருத் தொண்டர்களுக்குத் தாமதம் இன்றியே அவர்கள் விரும்பிய பயனை அளிப்பதற்காக கையில் அதனை வைத்துக் கொண்டு காத்திருப்பவர்.

554. फणिपति: பணிபதி:

ஸர்ப்பங்களின் தலைவர்களான வாஸுகிக்கும், ஆதிசேஷனுக்கும் தலைவனாக இருப்பவர்.

555. फेत्कार: பேத்கார:

'பேத்காரம்' என்று புகழ் பெற்ற தந்திர நூலில் வருணிக்கப்படுகின்றவர்.

556. फाणितप्रिय: பாணிதப்ரிய:

கரும்புச் சாரால் தயாரிக்கப்பட்ட சர்க்கரையில் மிகுந்த விருப்பம் உள்ளவர்.

557. बाणार्चिताङ्घ्रियुगल: பாணர்சிதாங்க்ரியுகள:

சிவ பக்தருள் சிறந்தவனான பாணாஸுரனுல் பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவர்.

558. बालकेलिकुतूहली பாலகேலிகுதூஹலீ

(அடியார்களின் மனத்தைக் கவருவதற்காக) மிக்க ஸந்தோஷத்துடன் குழந்தைகளின் விளையாட்டில் ஈடுபாடுடையவர்

559. ब्रह्म ப்ரஹ்ம

வேதாந்தங்கள் அனைத்திலும் அறியப்பட வேண்டிய தத்வமாக நிரூபிக்கப்படும் பிரும்ம தத்வமாக இருப்பவர்.

560. ब्रह्मार्चितपदः ப்ரம்ஹார்சிதபத:

ஸகல வேதங்களாலும் போற்றிப் புகழ்ந்து வருணிக்கப்படும் திருவடியை உடையவர்

561. ब्रह्मचारी ப்ரம்ஹசாரீ

திருமணம் ஆகாதவர். அல்லது, பரமாத்மாவினிடத்திலேயே மனத்தை நிலை நிறுத்தியவர்.

562. बृहस्पतिः ப்ருஹஸ்பதி:

தேவகுருவான வாசஸ்பதி வடிவமாக இருப்பவர்.

563. बृहत्तमः ப்ருஹத்தம:

இவ்வுலகிலுள்ள அனைவருக்கும் மேலான மேன்மை உடைய பிரும்மா, விஷ்ணு, சிவன் இவர்களைக் காட்டிலும் அதிசயித்த (மேலான) மேன்மை உடையவர்

564. ब्रह्मपरः ப்ரும்மபர:

வேதங்களில் மிகுந்த ஈடுபாடு உடையவர். (வேதங்களை ஓதுவதிலும், கேட்பதிலும், அதன் பொருளை ஆராய்ச்சி செய்வதிலும் காலத்தை கழிப்பவர் என்பது கருத்து)

565. ब्रह्मण्यः ப்ரஹ்மண்ய:

சுருதி, ஸம்ருதிகளில் கூறிய தர்மத்திலும் ஆசாரத்திலும் வழுவாதிருக்கும் அந்தணர்களுக்கு விரும்பியவற்றை அளித்து அவர்களை ஆதரிப்பவர்.

566. ब्रह्मवित्प्रियः ப்ரஹ்மவித்ப்ரிய:

பிரும்மத்தை நன்கு உணர்ந்து இவ்வுலகத்தை மறந்திருக்கும் மஹான்களிடம் அன்பு கொண்டவர்.

567 बृहन्नादाग्र्यचीत्कारः ப்ருஹந்நாதாக்ர்யசீத்கார:

மேகம், இடி இவைகளின் ஒலிகளைக் காட்டிலும் அதிகமான

ஓசையுடன் கூடியதும் "சித்காரம்" எனப்படுவதுமான யானையின் ஒலியை உடையவர்.

568. ब्रह्माण्डावलिमेखल: ப்ரஹ்மாண்டாவலிமேகல:

தனது விராட் (விச்வ) ருபத்தில் பிரும்மாண்டங்களை அரைஞாணில் சிறிய மணிகளைப் போன்று இடையில் வரிசையாகச் சேர்த்து அணிந்திருப்பவர்.

569 भ्रूक्षेपदत्तलक्ष्मीक: ப்ருக்ஷேபதத்தலக்ஷ்மீக:

தன்னை ஆராதனை செய்யும் பக்தர்களுக்கு அவர்களின் வேண்டுகோள் இன்றியே குறிப்பை அறிந்து புருவங்களை அசைப்பதினாலேயே எல்லாவிதச் செல்வங்களையும் அளிப்பவர்.

570. भर्ग: பர்க:

காயத்ரீ மந்திரத்தின் பொருளாக விளங்குபவர்.

571. भद्र: பத்ர:

யானைகள் பத்ரம், மந்தரம். ம்ருகம் என மூன்று வகைப்படும். அவைகளுள் பத்ரம் என்ற பிரிவைச் சேர்ந்த யானைகள் மிகச் சிறந்தவைகளாகும். அத்தகைய பத்ரம் என்ற யானையின் முகத்தை அடைந்தவர்.

572. भयापह: பயாபஹ:

ஸம்ஸாரத்தினின்றும் விடுதலை அடைய விருப்பம் உள்ள அடியார்களுக்கு, இரண்டற்ற (அத்வைதமான) ஆத்ம ஸ்வரூப ஞானத்தை அளித்து, இரண்டாவது பொருளிலிருந்து (த்வைதத்திலிருந்து) ஏற்படும் அச்சத்தைப் போக்கடிப்பவர்.

573. भगवान् பகவான்

எல்லா உயிர்களுடையவும் தோற்றம், மறைவு, ஒரு உடலை விட்டுப் பிரிந்து வேறொரு உடலை வந்தடையும் முறை, வாழ்வில் அவைகளுக்குள்ள அறிவு, அறியாமை இவை எல்லாவற்றையும் நேராகவே அறிகின்றவர்.

574. भक्तिसुलभ: பக்திஸுலப:

பக்தி வழியில் செல்கின்றவர்களால் எளிதில் அடையப்படுகின்றவர்.

575. भूतिद: பூதித:

அணிமா (மிகவும் சிறியதாகுதல்), மஹிமா (மிகவும் பெரியதாக இருத்தல்), கரிமா (அதிக பளுவுள்ளதாக இருத்தல்), லகிமா (மிகவும் லேசானதாக இருத்தல்), ப்ராப்தி (விரும்பியவற்றை அடைதல்) ப்ராகாம்யம் (தன் இஷ்டப்படி எங்கும் செல்லுதல்), ஈசித்வம் (எல்லாவற்றையும் தன் இஷ்டப்படி செயல்படும்படி செய்தல்), வசித்வம் (தான் ஒன்றிற்கும் கட்டுப்படாமல் இருத்தல்) எனப்படும் எட்டு விதமான ஐச்வர்த்தை (ஸித்திகளை) அடியார்களுக்கு அளிப்பவர்.

576. भूतिभूषण: பூதிபூஷண:

பசுவின் மலமானது (சாணம்) மந்திர ஜபத்துடன் முறைப்படி எடுத்து சுத்தி செய்யப்பட்டு விரஜா ஹோமம் என்ற முறையில் எறிக்கப்பட்டவுடன் அத்தகைய சாம்பலே பஸ்மம் (விபூதி) என்று அழைக்கப்படுகின்றது. அத்தகைய விபூதியை அணியைப்போல் உடலில் அணிந்திருப்பவர்

577. भव्य: பவ்ய:

வருங்காலத்தில் தோன்ற இருக்கும் பொருள்களாகவும் இருப்பவர்

578. भूतालय: பூதாலய:

மண் முதலான ஐந்து பூதங்களுக்கும், பிசாசம் முதலிய பூதங்களுக்கும், சென்ற காலத்தில் மடிந்து போன ஜீவராசிகளுக்கும் இருப்பிடமாக இருப்பவர்.

579. भोग [illegible]ता போகதாதா

உயிர்களுக்கு முற்பிறவியில் செய்துள்ள வினைப்பயனாக இன்பங்களுடையவும் துன்பங்களுடையவும் அனுபவங்களை அளிப்பவர்.

580. भ्रूमध्यगोचर: ப்ருமத்யகோசர:

"அவிமுக்தம்" என்று அறிஞர்களால் புகழ்ந்து பேசப்படும் புருவங்களின் நடுவில் யோகிகளுக்கு தியான காலத்தில் விளங்குபவர்.

581. मन्त्रः மந்த்ர:

ருக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்ற வேதங்களிலுள்ள மந்திரங்களாகவும், ஒரு அக்ஷரம், ஆறு அக்ஷரம், ஒன்பது அக்ஷரம் என்று மஹாகணபதியின் பெருமையை அறிவிக்கும் அநேக மந்திரங்களாகவும், அரசு புரியத் தேவைப்படும் ரஹஸ்யமான ஆலோசனை ரூபமான மந்திரமாகவும் இருப்பவர்.

582. मन्त्रपतिः மந்த்ரபதி:

முன்பு கூறப்பட்ட மந்திரங்களுக்குத் தலைவனாக (தெய்வமாக) இருப்பவர்.

583. मन्त्री மந்திரீ

முன்பு கூறப்பட்ட மந்திரங்களைத் தோற்றி வைத்தவர்.

584. मदमत्तमनोरमः மதமத்தமனோரம:

தன்னிடத்தில் உள்ளத்தை நன்கு ஒடுக்கி (ஸமாதி செய்து) வேறான விஷயங்களை மறந்து மயக்கம் உற்றிருக்கும் மஹான்களின் மனதைக் குளிரச் செய்பவர்.

585. मेखलावान् மேகலாவான்

பிரும்மச்சாரிகளால் அணியப்பட வேண்டும் என்று விதிக்கப் பட்டதும், தர்ப்பைப் புற்களால் தயாரிக்கப்பட்டதுமான மேகலை எனப்படும் கயிற்றை இடுப்பில் தரித்திருப்பவர்.

586. मन्दगतिः மந்தகதி:

ஞான மார்க்கத்தாலும், கர்ம மார்க்கத்தாலும் தன்னை வந்து அடைவதற்கு முடியாத மந்தர்களான அடியார்களை பக்தி வழியாகத் தன்னிடம் அழைத்துக் கொள்பவர்.

587. मतिमत्कमलेक्षणः மதிமத்கமலேக்ஷண:

பக்தர்களுக்கு அறிவுடன் கூடிய செல்வத்தைத் தனது கருணை நிறைந்த கடைக்கண் பார்வையாலேயே தந்து அருளுபவர்.

588. महाबलः மஹாபல:

ஜீவர்கள் அனைவருடையவும் பலத்திற்கு இருப்பிடமான பெரிய பலத்தை உடையவர்.

589. महावीर्यः மஹாவீர்ய:

எல்லா பிராணிகளிடமும் உள்ள வீர்யம் அனைத்திற்கும் காரணமாக இருக்கும் சிறந்த வீர்யம் உள்ளவர்.

590. महाप्राणः மஹாப்ராண:

இவ்வுலகில் உயிரினங்கள் எல்லாம் உயிர்வாழ்வதற்குக் காரணமான உயிர்களுக்கு இருப்பிடமான பெரியதோர் உயிரை உடையவர்

591. महामनाः மஹாமநா:

உள்ளம் படைத்த மாந்தர்களின் உள்ளங்கள் அனைத்திற்கும்—உறைவிடமான பெரியதோர் உள்ளம் படைத்தவர்.

592. यज्ञः யக்ஞ:

அச்வமேதம் முதலான வேள்விகளின் வடிவமாக இருப்பவர்.

593. यज्ञपतिः யக்ஞபதி:

யாகங்களில் பூஜிக்கப்படும் தேவதைகளின் வடிவமாக இருப்பவர்.

594. यज्ञगोप्ता யக்ஞகோப்தா

வேள்விகளை இடையூறு இன்றி முறைப்படி நடைபெறும்படி அவைகளைக் காப்பாற்றுபவர்.

595. यज्ञफलप्रदः யக்ஞபலப்ரத:

வேள்விகளை விதிப்படி அனுஷ்டிப்பவர்களுக்கு அதன் பயனை அளிப்பவர்.

596. यशस्करः யசஸ்கர:

புண்ணியம் செய்கின்ற பெரியார்களின் புகழைப் பரவச் செய்பவர்.

597. योगगम्यः யோககம்ய:

அகங்காரம் இன்றி, பயனைக் கருதாமல் வேள்விகளைச் செய்து-ஈசனிடம் ஸமர்ப்பிக்கின்ற கர்ம யோகிகளால் அறியத்தகுந்தவர்.

598. याज्ञिकः யாக்ஞிக:

வேள்விகளை முறைப்படி நடத்துகின்ற தீக்ஷிதர்களின் வடிவமாக இருப்பவர்.

599. याजकप्रिय: யாஜகப்ரிய:

மறைகளில் கூறிய முறைதளைத் தழுவி வேள்விகளை நிகழ்த்தும் அந்தணர்களிடம் அன்பு கொண்டவர்.

600. रस: ரஸ:

ரஸம் என்ற சொல்லால் வழங்கப்படும் ஆத்மானந்த ஸ்வருபமாக இருப்பவர். (रसो वै सः रसं ह्येवायं लब्ध्वा आनन्दी भवति) 'ரஸோ வை ஸ: ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆனந்தீ பவதி' (एषो अस्य परम आनन्द:) 'ஏஷோ அஸ்ய பரம ஆனந்த:' என்ற உபநிஷத் வசனங்கள் இந்த நாமத்தின் பிரமாணமாகும்.

601. रसप्रिय: ரஸப்ரிய:

சாந்தம் முதலிய ஒன்பது ரஸங்களிலும், இனிப்பு முதலிய ஆறு ரஸங்களிலும் விருப்பம் உள்ளவர்.

602. रस्य: ரஸ்ய:

ஆத்ம ஸ்வருபத்தை அனுபவிப்பதிலேயே இடையருமல் ஈடுபாடுடைய அறிஞர்களால் அனுபவிக்கப்படுகின்றவர்.

603. रञ्जक: ரஞ்ஜக:

யோக வழியில் தன்னிடம் ஒடுக்கப்பட்ட மஹான்களுடைய உள்ளங்களை குளிரச் செய்பவர்.

604. रावणार्चित: ராவணர்சித:

வேதங்கள், புராணங்கள், இதிஹாஸங்கள் முதலிய புண்ணிய சப்தங்களைப் பாராயணம் செய்பவர்களால் பூஜிக்கப்பட்டவர். அல்லது, தன் விருப்பம் நிறைவேறுவதற்காக லங்கேச்வரனை ராவணனுல் ஆராதிக்கப்பட்டவர்.

605. रक्षोरक्षाकर: ரக்ஷோரக்ஷாகர:

ஸாதுக்களைக் காரணம் இன்றித் துன்புறுத்துகின்ற அரக்கர்களை எரித்து சாம்பலாக்குபவர். (உடலில் தரித்துக் கொண்டவர்களின் பிணிகளை அகற்றி அவர்களைக் காப்பாற்றுவதனுல் பஸ்மத்தை ரக்ஷா என்ற சொல் குறிக்கின்றது)

606. रत्नगर्भः ரத்னகர்ப:

அனேக விதமான ஸாரமான பொருட்களை உட்கொண்டிருக்கும் பூமியைத் தாங்குபவர்.

607. राज्यसुखप्रदः ராஜ்யஸுகப்ரத:

தன்னை அண்டி நிற்கும் பக்தர்களுக்குச் செல்வம் நிறைந்த ராஜ்யத்தையும், அதனுல் ஏற்படும் எல்லாவிதமான இன்பங்களையும் அளிப்பவர்.

608. लक्ष्यम् லக்ஷ்யம்

யோகிகள் தங்களுடைய உள்ளங்களை ஒடுக்குவதற்கு ஏற்ற லக்ஷ்யமாக (குறிப்பாக) இருப்பவர்.

''யோகியானவன் ஓங்காரமாகிற வில்லில் தனது உள்ளமாகிற அம்பைப் பொருத்தி, அதனைக் குறிபார்த்து பிரும்மத்தினிடத்தில் சேர்த்துவிட வேண்டும்'' என்று முண்டகோபநிஷத்தில் கூறியிருப்பது இவ்விஷயத்தில் பிரமாணமாகும்.

609. लक्ष्यप्रदः லக்ஷ்யப்ரத:

உள்ளத்தை அசைவின்றி நிலையாய் இருக்கும்படி செய்ய விருப்பம் உள்ள மாந்தருக்கு லக்ஷக்கணக்கான லக்ஷ்யங்களை முனிவர்கள் உபதேசித்துள்ளனர். அத்தகைய லக்ஷ்யங்களைத் தடையின்றி பக்தர்களுக்கு அளிப்பவர்.

610. लक्ष्यः லக்ஷ்ய:

अयमात्मा ब्रह्म (அயமாத்மா ப்ரஹ்ம), तत्त्वमसि (தத்வமஸி), अहम् ब्रह्मास्मि (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்ற உபநிஷத்திலுள்ள மஹாவாக்யங்களில் அடங்கிய சொற்களால் லக்ஷணவிருத்தியால் அறியத் தகுந்தவர். (மறை பொருளாக உபதேசிக்கப்பட்டவர்).

611. लयस्थः லயஸ்த:

கல்பகாலத்தில் (பிரளய காலத்தில்) இருப்பவர். அல்லது யோகிகளின் ஒடுங்கிய உள்ளத்திலும் இருப்பவர்.

612. लड्डुकप्रियः லட்டுகப்ரிய:

மிகவும் இனிப்புள்ள சர்க்கரை சேர்த்து பாகம் செய்யப்பட்டதும், எள்ளு, பயிறு, கடலை முதலியவைகளால் தயாரிக்கப்பட்டதும்,

உருண்டை வடிவம் உள்ளதுமான லட்டு எனப்படும் பணியாரத்தில் விருப்பம் உள்ளவர்

613. लानप्रियः லானப்ரிய:

லானம் எனப்படும் யானைக் கொட்டிலில் வஸிப்பதில் ஆசை உள்ளவர்.

614. लास्यपरः லாஸ்யபர:

மிருதங்கம் முதலிய வாத்யங்களின் முழக்கம், வாய்ப்பாட்டு, ஆடை ஆபரணங்களால் நன்கு அலங்காரம் செய்து கொண்ட ஆண் பெண்களின், உட்கருத்தை வெளிக் காட்டும் கை, கால்கள் முதலிய உறுப்புகளின் அசைவுகள், இம்மூன்றும் சேர்ந்த நாட்டியத்தை நடத்துவதற்குத் தக்க மண்டபங்கள் நிறைந்திருக்கும் தன்னுடைய இல்லத்தில் நாட்டியங்களைக் கண்ணுற்று ஸந்தோஷமாகப் பொழுது போக்குபவர்.

615. लाभकृल्लोकविश्रुतः லாபக்ருல்லோகவிச்ருத:

பக்தர்களுக்கு தாமதம் இன்றியே விரும்பிய பொருளை அளிப்பவர்களான தேவர்களுள் மிகவும் சிறந்தவர் என்று புகழ் பெற்றவர்.

616. वरेण्यः வரேண்ய:

'கணேசரிடமிருந்து நான் வேறுபடாதவன்; கணேசராகவே நான் இருக்கிறேன்' என்ற அத்வைத பாவனையுடன் கணேசரை வழிபடும் வரேண்யன் எனப்படும் வேந்தனாக இருப்பவர். அல்லது எல்லோராலும் பூஜிக்கத் தகுந்தவர்.

617. वन्हिवदनः வஹ்ஹிவதன:

(தன்னை உத்தேசித்து அக்நியில் ஹோமம் செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தையும் அக்நிதேவன் மூலம் ஏற்றுக்கொண்டு திருப்தி அடைவதனால்) அக்நியை முகமாகக் கொண்டவர்.

618. वन्द्यः வந்த்ய:

எப்பொழுதும் யாவராலும் வணங்கத் தகுந்தவர்.

619. वेदान्तगोचरः வேதாந்தகோசர:

வேதங்களின் முடிகள் எனப்படும் உபநிஷத்துக்களின் வாயிலாக அறிந்துகொள்ளப்பட வேண்டியவர்.

620. विकर्ता விகர்தா

தோற்றம், இருப்பு, வளர்ச்சி, மாறுதல் அடைதல், தளர்ச்சி, மறைவு எனப்படும் ஆறுவிதமான விகாரங்களை (மாறுபாடுகளை) எல்லாப் பொருள்களுக்கும் அளிப்பவர்

621. विश्वतश्चक्षुः விச்வதச்சக்ஷு:

இலையோ, பூவோ, பழமோ, நீரோ, அவைகளை ஏற்பதற்கு எந்த பக்தன் எங்கு தனக்கு அளிக்கிறான் என்று எல்லாவிடத்திலும் கண்ணோட்டம் உள்ளவர்.

622. विधाता விதாதா

பக்தர்கள் அளிக்கும் பொருட்களை அந்தந்த இடத்திலேயே ஏற்றுக் கொண்டவர்.

623. विश्वतोमुखः விச்வதோமுக:

பக்தர்களால் அன்புடன் அளிக்கப்படுகின்ற பக்ஷயங்களை (பணியாரங்களை) அந்தந்த இடத்திலேயே ஸந்தோஷத்துடன் உண்பவர்.

624. वामदेवः வாமதேவ:

உள்ளத்தைக் கவரும் அழகு வாய்ந்தவராய் விளங்கிக் கொண்டிருப்பவர்.

625. विश्वनेता விச்வநேதா

உலகம் அனைத்திற்கும் தலைவர். அல்லது விஷ்ணுவிற்கும் தலைவர்.

626. वज्रिवज्रनिवारणः வஜ்ரிவஜ்ரநிவாரண:

இந்திரன் வஜ்ராயுதத்தை தன்மீது தூக்கி எறிய முற்பட்டபோது அவனுடைய வஜ்ராயுதம் ஏந்திய கையை அசைக்க முடியாமல் செய்தவர்.

627. विश्वबन्धनविष्कम्भाधार: விச்வபந்தனவிஷ்கம்பாதார:

இவ்வுலகமாகிற கட்டிடத்தைத் தாங்கி நிற்கும் விஷ்கம்பம் எனப்படும் ஆதார பூமியையும் (அஸ்திவாரத்தையும்) தாங்கி நிற்பவர்.

628. विश्वेश्वरप्रभु: விச்வேச்வரப்ரபு:

பிரும்மாண்டங்களுக்கும் அதன் தலைவர்களுக்கும் தலைவராக இருப்பவர்.

629. शब्दब्रह्म சப்தப்ரஹ்ம

வைகரீ, மத்யமா, பச்யந்தீ, பரா என்று வகுக்கப்பட்ட நான்கு விதமான வாக்குகளுள் மிக்க ஸூக்ஷ்மமான பரை என்னும் வாக்கிற்கும் ஸூக்ஷ்மமான நாத ரூபமான பிரும்ம வஸ்துவாக இருப்பவர்.

630. शमप्राप्य: சமப்ராப்ய:

கண், காது முதலிய புலன்களை அடக்கி அதன் மூலமாக உள்ளத்தையும் அடக்கிய மஹான்களால் அடையத் தகுந்தவர்.

631. शम्भुशक्तिगणेश्वर: சம்புசக்திகணேச்வர:

பரமசிவனுக்கும், பார்வதீ தேவிக்கும் பணிவிடைபுரியும் அடியார்களின் கூட்டங்களுக்குத் தலைவர்.

632. शास्ता சாஸ்தா

கேரள தேசத்தில் சபரிமலை, ஆரியங்காவு, குளத்துப்புழை, அச்சன்கோவில் முதலிய இடங்களில் கோயில் கொண்டிருப்பவரும், எண்ணிறந்த அடியார்களால் தைமாதப் பிறப்பு அன்று விசேஷ பூஜை செய்து கொண்டாடப் படுகின்றவருமான அய்யப்பன் வடிவ-மாகவும் இருப்பவர்.

633. शिखाग्रनिलय: சிகாக்ரநிலய:

மனித உடலில் உள்ளத் தாமரையின் நடுவேயிருக்கும் தீஜ்வாலையின் நுனியில் இருக்கும் பரமாத்மாவாக இருப்பவர்.

மனிதர்களின் உடலினுள் நடுவே நாபிக்கு (தொப்புளுக்கு) மேல் ஹ்ருதயம் எனப்படும் மாம்ஸபிண்டம, கீழ்நோக்கிய முகத்துடன்

கூடிய தாமரை மொட்டு போல் இருக்கின்றது. அதன் நடுவில் உலகங்கள் அனைத்திற்கும் இருப்பிடமானதும் அநேகம் ஜ்வாலைகளின் வரிசைகளால் நிறைந்ததும் மிகப் பெரியதுமான தீ எரிந்துகொண்டு விளங்குகிறது. அந்த தீயின் நடுவில் ஒரு சிறிய துவாரம் உள்ளது. அதன் நடுவே கொழுந்துவிட்டு எரியும் தீ ஜ்வாலை நீருண்ட மேகத்தின் நடுவே ஒளிவீசும் மின்னல் போன்று மிக்க ஸூக்ஷ்மமானதாகவும் சம்பாப்பயிரின் பழுத்த நெல் முனை போல் மஞ்சள் நிறத்துடனும் துலங்குகிறது. அத்தகைய ஜ்வாலையின் நுனியில் பரமாத்மா விளங்குகிறார் என்பதை புருஷஸூக்தம் 'तस्याः शिखायाः मध्ये परमात्मा व्यवस्थितः தஸயா: சிகாயா: மத்யே பரமாத்மா வ்யவஸ்தித:' என்று அறிவிக்கின்றது. ஸ்ரீ கணேசர் அத்தகையை பரமாத்மா என்பது கருத்து.

634. शरण्यः சரண்ய:

துன்பங்களைத் தவிர்க்க விரும்புகின்ற பக்தர்களால் தயக்கம் இன்றி எப்போதும் அடைக்கலம் புகத் தகுந்தவர்.

635. शिखरीश्वरः சிகரீச்வர:

மலைகளுக்குள் மிகவும் சிறந்ததும், பார்வதீ தேவியின் தந்தையும் பனிக்கட்டிகளின் வடிவமானதுமான ஹிமவானாக இருப்பவர்.

636. षड्ऋतुकुसुमस्रग्वी ஷட்ருதுகுஸுமஸ்ரக்வீ

வஸந்தம் (சித்திரை, வைகாசி), க்ரீஷ்மம் (ஆனி, ஆடி) வர்ஷம் (ஆவணி, புரட்டாசி), சரத் (ஐப்பசி, கார்த்திகை) ஹேமந்தம் (மார்கழி, தை) சிசிரம் (மாசி, பங்குனி) எனப்படும் வேறுபட்ட சீதோஷ்ண நிலைகளை உடைய ஆறு ருதுக்களிலும் தோன்றுகின்ற நறுமணம் உள்ள பலவிதமான மலர்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட அழகிய மாலையை எப்போதும் அணிந்து கொண்டிருப்பவர்.

ஒரு ருதுவில் தோன்றும் மலர், வேறு ருதுக்களில் தோன்றுவதில்லை எனினும் ஆறுவித ருதுதேவதைகள் எப்போதும் ஸ்ரீகணேசப் பெருமானுக்கு எல்லா ருதுக்களிலும் மலரும் பூக்களை மாலையாகக் கட்டி அர்ப்பிக்கின்றனர் என்பது கருத்து.

637. षडाधार: ஷடாதார:

ஆறு சக்கரங்களுக்கு ஆதாரமாக இருப்பவர்.

மனித உடலினுள் (மலத்வாரத்திற்கு மேலாகவும், குஹ்யேந்திரிய த்திற்குக் கீழாகவும் இருக்கும்) மூலாதாரத்தில் இருந்து கொண்டு (குஹ்யேந்திரியத்திற்குச் சரியான உடலினுள் இருக்கும்) ஸ்வாதிஷ்டான சக்கரத்திற்கும், (நாபிக்குச் சரியாக உள்ளிருக்கும்) மணிபூரக சக்கரத்திற்கும், (மார்புக்குச் சரியாக உள்ளிருக்கும் அனுஹத சக்கர த்திற்கும், (கழுத்தினுள் இருக்கும்) விசுத்தி சக்கரத்திற்கும், புருவங்க ளின் நடுவிற்குச் சரியாக உள்ளே இருக்கும்) ஆக்ஞா சக்கரத்திற்கும், (தலையினுள் நடுவே இருக்கும்) ஸஹஸ்ரார சக்கரத்திற்கும் ஆக ஆறு சக்கரங்களுக்கும் ஆதாரமாக இருப்பவர்.

638. षडक्षर: ஷடக்ஷர:

(வ, க்ர, து, ண்டா, ய, ஹும் என்ற ஆறு எழுத்துக்கள் கொண்ட மஹாமந்திரத்தின் பொருளாக இருப்பவர்.) ஒப்புயர்வற்ற ஆறு எழுத்துக்களை உடையவர்.

639. संसारवैद्य: ஸம்ஸாரவைத்ய:

மீண்டும் மீண்டும் தொடர்ச்சியாகத் துன்பங்களைத் தருகின்ற பிறப்பு, மூப்பு, இறப்பு முதலிய தீராத ஸம்ஸாரப் பிணியைத் தீர்த்து வைப்பவர்.

640. सर्वज्ञ: ஸர்வக்ஞ:

எல்லாவற்றையும் உணர்ந்தவர். அல்லது புத்ததேவனாக இருப்பவர்.

641. सर्वभेषजभेषजम् ஸர்வபேஷஜபேஷஜம்

பிணிகள் அனைத்தையும் போக்கடிக்கும் மருந்தாக இருக்கும் (பாற்கடலில் தேவர்களால் கடைந்தெடுக்கப்பட்ட) அமுதத்தினுடையவும் குற்றங்களை அகற்றுபவர்.

642. सृष्टिस्थितिलयक्रीड: ஸ்ருஷ்டிஸ்திதிலயக்ரீட:

நொடிப் பொழுதில் விளையாட்டாகவே ஸகல லோகங்களுடையவும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற செயல்களைப் புரிகின்றவர்.

643. सुरकुञ्जरभेदन: ஸுரகுஞ்சரபேதன:

அஸுரர்களால் நன்கு பூஜிக்கப்பட்டவராய் அவர்களின் பகைவர்களான மிகச் சிறந்த தேவர்களைப் போரில் தோல்வி அடையச் செய்தவர்.

644. सिन्दूरितमहाकुम्भ: ஸிந்தூரிதமஹாகும்ப:

குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்டு மிகவும் சிவந்திருக்கும் தலையை உடையவர்.

645. सदसद्व्यक्तिदायक: ஸதஸத்வ்யக்திதாயக:

'ஸத்' என்ற எப்பொழுதும் அழியாமல் இருப்பதான பிரம்மதத்துவம், 'அஸத்' என்ற எப்பொழுதும் அழியும் இயல்புள்ளதான இந்த உலகம் என்ற பகுத்தறிவைத் தனது அடியார்களுக்குத் தந்தருளுபவர்.

646. साक्षी ஸாக்ஷீ

ஒன்றினுடைய உதவியும் இல்லாமலேயே உலகம் அனைத்தையும் அறிகின்றவர். (உயிரினங்களைப் போன்று கண், காது, உள்ளம் முதலிய உறுப்புகளின் துணையைக் கொண்டு உலகத்தை 'அறிகின்றவர் அல்லர் என்பது கருத்து)

647. समुद्रमथन: ஸமுத்ரமதன:

அமுதத்தை விரும்பிப் பாற்கடலைக் கடைவதற்கு முற்பட்ட வானவர்களால் பூஜனை செய்யப்பட்டவராய் அவர்களுக்கு நேர்ந்த இடையூறுகளை அகற்றிப் பாற்கடலைக் கடைவதற்கு உதவி புரிந்தவர்.

648. स्वसंवेद्य: ஸ்வஸம்வேத்ய:

வேறு ஒன்றினுடையவும் உதவி இன்றித் தானாகவே தன்னில் பிரகாசித்துக்கொண்டிருப்பவர். (ஸூர்யன், சந்திரன், அக்னி முதலிய ஒளிகளுடன் கூடிய ஜ்யோதிகளுடைய உதவியாலேயே இவ்வுலகம் பிரகாசிப்பது போன்று ஸ்ரீ கணேசர் பிரகாசிப்பவர் அல்லர் என்பது கருத்து)

649. स्वदक्षिण: ஸ்வதக்ஷிண:

எதையும் பிறர் உதவி இன்றியே செய்து முடிப்பவர். (இவ்வுலகில் கொல்லன், கொத்தன், குயவன், தச்சன் முதலியவர்கள் அவரவர்களுடைய செயல்களைச் செய்து முடிக்கப் பலவிதமான

உபகரணங்களை நாடுவது போன்று ஸ்ரீ கணேசர் படைத்தல் முதலிய தனது தொழில்களைச் செய்து முடிக்க ஒரு பொருளின் ஸஹாயத்தையும் நாடுபவர் அல்லர் என்பது கருத்து)

650. स्वतन्त्रः ஸ்வதந்த்ர:

பலவிதமான தந்திர நூல்களின் வடிவமானவர். அல்லது, தன்னைக் காட்டிலும் வேறான பொருள் உண்மையாக இல்லாததால் ஒன்றிற்கும் அடிமையாகாதவர். தன் இஷ்டப்படி எதையும் செய்பவர்.

651. सत्यसङ्कल्पः ஸத்யஸங்கல்ப:

வீணாகாத (ஒரு பொழுதும் பயனற்றுப் போகாத) தன்னுடைய எண்ணங்களை உடையவர்.

652. सामगानरतः ஸாமகானரத:

ஸாமவேதத்தில் அன்பு கொண்டவராய் அதனை எப்போதும் கானம் செய்து கொண்டிருப்பவர்.

653. सुखी ஸுகீ

எப்பொழுதும் ஆனந்தமாக இருப்பவர் (ஒரு பொழுதும் துன்பத்தை அறியாதவர் என்பது கருத்து)

654. हंसः ஹம்ஸ:

குடீசகன், பஹூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என்ற நான்கு பிரிவுகள் கொண்ட ஸந்யாஸிகளுள் ஹம்ஸன் எனப்படும் ஸந்யாஸியாக இருப்பவர். அல்லது, வெளிச்சத்தை அளித்துக் கொண்டு உலகத்தைச் சுற்றிவரும் ஸூர்யனாக இருப்பவர்.

655. हस्तिपिशाचीशः ஹஸ்திபிசாசீச:

ஹஸ்திபிசாசி என்று ஆரம்பிக்கப்படும் ஒன்பது எழுத்துக்கள் கொண்ட மந்திரத்தின் தேவதையாக இருப்பவர்

"हस्तिपिशाचिलिखे स्वाहा ஹஸ்திபிசாசிலிகே ஸ்வாஹா" என்ற உச்சிஷ்ட மஹாகணபதி மந்திரத்தின் பொருளாகவும் தெய்வமாகவும், தலைவனாகவும் இருப்பவர் என்பது கருத்து.

656. हवनम् ஹவனம்

இந்திரன் முதலிய தேவர்களைக் குறித்து நெய் முதலிய பொருள்களை அக்நியில் தியாகம் செய்வது (சேர்த்து விடுவது) யாகம் எனப்படும். அத்தகைய யாக ரூபமாக இருப்பவர்.

657. हव्यकव्यभुक् ஹவ்யகவ்யபுக்

மாந்தர்களால் தேவர்களுக்கு அளிக்கப்படும் ஹவ்யம் என்ற பொருளையும், பித்ருக்களுக்கு அளிக்கப்படும் கவ்யம் என்ற பொருளையும் புஜிப்பவர்.

658. हव्य: ஹவ்ய:

தெய்வங்களைக் குறித்து அக்நியில் ஹோமம் செய்யப்படுவதும் ஹவ்யம் என வழங்கப்படுவதுமான அரசு, புரசு, வன்னி முதலிய ஸமித், நெய், அன்னம், பால், தயிர், இவைகளின் வடிவமாக இருப்பவர். ब्रह्मार्पणम् ब्रह्महविः ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ப்ரஹ்மார்பணம் ப்ரஹ்மஹவி: ப்ரஹ்மாக்நௌ ப்ரஹ்மணா ஹுதம் என்ற பகவத் கீதை வசனம் இதற்கு மூலமாகும்.

659. हुतप्रिय: ஹுதப்ரிய:

வேள்விகளில் ஹோமம் செய்யப்பட்ட பொருட்களில் திருப்தியடைந்த அந்தந்த தேவதைகளின் வடிவமாக இருப்பவர்.

660. हर्ष: ஹர்ஷ:

ஹவிஸ்ஸை உட்கொள்வதால் தேவதைகளுக்கு ஏற்படும் ஸந்தோஷத்தின் வடிவமாகவும் இருப்பவர்.

661. हृल्लेखामन्त्रमध्यग: ஹ்ருல்லேகாமந்த்ரமத்யக:

ஹ்ரீம் எனப்படும் மந்திரத்தின் உள்ளிருப்பவர். ஸ்ரீ கணபதி 'ஹ' எனப்படும் ஆகாசத்தால் பிரகாசிப்பவர். 'ர' என்ற அக்நியால் அனைத்தையும் உட்கொள்பவர். 'ஹ', 'ர' என்ற இரண்டு தத்துவத்தின் ஸாரமான 'ஈ' என்ற தத்துவத்தைப் பிந்துவினால் விளங்கச் செய்பவர் என்ற காரணத்தால் 'ஹ்ரீம்' என்ற ஹ்ருல்லேகா மந்திரத்தின் பொருளாக இருப்பவர். (ஹ, ர, ஈ., பிந்து, அர்தசந்திரன், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வ்யாபிகா, ஸமனா, உன்மனா என்ற பன்னிரண்டின் கூட்டமே ஹ்ருல்லேகையின் ஸ்வரூபம் என்று

'हृल्लोखाया:स्वरूपं तु व्योमाग्निर्वामलोचनम् ।
बिन्द्वर्धचन्द्ररोधिन्य: नादनादान्तशक्तय : ।।
व्यापिका समनोन्मन्य इति द्वादश संहृति: ।

ஹ்ருல்லேகாயா: ஸ்வரூபம் து வ்யோமாக்னிர்வாம லோசனம் ।
பிந்த்வர்தசந்த்ரரோதின்ய: நாதநாதாந்த சக்தய: ।।
வ்யாபிகா ஸமனோன்மன்ய இதி த்வாதச ஸம்ஹ்ருதி: ।

என்ற ச்லோகங்களால் வரிவஸ்யா ரஹஸ்யம் எனப்படும் நூலில் முதலாவது அம்சத்தில் ஸ்ரீ பாஸ்கர ராய தீக்ஷிதர் கூறியிருப்பது இங்கு கவனத்திற்குரியதாகும்.

662. क्षेत्राधिप: க்ஷத்ராதிப:

ப்ரயாகம், கயை, காசீ முதலிய புண்ய க்ஷேத்ரங்களுக்குத் தலைவர். அல்லது, நெல் முதலிய பயிர்கள் பயிர் செய்யப்படுகின்ற க்ஷேத்ரமான வயல் போன்று புண்ணிய பாபப் பயிர்கள் க்ருஷி செய்யப்படுகின்ற க்ஷேத்ரமான மானிட உடலுக்கு தலைவர்.

663. क्षमाभर्ता க்ஷமாபர்தா

மண்ணுலகைத் தாங்குபவர். அல்லது பொறுமைக்கு இருப்பிடமானவர்.

664. क्षमापरपरायण: க்ஷமாபரபராயண:

பசி, தாகம், குளிர், வெய்யில், சோகம், மோஹம் என்று மாறிமாறித் தொடர்ந்துவரும் துன்பங்களில் கலக்கம் அடையாத உள்ளத்துடன் ஸகிப்புத் தன்மையை இயற்கையாகவே அடைந்திருக்கும் முனிவர்களால் அடையத் தகுந்தவர்.

665. क्षिप्रक्षेमकर: க்ஷிப்ரக்ஷேமகர:

தன்னை வழிபடும் அடியார்களுக்கு விரைவிலேயே அவர்கள் விரும்பிய ஸௌக்யத்தை அளிப்பவர்.

666. क्षेमानन्द: க்ஷேமானந்த:

இல்லற வாழ்க்கையில் ஏற்படும் (அழியும் தன்மையுடைய) விஷய ஆனந்தம், மோக்ஷ நிலையில் ஏற்படும் (அழியாத) பிரும்ஹானந்தம் இவ்விரண்டு ஆனந்தங்களின் வடிவமானவர்.

667. क्षोणीसुरद्रुमः க்ஷோணீஸுரத்ரும:

இம்மண்ணுலகில், தேவலோகத்திலுள்ள கல்பக விருக்ஷம் போல இருந்து கொண்டு தர்ம புருஷார்த்தம் முதல், துன்பங்கள் அனைத்தும் தீருகின்ற மோக்ஷ புருஷார்த்தம் முடிய எல்லாவிதமான நலன்களையும் அடியார்களுக்கு ஓயாமல் வழங்கிக் கொண்டிருப்பதனால் பூலோக கல்ப விருக்ஷமெனப்படுகிறார்.

_குறிப்பு:_ 668 முதல் 688 வரை உள்ள இருபத்து ஒன்று நாமாக்கள் ஸ்ரீ மஹாகணபதி பூலோக கற்பக விருக்ஷம் என்பதை விளக்கு-கின்றன]

668. धर्मप्रदः தர்மப்ரத:

அறம் எனப்படும் தர்ம புருஷார்த்தத்தைக் கொடுப்பவர்.

669. अर्थदः அர்தத:

பொருள் எனப்படும் அர்த்த புருஷார்த்தத்தைத் தருபவர்.

670. कामदाता காமதாதா

இன்பம் எனப்படும் காம புருஷார்த்தத்தைத் தருபவர்.

671. सौभाग्यवर्धनः ஸௌபாக்யவர்தன:

பெண்களுக்கு தாங்கள் உயிர்வாழும் வரை எல்லாச் சிறப்புடனும் தங்கள் கணவருக்கு நீண்ட ஆயுளை (ஸௌமங்கல்யத்தை) தந்தருளுபவர்.

672. विद्याप्रदः வித்யாப்ரத:

இம்மையிலும், மறுமையிலும் எல்லா மேன்மைகளையும் அடை-வதற்கு உரிய கல்வியை (வித்யையை) அருளுபவர்.

673. विभवदः விபவத:

தனக்கும், தன் சுற்றத்தினருக்கும், நாட்டிற்கும், நாட்டினருக்கும் இன்பத்தைத் தரும் சிறந்த செல்வத்தை அளிப்பவர்.

674. भुक्तिमुक्तिफलप्रदः புக்திமுக்திபலப்ரத:

முற்பிறவிகளில் செய்த எண்ணிறந்த புண்ணியங்களின் பயனாக பிறவி முதல் இடையறாமல் தன்னை வழிபடுகின்ற உத்தமருக்கு அறவே பிறவி ஏற்படாமல் இருக்க அப்பிறவியிலேயே ஸகல கர்ம

பலன்களையும் அனுபவிக்கும்படி செய்து முடிவில் பரம் பொருளின் உண்மை அறிவைக் கொடுத்து உயிருடன் இருக்கும் போதே அழிவில்லாத மோக்ஷ ஆனந்தத்தையும் அளிப்பவர்.

675. अभिरूप्यकरः ஆபிரூப்யகர:

தன்னுடைய திருவடிகளை வந்தடைந்தவர்களான செல்வந்தர்களுக்கும், ஏழைகளுக்கும், சிறந்த அறிவாளிகளுக்கும், மடையர்களான அறிவிலிகளுக்கும் சிறிதும் வேற்றுமை பாராட்டாமல் இரங்கிய உள்ளத்துடன் ஒன்று போல் அருள் பாலிப்பவர்.

676. वीरश्रीदः வீரஶ்ரீப்ரத:

போரில் பகைவர்களுடன் போர் புரிவதற்கு திறமை அற்று தன்னுடைய திருநாமத்தை ஸ்மரிப்பவர்களான அடியார்களுக்கு வீரலக்ஷ்மியை (போர் புரிவதற்கான ஒப்பற்ற திறமையை) அளிப்பவர்.

677. विजयप्रदः விஜயப்ரத:

அடியார்களுக்கு வீரலக்ஷ்மியை அளித்து அதன் பயனான ஜய லக்ஷ்மியையும் (சிறந்த வெற்றியையும்) தருபவர்.

678. सर्ववश्यकरः ஸர்வவச்யகர:

மிகவும் தூய்மை வாய்ந்தவைகளான உடல், வாக்கு, உள்ளம் இவைகளால் இடையறாமல் தன்னை வழிபடும் பக்தர்களுக்கு அடிமையாக இருந்து கொண்டு அவர்களின் விருப்பப்படி எதையும் செய்பவர்.

679. गर्भदोषहा கர்பதோஷஹா

பெண்களால் தரிக்கப்படும் கர்பமானது பூரணமாக வளர்ச்சி பெற்று 9 அல்லது 10 வது மாதத்தில் குழந்தையாகத் தோன்றுவதற்கு முன்பே, கேடு அடைந்து நாசமுற்றுப் போவதற்கான தோஷங்களை அகற்றிப் பூர்ணமாகக் கர்ப்பத்தைக் காப்பாற்றிக் குழந்தையைத் தோன்றும்படி செய்பவர்.

680. पुत्रपौत्रदः புத்ரபௌத்ரத:

அடியார்களுக்கு ஆண்மக்கள், பெண்மக்கள், அவர்களுக்கு பேரன், பேத்திகள் என்று குறைவில்லாத மக்கட்பேற்றைத் தருபவர்.

681. मेधाद: மேதாத:

கற்ற விஷயங்களைப் பற்றிய அறிவு மறையாமல் இருக்கும் தன்மை வாய்ந்ததும், எப்போதும் அதன் தோற்றம் குன்ருது காத்து வருவதுமான மேதை எனப்படும் புத்தி விசேஷத்தைத் தந்தருளுபவர்.

682. कीर्तिद: கீர்தித:

ஈகை முதலான நற்குணங்களால் ஏற்படும் புகழை ஓங்கி வளரச் செய்பவர்

683. शोकहारी சோகஹாரீ

ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றிய நல்லறிவு இல்லாததால் ஏற்பட்ட சோகத்தை ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மை அறிவால் அகற்றுபவர். [''ஆத்மாவை அறிந்தவன் சோகத்திலிருந்து விடுபடுகின்ருன்'' ''तरति शोकं आत्मवित्'' 'தரதி சோகம் ஆத்மவித்' என்ற சாந்தோக்யோபநிஷத் வசனம் இங்கு கவனத்திற்கு உரியதாகும்]

684. दौर्भाग्यनाशन: தௌர்பாக்யநாசன:

முற்பிறவியில் செய்துள்ள பாவத்தின் பயனுக, அனுகூலம் இல்லாத கணவன், தீராத பிணிகளால் நேர்ந்த துன்பம், ஏழ்மையால் உண்டான துயரம் ஆகிய தௌர்பாக்யத்தை அடைந்த பெண்களைத் தன்னை வழிபடும்படி செய்து அவர்களுடைய தௌர்பாக்யத்தை அகற்றி அவர்களுக்கு ஸௌபாக்யத்தை அளிப்பவர்.

685. प्रतिवादिमुकस्तम्भ: ப்ரதிவாதிமுகஸ்தம்ப:

தனது அடியார்களின் உள்ளத்தைப் புண்படுத்தித் தகாத சொற்களைச் சொல்கின்ற தீயவர்களின் நாக்கை அசைக்க முடியாதபடி (பேசமுடியாதபடி) செய்பவர். அல்லது, அறிஞர்களின் அவைகளில், வித்வான்களான தனது பக்தர்களை அவமானப்படுத்த முற்படும் ப்ரதிவாதிகளான வித்வான்களுடைய வாயைத் திறக்க முடியாமல் செய்பவர்.

686. रुष्टचित्तप्रसादन: ருஷ்ட-சித்தப்ரஸாதன:

அரசன், பணக்காரன் முதலிய ப்ரபுக்களிடம் பணிபுரியும் தனது அடியார்களிடம் சினங்கொண்ட ப்ரபுக்களுடைய உள்ளங்களைச் சினமற்றதாகச் செய்து ஸநேகம் நிறைந்ததாகச் செய்பவர்.

687. पराभिचारशमन: பராபிசாரசமன:

தனது அடியார்களை இறந்து போகும்படி செய்வதற்காக அவர்களுடைய பகைவர்களால் செய்து முடிக்கப்பட்ட அபிசார கர்மாவை பயனற்றதாகச் செய்பவர். [தனது அடியார்களை இறந்து போகாமல் காப்பாற்றி உயிர்வாழும்படி செய்பவர் என்பது கருத்து.]

688. दुःखभञ्जनकारक: துஃக பஞ்ஜனகாரக:

ஒப்புயர்வற்ற தனது அடியார்களுக்கு அனாதிகாலமாக பிறப்பு மூப்பு, இறப்பு என்று தொடர்ந்து வரும் தீராத துன்பங்கள் அனைத்தையும் அறவே அகற்றுபவர்.

(அழிவில்லாத ஆனந்த ரூபமான மோக்ஷத்தை அளிப்பவர் என்பது கருத்து.)

[குறிப்பு: 689 முதல் 708 வரை உள்ள இருபது நாமாக்கள் ஸ்ரீ மகாகணபதியை 'காலத்தின் வடிவன்' என்று நிரூபிக்கின்றன].

689. लव: லவ:

ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரைப் பூவை கூர்மையான ஊசியால் குத்தும்போது ஒவ்வொரு இதழிலும் ஊசி கடந்து செல்லும் நேரம் லவம் எனப்படும். அத்தகைய லவம் எனப்படும் காலமாக இருப்பவர்.

690. त्रुटि: த்ருடி:

ஆயிரம லவங்களுடைய அளவுள்ள காலம் த்ருடி எனப்படும் அத்தகைய த்ருடியாக இருப்பவர்.

691. कला கலா

முப்பது காஷ்டைகள் கொண்ட காலம் கலை எனப்படும். அத்தகைய கலையாக இருப்பவர்.

(காஷ்டா என்ற நாமத்தின் உரையில் காஷ்டையின் ஸ்வரூபத்தைக் காண்க.)

692. काष्ठा காஷ்டா

பதினெட்டு நிமேஷங்கள் கொண்ட காலம் காஷ்டை எனப்படும். அத்தகைய காஷ்டா எனப்படும் காலமாக திகழ்பவர்.

(நிமேஷ: என்ற நாமத்தின் உரையில் நிமேஷத்தின் ஸ்வரூபத்தைக் காண்க.)

693. निमेष: நிமேஷ:

முப்பது தத்பர காலத்தின் அளவு கொண்டது நிமேஷமாகும். அத்தகைய நிமேஷமாகவும் இருப்பவர்

(தத்பர: என்ற நாமத்தின் உரையில் அதன் ஸ்வரூபத்தைக் காண்க)

694. तत्पर: தத்பர:

நூறு த்ருடியின் காலம் கொண்டது தத்பரம் ஆகும். அத்தகைய தத்பர கால வடிவமானவர்.

695. क्षण: க்ஷண:

முப்பது கலைகளின் அளவு கொண்ட காலம் க்ஷணம் எனப்படும். அத்தகைய க்ஷண வடிவமானவர்.

696. घटी கடீ

ஆறு க்ஷணங்கள் சேர்ந்த காலம் கடீ எனப்படும். அத்தகைய கடீ வடிவமானவர்.

697. मुहूर्त முஹூர்தம்

இரண்டு கடீ காலம் சேர்ந்தது ஒரு முஹூர்த்தமாகும். அத்தகைய முஹூர்த்த வடிவமானவர்.

698, प्रहर: ப்ரஹர:

நான்கு முஹூர்த்தங்கள் சேர்ந்தது ஒரு ப்ரஹரமாகும் அத்தகைய ப்ரஹர வடிவமானவர்.

699. दिवा திவா

நான்கு பிரஹர காலம் பகலாகும். அத்தகைய பகலாக இருப்பவர்.

700. नक्तम् நக்தம்

நான்கு பிரஹர காலம் இரவாகும். அத்தகைய இரவாக இருப்பவர்.

701. अहर्निशम् அஹர்நிசம்

எட்டு ப்ரஹரங்கள் கொண்ட காலம் (இரவும் பகலும் சேர்ந்தது) ஒரு தினமாகும். அத்தகைய நாள் வடிவமானவர்.

702. पक्ष: பக்ஷ:

பதினைந்து நாட்கள் கொண்டது ஒரு பக்ஷமாகும், அத்தகைய பக்ஷ வடிவமானவர்.

703. मास: மாஸ:

இரண்டு பக்ஷங்கள் சேர்ந்து ஒரு மாதமாகும். அத்தகைய மாதமாக இருப்பவர்.

704. अयनम् அயனம்

ஆறு மாதங்கள் சேர்ந்தது அயனம் எனப்படும். அத்தகைய அயனமாக இருப்பவர்.

705. वर्षम् வர்ஷம்

இரண்டு அயனங்கள் கொண்ட காலம் மனிதர்களுக்கு ஒரு ஆண்டாகும். அத்தகைய ஆண்டு வடிவமானவர்.

706. युगम् யுகம்

முன்னூற்று அறுபது மனித வருடங்கள் கொண்ட காலம் தேவர்களுக்கு ஒரு வருடமாகும். தேவ வருடங்கள் பன்னிரண்டாயிரம் சேர்ந்தது ஒரு சதுர்யுகமாகும். (க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்ற நான்கு யுகங்கள் சேர்ந்தது ஒரு சதுர்யுகமாகும்) அத்தகைய சதுர்யுக வடிவமாக இருப்பவர்.

707. कल्प: கல்ப:

சதுர்யுகங்களின் ஆயிரம் சேர்ந்தது ஒரு கல்பம் ஆகும். (பிரும்ம தேவனுடைய பகலும், அதுபோல் இரவும் கல்பமாகும்) பிரும்மாவினுடைய பகல் முடியும்போது ஏற்படும் லயமானது நைமித்திக (தினந்தோறும் ஏற்படும்) பிரளயம் எனப்படும். அத்தகைய கல்பகாலமாக இருப்பவர்.

708. महालय: மஹாலய:

எழுபத்து இரண்டு ஆயிரம் கல்பங்கள் சேர்ந்தது மஹாலயம் எனப்படும். இந்த மஹாலயம் பிரும்ம தேவனுக்கு நூறு ஆண்டுகள் முடிந்து அவரும் மறையும் காலமாகும். அத்தகைய மஹாப்ரளய காலமாகவும் இருப்பவர்.

[குறிப்பு: 709 வது முதல் 729 வது முடிய இருபத்து ஒன்று நாமாக்கள் ஸ்ரீ மஹாகணபதியை, காலத்தைக் கணக்கிடுவதற்குக் காரணமாக இருப்பதும் வானவீதியில் ஒளிகளுடன் மிளிர்கின்றதுமான ஜ்யோதிர்கண வடிவனாக வருணிக்கின்றன.]

709. राशिः ராசி:

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், ஸிம்ஹம், கன்யா, துலா, வ்ருச்சிகம், தநுஸ். மகரம் கும்பம், மீனம் எனப்படும் பன்னிரண்டு ராசிகளின் வடிவமானவர்.

710. तारा தாரா

அச்வநீ முதல் ரேவதீ முடிய இருபத்து ஏழு நக்ஷத்திரங்களின் வடிவமாய் இருப்பவர்.

711. तिथिः திதி:

ப்ரதமை முதல் பௌர்ணமீ அல்லது அமாவாஸ்யை முடிய பதினைந்து திதிகளின் வடிவ்மான, சந்திரனின் வளர்ச்சியையும், தளர்ச்சியையும் அடைகின்ற கலைகளாக இருப்பவர்.

712. योगः யோக:

விஷ்கம்பம் முதல் வைத்ருதி முடிய இருபத்து ஏழு யோகங்கள், அம்ருதம், ஸித்தி, ஆனந்தம் முதலிய யோகங்கள் ஆகிய எல்லாவிதமான யோகங்களின் ஸ்வரூபமாக இருப்பவர்.

713. वारः வார:

ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்று ஏழு கிழமைகளின் (வாரங்களின்) வடிவமாக இருப்பவர்.

714. करणम् கரணம்

பவம், பாலவம். கௌரவம், தைதிலம், கரம், வணிஜை, பத்ரம் என்ற சர கரணங்கள் ஏழு, சகுனி, சதுஷ்பாதம், நாகவம், கிம்ஸ்துக்னம் என்ற ஸ்திர கரணங்கள் நான்கு இத்தகைய பதினொரு கரணங்களாகவும் இருப்பவர்.

715. अंशकम् அம்சகம்

அச்வினீ முதலிய நக்ஷத்ரங்கள் ஒவ்வொன்றுமே நான்கு அம்சங்கள் கொண்டவைகள் ஆகும். அத்தகைய அம்சகங்களாக இருப்பவர்.

716. लग्नम् லக்னம்

மேஷம் முதலிய ராசிகளின் உதயம் (தோற்றம்) அதற்குரிய காலம் லக்னம் எனப்படும். அத்தகைய லக்னத்தின் ஸ்வரூபமாக இருப்பவர்.

717. होरा ஹோரா

லக்னத்தின் சரியான அரை அளவு காலம் ஹோரை எனப்படும். அத்தகைய ஹோரையாக இருப்பவர்.

718. कालचक्रम् காலசக்ரம்

சிசுமாரம் எனப்படும் ஒருவகை ஜந்துவின் வடிவமாக அமைந்திருக்கும், க்ரஹங்கள், நக்ஷத்ரங்கள், ஸப்தரிஷிகள், துருவன் ஆகியவைகளின் கூட்டமே சைசுமாரம் காலச்சக்ரம் எனப்படும். அத்தகைய காலச்சக்ரத்தின் ஸ்வரூபமாக இருப்பவர்.

[சைசுமாரமெனப்படும் காலச்சக்ரத்தைப்பற்றி பாகவத புராணத்தில் ஐந்தாவது ஸ்கந்தத்தில் காண்க]

719. मेरुः மேரு:

ஸூர்யன் முதலிய க்ரஹங்களால் வலம் வரப்படுவதும், தங்கமயமானதும், ஒளிகளால் பிரகாசிக்கின்றதுமான மலையானது மேருவாகும். அத்தகைய மேருவாகவும் இருப்பவர்.

720. सप्तर्षयः ஸப்தர்ஷய:

மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் என்ற ஏழு மஹர்ஷிகளின் ஸ்வரூபமாக இருப்பவர். (மஹாபாரதம் சாந்தி பர்வம் 340 வது அத்யாயத்தில் ஸப்தரிஷிகளைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றது.)

721. ध्रुवः த்ருவ:

உத்தான பாதருக்கும், ஸுநீதிக்கும் மகனாகத் தோன்றிய, துருவன் என்ற திருநாமம் பூண்ட அரச குமாரன், நாரத முனிவருடைய உபதேசத்தால், ஆறு மாதங்களிலேயே கானகத்தில் கடுந்தவம் புரிந்து, நாராயணனுடைய அருளைப் பெற்று, இம்மையில் எல்லாவிதமான ஸௌக்யங்களையும் பெற்று, மேருவின் உச்சியில் ஸகல ஜ்யோதிகளுக்கும் மேலாக வீற்றிருந்து விளங்குகிறான். அந்த துருவனாகவும் இருப்பவர்.

722. राहुः ராஹு:

(பர்வ காலங்களில் கிரஹண வேளையில்) பௌர்ணமியிலும், அமாவாஸ்யையிலும், சந்திரனையும், ஸூர்யனையும் விழுங்குகின்ற (மறைக்கின்ற) பாம்பு வடிவமான ராஹு என்ற கிரஹமாக இருப்பவர் [ராகுவின் நிழலாகும் "கேது" எனப்படும் சாயாக்ரஹத்தை, அதற்கு தனித்த உருவமில்லாததால் இங்கு குறிப்பிடவில்லை]

723. मन्दः மந்த:

ஸூர்யனுடைய மைந்தனான, மெதுவாக ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ள சனி எனப்படும் கிரஹமாக இருப்பவர்.

724. कविः கவி:

அஸுரர்களின் குருவான சுக்ராசார்யருடைய வடிவமாக இருப்பவர்.

725. जीवः ஜீவ:

தேவர்களின் ஆசார்யனான ப்ருஹஸ்பதியின் வடிவமானவர்.

726. बुधः புத:

தாரையிடம் சந்திரனுக்குப் புதல்வனாகத் தோன்றிய புதன் எனப்படும் சுபக்ரஹமாகவும் இருப்பவர்.

727. भौमः பௌம:

பூமிதேவியின் புதல்வனான அங்காரகன் எனப்படும் கிரஹத்தின் உருவமாக இருப்பவர்.

728. शशी சசி

சந்திரன் அத்ரி முனிவருக்கு அனஸூயையிடம் தோன்றியவர். ரோஹிணீ முதலிய தாரைகளுக்குக் கணவர். கொடி செடிகளைத் தன்னுடைய குளிர்ந்த கதிர்களால் வளர்ப்பவர். இரவு நேரத்தில் இருளை அகற்றி உயிரினங்களுக்கு உதவி புரிகின்றவர். அத்தகைய சந்திரனாக இருப்பவர்.

729. रविः ரவி:

ஸூர்யன் கச்யப முனிவருக்கு அதிதி தேவியிடம் தோன்றியவர். சாயை, ஸுவர்சலை இவர்களின் கணவர். தன்னுடைய ஆயிரக்கணக்கான கதிர்களால் இவ்வுலகத்தை உயிர்வாழும்படி செய்பவர்

தன்னுடைய தோற்றததாலும், மறைவாலும் உலகத்தினருக்குப் பகல், இரவு என்ற விபவ ஹாரத்தை ஏற்படுத்தியவர். அத்தகைய பெருமை வாய்ந்த ஸூர்யனுக இருப்பவர்.

[குறிப்பு: 730 வது முதல் 766 வது முடிய முப்பத்து ஏழு நாமாக்கள் ஸ்ரீ மஹாகணபதியை சேதனமும், ஜடமும், எண்ணிறந்த ஏற்றத் தாழ்வுடன் கூடியதுமான அர்த்த பிரபஞ்சத்தின் வடிவமாக விளக்குகின்றன]

730. काल: கால:

இவ்வுலகத்தின் அழிவு ரூபமான தொழிலாக இருப்பவர்.

731. सृष्टि: ஸ்ருஷ்டி:

இவ்வுலகின் படைத்தலாகிய தொழிலாகவும் இருப்பவர்.

732. स्थिति: ஸ்திதி:

இவ்வுலகத்தைக் காப்பாற்றுதல் என்ற செயலாகவும் இருப்பவா.

733. विश्वं-स्थावरं-जङ्गमम्-यत् விச்வம் ஸ்தாவரம் ஜங்கமம் யத்

அசையும் பொருள், அசையாப் பொருள் என்று இருவகைப்படும் உலகின் வடிவமானவர்.

734. भू: பூ:

மணமுள்ளதும், கடினமானதும் உயிரினங்கள் அனைத்தையும் தாங்கிக் கொண்டிருப்பதுமான பூமியின் வடிவமானவர்.

735. आप: ஆப:

சுவையானதும், குளிர்ச்சியானதும், த்ரவமாய் இருப்பதும், மண் முதலிய கட்டியான பொருளைக் கரையும்படி செய்வதும், உலகில் மண்ணைக் காட்டிலும் அதிகமான இடத்தில் இருப்பதுமான தண்ணீர் வடிவமானவர்.

736. अग्नि: அக்நி:

உஷ்ண ஸ்பர்சம் உள்ளதும், எரித்தல், பிரகாசித்தல் என்ற செயல்கள் உள்ளதும், நீரைக் காட்டிலும் அதிகமான இடத்தில் வியாபித்திருப்பதுமான தீயாக இருப்பவர்.

737. मरुत् மருத்

அனைத்தையும் உலரும்படி (சோஷிக்கும்படி) செய்வதும், தீயைக் காட்டிலும் எங்கும் வ்யாபித்திருப்பதும், உருவம் அற்றதும், ஸ்பர்சத்தால் உணரப்படுவதுமான வாயுவாக (காற்ருக) இருப்பவர்.

738. व्योम வ்யோம

ஒலிகளுக்குக் காரணமாய் இருப்பதும், காற்று முதலிய நான்கு பூதங்களுக்கு இடம் தருவதும், ஒன்றுடனும் சேராததும், உருவம் அற்றதுமான ஆகாசமாய் இருப்பவர்.

739. अहङ्कृतिः அஹங்க்ருதி:

சப்தம். ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து தன்மாத்திரைகளுக்குக் காரணமானதும், மஹத் தத்துவத்திலிருந்து தோன்றியதுமான அஹங்காரம் எனப்படும் தத்துவமாக இருப்பவர்.

740. प्रकृतिः ப்ரக்ருதி:

ஸாங்க்ய மதத்தில், மஹத்தத்வம் முதலான உலகம் அனைத்திற்கும் மூலகாரணமாகக் கூறப்படும் மூலப்ரக்ருதியாக இருப்பவர்.

741. पुमान् புமான்

ஸாங்கியர்களால் புருஷன் எனப்படும் தத்துவமானது 'காரணமாகவோ, கார்யமாகவோ, இரண்டுமாகவோ இல்லாதது; தாமரை இலையின்மேல் உள்ள நீர் போன்று ஒன்றுடனும் சேராதது' என்று கூறப்படுகின்றது. அத்தகைய தத்துவமாக இருப்பவர்.

742. ब्रह्मा ப்ரஹ்மா

காமேச்வரியின் மஞ்சத்தின் பாதமாக இருக்கும் (கட்டிலின் காலாக இருக்கும்) பிரம்ம தேவனாக இருப்பவர்.

743. विष्णुः விஷ்ணு:

காமேச்வரியின் மஞ்சத்தின் பாதமாக இருக்கும் (கட்டிலின் காலாக இருக்கும்) விஷ்ணுவாகவும் இருப்பவர்.

744. शिवः சிவ:

மஞ்சத்தின் மேல் (கட்டிலின் மேல்) காமேச்வரியை மடியில் வைத்துக் கொண்டு வீற்றிருக்கும் காமேச்வர ரூபமாகவும் இருப்பவர்.

745. रुद्रः ருத்ர:

காமேச்வரியின் மஞ்சத்தின் பாதமாக இருக்கும் (கட்டிலின் காலாக இருப்பவரான) ருத்ரனுக இருப்பவர்.

746. ईशः ஈச:

காமேச்வரியின் மஞ்சத்தின் பாதமாக (கட்டிலின் காலாக) இருக்கும் ஈசனுக இருப்பவர்.

747. शक्तिः சக்தி:

மஞ்சத்தின் (கட்டிலின்) மேல் காமேச்வரருடைய மடியில் வீற்றிருக்கும் காமேச்வரியாக இருப்பவர்.

748. सदाशिवः ஸதாசிவ:

மஞ்சத்தின் (கட்டிலின்) மேல், காமேச்வரியுடன் காமேச்வரர் வீற்றிருக்க ஆதாரமாக இருக்கும் பலகையாக விளங்கும் ஸதாசிவ ஸவரூபனுகவும் இருப்பவர்.

749. त्रिदशाः த்ரிதசா:

இந்திரன் முதலான முப்பத்து மூன்று கோடி தேவர்களாக இருப்பவர்.

750. पितरः பிதர:

அக்நிஷ்வாத்தர் முதலான பித்ருக்களின் வடிவமானவர்

751. सिद्धाः ஸித்தா:

கபிலர் முதலிய ஸித்த புருஷர்களின் வடிவமானவர்

752. यक्षाः யக்ஷா:

குபேரன் முதலிய யக்ஷர்களாக இருப்பவர்.

753. रक्षांसि ரக்ஷாம்ஸி

அரக்கர்களுடைய வடிவமாய் இருப்பவர்.

754. किन्नराः கின்னரா:

கின்னரர் எனப்படும் தேவ விசேஷர்களுடைய வடிவமாய் இருப்பவர்.

755. साध्या: ஸாத்யா:

மன:, அநுமந்தா, ப்ராண:, நர:, யான:, சித்தி:, ஹய:, நய:, ஹம்ஸ:, நாருயண:, ப்ரபவ:, விபு: என்று பன்னிரண்டு ஸாத்யர்கள் வடிவமாய் இருப்பவர். [ஸாத்யர்களைப்பற்றிய விஷயத்தை வாயு புராணத்தில் காண்க.]

756. विद्याधरा: வித்யாதரா:

தேவ விசேஷர்களான வித்யாதரர்களின் ஸ்வரூபமாய் விளங்குபவர்.

757. भूता: பூதா:

பிசாசம் முதலிய பூதங்களாகவும் இருப்பவர்.

758. मनुष्या: மனுஷ்யா:

மனிதர்களாகவும் இருப்பவர்.

759. पशव: பசவ:

விலங்குகளாகவும் இருப்பவர்.

760. खगा: ககா:

பறவைகளாகவும் இருப்பவர்.

661. समुद्रा: ஸமுத்ரா:

ஏழு விதமான கடல்களாகவும் இருப்பவர்.

762. सरित: ஸரித:

நதிகளின் (ஆறுகளின்) வடிவமானவர்.

763. शैला: சைலா:

மலைகளின் வடிவமானவர்.

764. भूतम् பூதம்

இறந்த காலத்தின் ஸ்வரூபமானவர்.

765. भव्यम् பவ்யம்

வருங்காலமாக இருப்பவர்.

766. भवोद्भव: பவோத்பவ:

சிவபெருமானிடமிருந்து தோன்றியவர். அல்லது பிறப்பாகிற ஸம்ஸாரத்தைத் தோற்றி வைப்பவர்.

[குறிப்பு: 767 முதல் 793 வது முடிய இருபத்து ஏழு நாமாக்கள் ஸ்ரீ மஹாகணபதியை ஆஸ்திகர்களுடையவும், நாஸ்திகர்களுடையவும் பிரமாண நூல்களின் வடிவமாய் இருக்கும் ஸகல சப்த பிரபஞ்ச ரூபராக அறிவிக்கின்றன]

767. साङ्ख्यम् ஸாங்க்யம்

கபில முனிவரால் உபதேசிக்கப்பட்டதும், 'பிரகிருதி ஒன்று, விக்ருதி பதினாறு, ப்ரக்ருதியாயும் விக்ருதியாயும் இருப்பது ஏழு, ப்ரக்ருதியாயும் விக்ருதியாயும் இல்லாதது ஒன்று என்று நான்கு கூறுகப் பிரித்து இருபத்து ஐந்து தத்துவங்களை' விளக்குவதுமான ஸாங்கிய சாஸ்திரத்தின் வடிவமானவர்.

768. पातञ्जलम् பாதஞ்ஜலம்

பதஞ்ஜலி முனிவரால் உபதேசிக்கப்பட்ட 'ஸாமஸூத்ர நிதானம்' எனப்படும நூலின் வடிவமானவர்.

769. योग: யோக:

அரவர் அரசனான ஆதிசேஷ பகவானால் உபதேசிக்கப்பட்டதும் அஷ்டாங்க யோகத்தை விளக்குவதுமான யோக தர்சனமாக இருப்பவர்.

770. புராணானி புராணானி

ப்ராம்ஹம், பாத்மம் முதலான பதினெட்டு மஹாபுராணங்களுடையவும், காணேசம் முதலான பதினெட்டு உபபுராணங்களுடையவும் உருவம் ஆனவர்.

771. श्रुति: ச்ருதி:

ருக்வேதம் முதலிய நான்கு வேதங்களின் உருவமாக இருப்பவர்.

772. स्मृति: ஸ்ம்ருதி:

மனு, யாக்ஞவல்க்யர், ஆபஸ்தம்பர், சங்கர், லிகிதர், பராசரர் முதலிய முனிவர்களால் இயற்றப்பட்ட பதினெட்டு ஸ்ம்ருதிகளின் (அறநூல்களின்) வடிவமானவர்.

773. वेदाङ्गानि வேதாங்கானி

சிக்ஷை, எழுத்துக்களின் உச்சரிப்பு முதலியவற்றை விளக்கும் நூல், கல்பம், வேதத்தால் விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்யும் முறையை விளக்கும் நூல், வ்யாகரணம் சொற்களின் இலக்கணத்தைக் கூறும் நூல், சந்த: விருத்தங்களை — பலவிதமான பாட்டு வடிவமான மந்திரங்களின் மெட்டுக்களை விளக்கும் நூல், ஜ்யோதிஷம் கர்மாக்களை அனுஷ்டிக்க உரிய காலத்தை விளக்கும் நூல், நிருக்தம் வேதத்திலேயே பெரும்பாலும் வழங்கப்படும் சொற்களின் இலக்கணத்தைக் கூறும் நூல் எனப்படும் ஆறுவிதமான வேதத்தின் அங்க சாஸ்திரங்களாக இருப்பவர்

774. सदाचार: ஸதாசார:

சிஷ்டாசாரங்களை சுருக்கிக் கூறும் தர்ம சாஸ்திரத்தின் உருவமானவர்.

775: मीमांसा மீமாஸா

கர்ம காண்டத்தில் கூறியிருக்கும் தர்ம ஸ்வரூபத்தைப் பன்னிரண்டு அத்யாயங்களிலும், தேவதா காண்டத்தில் கூறியிருக்கும் தேவதா ஸ்வரூபத்தை நான்கு அத்யாயங்களிலும் ஆயிரத்துக்கும் மேலான ஸூத்திரங்களால் விளக்கி ஜைமினி முனிவரால் இயற்றப்பட்ட (பதினாறு அத்யாயங்கள் கொண்ட) நூல், பூர்வ (தர்ம) மீமாம்ஸை ஆகும். ஞான காண்டத்தில் வருணித்திருக்கும் ப்ரும்ஹ ஸ்வரூபத்தை நான்கு அத்யாயங்களில் அநேகம் ஸூத்திரங்களால் விளக்கி வ்யாஸ முனிவரால் இயற்றப்பட்ட நூல், உத்தர (ப்ரஹ்ம) மீமாம்ஸை ஆகும். உபாஸனா காண்டத்தில் காணப்படும் உபாஸனம் அல்லது த்யானம் எனப்படும் பக்தியின் ஸ்வரூபத்தை மூன்று அத்யாயங்களில் அநேகம் ஸூத்திரங்களால் விளக்கி சாண்டில்ய முனிவரால் இயற்றப்பட்ட நூல், பக்தி மீமாம்ஸை ஆகும். இந்த மூன்று மீமாம்ஸைகளின் வடிவமானவர்.

776. न्यायविस्तर: ந்யாயவிஸ்தர:

கணாத முனிவர் இயற்றிய ஸூத்ர வடிவமான வைசேஷிக தர்சனமாகவும், கௌதம முனிவர் இயற்றிய ஸூத்ர வடிவமான ந்யாய தர்சனமாகவும் இருப்பவர்.

777. आयुर्वेदः ஆயுர்வேத:

ருக் வேதத்திற்கு உபவேதம் எனப்படுவதும், மாந்தர்களின் பலவிதமான பிணிகளையும், அதனைப் போக்கடிப்பதற்கான எண்ணிறந்த மருந்துகளையும் பற்றி விளக்கிக் கூறுவதுமான ஆயுர்வேத நூல்களாகவும் இருப்பவர்.

778. धनुर्वेदः தனுர்வேத;

யஜுர்வேதித்திற்கு உபவேதமாகக் கூறப்படுவதும், நாட்டை ஆளுகின்ற அரசர்களுககுப் போரில் வெற்றி பெறுவதற்கு வில் முதலிய ஆயுதங்களைப் பற்றியும், அவைகளைக் கையாளுவதற்கான முறைகளைப் பற்றியும் தெளிவாக அறிவைப் புகட்டுவதுமான தனுர்வேத நூல்களாக இருப்பவர்.

779. गान्धर्वं காந்தர்வம்

ஸாமவேதத்தின் உபவேதம் என்று புகழ் பெற்றதும், ஷட் ஜாதி, ஏழு ஸ்வரங்கள், ராகங்கள், தாளங்கள், பலவிதமான வாத்யங்கள் இவைகளின் இலக்கணத்துடன் ஸங்கீதத்தை விரிவாகக் கூறுகின்றதுமான காந்தர்வ வேத நூல்களின் வடிவானவர்.

780. काव्यनाटकम् காவ்யநாடகம்

காவ்யம் என்ற சொல் எட்டுவிதமான ச்ரவ்ய (கேட்கத் தகுந்த) காவ்யத்தைக் (இலக்கியத்தை) குறிக்கின்றது. நாடகம் என்ற சொல் இருபத்து எட்டு விதமான த்ருச்ய (காணத்தகுந்த) காவ்யத்தைக் குறிக்கின்றது. கேட்கத் தகுந்ததும், காணத் தகுந்ததுமான இந்த முப்பத்து ஆறு இலக்கியங்களின் வடிவமாய் இருப்பவர்.

781. वैखानसम् வைகாநஸம்

விஷ்ணுவின் பெருமையை விளக்கும் 'வைகானஸ' ஆகம நூலாக இருப்பவர்.

782. भागवतम् பாகவதம்

விஷ்ணுவின் மேன்மையை வருணிக்கும் 'பாகவத' தந்திர நூலாக இருப்பவர்.

783. सात्वतम् ஸகத்வதம்

விஷ்ணு தத்துவத்தை அறிவிக்கும் ஸாத்வதம் எனப்படும் தந்திர நூலாக இருப்பவர்.

784. पाञ्चरात्रकम् பாஞ்சராத்ரகம்

விஷ்ணுவின் பிரபாவத்தை விரிவாக விளக்கும் பாஞ்சராத்ராகம மாக இருப்பவர்.

785. शैवम् சைவம்

சிவ பெருமானின் வைபவத்தைப் புகட்டும் சைவாகம நூலானவர்.

786. पाशुपतम् பாசுபதம்

சிவபெருமானின் தத்வத்தை விளக்கும் பாசுபதாகம நூலாகவும் இருப்பவர்.

787. कालामुखम् காலாமுகம்

சிவபெருமானின் மஹத்வத்தை மொழிகின்ற காலாமுகம் எனப்படும் தந்திர நூலாக இருப்பவர்.

788. भैरवशासनम् பைரவசாஸனம்

சிவபெருமானின் சிறப்பைச் சொல்லும் பைரவசாஸனம் எனப்படும் தந்திர நூலாக இருப்பவர்.

789. शाक्तम् சாக்தம்

அன்னை பராசக்தியின் மேன்மையை உரைக்கும் சாக்தம் எனப்படும் தந்திர நூலானவர்.

790. वैनायकम् வைநாயகம்

ஸ்ரீ மஹாகணபதியின் பெருமையை நிருபிக்கும் வைனயகம் என்ற தந்திர நூலாக இருப்பவர்.

791. सौरम् ஸௌரம்

ஸூர்ய பகவனுடைய ஸ்வரூபத்தையும் மஹிமையையும் வருணிக்கும் 'ஸௌரம்' என்ற தந்திர நூலாக இருப்பவர்.

792. जैनम् ஜைனம்

நாஸ்திகர்களான ஜைனர்களால் ஆதரிக்கப்படும் ஜைனம் என்ற நாஸ்திக தந்திர நூல் வடிவமானவர்.

793. आर्हतसंहिता ஆர்ஹதஸம்ஹிதா

நாஸ்திகர்களால் பஹுமானிக்கப்படும் ஆர்ஹதஸம்ஹிதா என்ற நாஸ்திக தந்திர நூலாகவும் இருப்பவர்.

794. सत् ஸத்

கார்யப் பொருள் அனைத்தும், தன்னுடைய பெயரும் உருவமும் அறியாதபடி காரணத்தின் வடிவமாக காரணத்தில் இருக்கும்போது 'ஸத்' என வழங்கப்படுகின்றது. அத்தகைய காரணத்தினுள் இருக்கும் 'ஸத்' என்ற கார்யமாகவும் இருப்பவர்.

795. असत् அஸத்

காரணத்திலிருந்து வெளித் தோன்றிய கார்யங்கள், பெயரையும், உருவத்தையும் அடைந்து காரணரூபத்தை இழந்தவுடன் அவைகள் அஸத் என அறிஞர்களால் கூறப்படுகின்றது. அத்தகைய 'அஸத்' எனப்படும் நாமரூப வஸ்துவாக விளங்குபவர். [அஸத் என்ற சொல், கானல் ஜலம், பழுதைப்பாம்பு போன்று தோற்றமுள்ளதாயிருப்பினும் உண்மையில் இல்லாததான பொருளைக் குறிப்பதாகும்.

796. व्यक्तम् வ்யகதம்

பெயருடனும், உருவத்துடனும் தனித்தனியே துலங்குகின்ற எல்லாப் பொருள்களாகவும் விளங்குகின்றவர்.

797. अव्यक्तम् அவ்யக்தம்

பெயருடனும், உருவத்துடனும் காணப்படும் பொருள்கள் அனைத்துடையவும், பெயரையும், உருவத்தையும் மறைத்து அவைகளைத் தன்னுள் வைத்திருக்கும் காரணப் பொருளாகவும் இருப்பவர்.

798. सचेतनम् ஸசேதனம்

உணர்ச்சியுடன் கூடிய உயிரினமாக இருப்பவர்.

799. अचेतनम् அசேதனம்

உணர்ச்சி அற்ற ஆகாயம் முதலிய ஜடப் பொருளாகவும் இருப்பவர்.

800. बन्धः பந்த:

கதிரவன் போல் பிரகாசிக்கும் ஆத்மஸ்வரூபத்தை, இருள் போன்ற ஜடப் பொருளான அநாத்ம வஸ்துவாகவும், அநாத்ம வஸ்துவை

ஆத்ம வஸ்துவாகவும் அறிவது ப்ரம்ஹம் எனக் கொள்ள வேண்டும். இத்தகைய தவருன அறிவே பந்தம் எனப்படும். அத்தகைய பந்த-மாகவும் இருப்பவர்.

801. मोक्षः மோக்ஷ:

பந்தத்திற்கு மூல காரணமானதும், அவித்யை எனப்படுவதுமான அக்ஞானம் (அறியாமை) அறவே அழிவதுதான் மோக்ஷம் எனப்படும். அத்தகைய மோக்ஷமாக இருப்பவர்.

802. सुखम् ஸுகம்

அவித்யை எனப்படும் அறியாமை அகன்றவுடன் எஞ்சி நிற்கும் ஆத்ம ஸ்வரூப ஸுகமாக இருப்பவர்.

803. भोगः போக:

ஆத்ம ஸ்வரூப ஸுகம் ஜீவன் முக்தர்களால் அனுபவிக்கப்படும்-போது போகம் எனப்படும். அத்தகைய போகமாகவும் இருப்பவர்

804. अयोगः அயோக:

எங்கும் நிறைந்திருப்பவராலுலும் ஒன்றுடனும் கலந்திருக்காதவர்.

805. सत्यं ஸத்யம்

எங்கும், எப்போதும், எதனுலும், கெடுக்கப்படாத உண்மை தத்துவமாக விளங்குபவர்.

806. अणुः அணு:

உள்ளத்திற்கும் புலன்களுக்கும் துலங்காததனுல் மிகவும் ஸூக்ஷ்மமாக இருப்பவர்.

807. महान् மஹான்

வாழ்க்கையில் தொடர்ச்சியாக வரும் ஸுகங்களுள் மிகப் பெரிய மோக்ஷ ஸுகத்தை அளிப்பதனுல் பெரியவராக இருப்பவர்.

808. स्वस्ति ஸ்வஸ்தி

'தனது ஸ்வரூபம் ஒன்றே உண்மையில் இருப்பதாகும்; மற்றவை அனைத்தும் உண்மையில் இல்லை' என்ற காரணத்தால் ஸ்வஸ்தி என்று வழங்கப்படுகிருர்

809. हुम् ஹும்

தன்னிடமிருந்து இரண்டாவது பொருளை வெகு தூரத்தில் இருக்கும்படிச் (வேறுபட்ட தாக) செய்வதனால் ப்ரஹ்ம வஸ்து ஹும் எனப்படும். அத்தகைய ஹுங்காரமாக இருப்பவர்.

810. फट् பட்

தனது உண்மையான ஸ்வரூபத்தை அறிவதனால், இரண்டாவ-தான பொருளே இல்லாமல் போகின்றது. எனவே ப்ரஹ்ம வஸ்து 'பட்' எனப்படுகின்றது. அத்தகைய 'பட்' ரூபமாகவும் இருப்பவர்.

811. स्वधा ஸ்வதா

அக்நிஷ்வாத்தா முதலிய பித்ருக்களுக்கு மிகவும் பிரியமான ஸ்வதா சொல்லாக இருப்பவர்.

812. स्वाहा ஸ்வாஹா

அக்நி முதலிய தேவர்களுக்குப் பிரியமான ஸ்வாஹா என்ற சொல்லாக இருப்பவர்.

813. श्रौषट् ச்ரௌஷட்

வேள்வி நடக்கும்போது ருத்விக்குகளால் உரக்கச் சொல்லப்படும் ச்ரௌஷட் என்ற சொல்லின் வடிவமாக இருப்பவர்.

814. वौषट् வௌஷட்

யாக காலத்தில் ருத்விக்குகளால் கூறப்படும் வௌஷட் என்ற சொல்லின் வடிவமாக இருப்பவர்.

815. वषट् வஷட்

யாக காலத்தில் ருத்விக்குகளால் உச்சரிக்கப்படும் வஷட் என்ற சொல்லின் வடிவமாக இருப்பவர்.

816. नमः நம:

யாகம் நடக்குமிடத்தில் அடிக்கடி தெய்வங்களை வணங்கும்போது சொல்லப்படும் 'நம:' என்ற சொல்லாக விளங்குபவர்.

817. ज्ञानम् ஞானம்

தளையிலின்றும் விடுதலை பெறுவதற்குக் காரணமான ஆத்ம

ஸ்வரூபத்தைப் பற்றிய உண்மை அறிவே ஞானம் எனப்படும் அத்தகைய ஞானமாக இருப்பவர்.

818. विज्ञानम् விக்ஞானம்

ஆத்மா அல்லாத உலகத்தை விஷயமாகக் கொண்ட அறிவு விக்ஞானம் எனப்படும். அத்தகைய விக்ஞானமாகவும் இருப்பவர்.

819. आनन्दः ஆனந்த:

ஜீவன் முக்தர்களால் அனுபவிக்கப்படும் ஆத்ம ஸ்வரூப ஸுக-மாக இருப்பவர்.

820. बोधः போத:

ஜீவன் முக்தர்களால் அடையப்படும் ஆத்ம ஸ்வரூபத்தின் அறிவே போதம் எனப்படும். அத்தகைய போதமாக இருப்பவர்.

821. संवित् ஸம்வித்

ஸ்ரீ மஹாகணபதியினிடம் இரண்டறக் கலந்து நிலேயான ஆனந்தத்தை அடைவதற்கு விருப்பம் உள்ள யோகிகளுக்கு, ஸமாதி நிலேயில் கணபதி இன்றி வேறு ஒரு பொருளேயும் விஷயமாக அடை-யாததும் கணபதியின் வடிவம் தாங்கியதுமான நெய் தாரை போன்று தொடர்ச்சியாக ஏற்படும் அறிவே ''ஸம்வித்'' எனப்படும். அத்தகைய ஸம்வித்தாக இருப்பவர்.

822. शमः சம:

ப்ரளய காலத்தில் ப்ரபஞ்சம் அனைத்தையும் தன்னிடத்தில் ஒடுங்கும்படி செய்வதனுல் சமம் எனப்படுகின்ருர்.

823. यमः யம:

வ்யவஹார காலத்தில் உலகம் அனைத்தையும் அதனுள் இருந்து கொண்டு அடக்கி ஆளுவதனுல் யமம் எனப்படுகிருர்.

[குறிப்பு: 824 வது முதல் 997 வது முடிய நூற்று எழுபத்து நான்கு நாமாக்கள், ஒன்று முதல் முப்பத்து மூன்று கோடி வரை உள்ள எண்களால், தொடர்ச்சியாகவும், தொடர்ச்சி இலலாமலும், எண்ண-ங்களே முன் நிறுத்தி ஸ்ரீ மஹாகணபதியின் அரிய பெரிய பெருமை-களே வருணிக்கின்றன]

824. एक: ஏக:

(இரண்டற்ற பொருளாக) ஒன்ருக இருப்பவர்.

ஒரு பொருளுக்கு ஏற்படும் வேற்றுமை மூன்று வகைப்படும். முதலாவது தன் இனத்திலிருந்து ஏற்படுவது. இரண்டாவது பிற இனத்திலிருந்து ஏற்படுவது. மூன்ருவது தன் உடல் உறுப்புகளி-லிருந்து ஏற்படுவது. உதாரணமாக, தென்னைமரம் தன்னினமான மா, பலா, புளி முதலிய மரங்களிலிருந்து வேறுபட்டது. வேறு இன-மான விலங்குகள், பறவைகள், மனிதர்கள் இவைகளிலிருந்தும் வேறு பட்டது. தன்னிடத்திலும் வேர், மட்டைகள், ஓலைகள், காய்கள் என்ற பலவிதமான வேறுபாடுகளுடனும் கூடியது. கணேசர் எனப்படும் பரம்பொருளுக்கு பிறப்பு இல்லாததால், தன் இனம் என்பதே இல்லை. உண்மையில் இரண்டாவது பொருளே இல்லை என்பதனுல் வேறு இனமும் இல்லை. தனக்கு உறுப்புகளும் இல்லாத-தனுல் ஸ்ரீ கணேசர் வேற்றுமை மூன்றும் இன்றி ஒன்ருன பொருளாக இருப்பவர்.

825. एकाक्षराधारा: ஏகாக்ஷராதார:

गम् (கம்) என்ற தன் ஒரு பீஜாக்ஷரத்தில் நிலை பெற்றிருப்பவர்

826. एकाक्षरपरायण: ஏகாக்ஷரபராயண:

ओम् (ஓம்) என்ற தன் ஒரு பீஜாக்ஷரத்தின் பொருளாக விளங்குபவர்.

827. एकाग्रधी: ஏகாக்ரதீ:

ஒன்ருனதும் உண்மையானதுமான தனது ஸ்வரூபத்திலேயே அசைவின்றி நிலை பெற்றிருக்கும் அறிவை உடையவர்.

828. एकवीर: ஏகவீர:

'நான்' என்ற சொல்விற்கும், உணர்விற்கும் உண்மையான இருப்பிடமான தன்னிடத்தில், 'இது', 'அது' என்று பலவாருக வெளியில் காணப்படும் பொருள்கள் அனைத்தையும் லயிக்கும்படி செய்வதில் (இல்லாமல் செய்வதில்) இணையற்ற பராக்ரமத்தை அடைந்திருப்பதனுல் ஏகவீரர் எனப்படுகிருர். இவ்விஷயத்தில் இவருக்கு நிகரானவர் இல்லை என்பது கருத்து.

829. एकानेकस्वरूपधृक् ஏகாநேகஸ்வரூபத்ருக்

வானத்தில் பிரகாசிக்கும் சந்திரன் ஒருவனுகவே இருப்பினும், பலவிதமான நீர்த் தேங்கங்களிலுள்ள தெளிந்த நீரில் தோன்றி அநேகம் சந்திரர்களாகக் காணப்படுவதுபோல் கணபதியின் ஸ்வ-ரூபம் ஒன்ருனுலும் ஜீவராசிகள் அணவருடைய பலவிதமான உள்ளங்களில் பிரதிபலித்து ஒன்ருகவும் அனேகமாகவும் இருந்து கொண்டு காணப்படுகின்ருர்.

'एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत्

ஏகதா பஹுதா சைவ த்ருச்யதே ஜலசந்த்ரவத்

என்ற உபநிஷத் வசனம் இந்த நாமத்திற்கு மூலப் பிரமாணமாகும்.

830. द्विरूप: த்விரூப:

ஸகுணம், நிர்குணம் என்ற இரண்டுவித ப்ரஹ்மத்தினுடையவும் வடிவமானவர். द्वे ब्रह्मणी वेदितव्ये த்வே ப்ரஹ்மணீ வேதிதவ்யே என்ற வேதவசனம் இங்கு பிரமாணமாகும்.

831. द्विभुज: த்விபுஜ:

இரண்டு கைகளை உடையவர்.

832. द्व्यक्ष: த்வ்யக்ஷ:

இரண்டு கண்களை உடையவர்.

833. द्विरद: த்விரத:

துதிக்கைக்கு இரண்டு பக்கத்திலும் வெண்மையான இரு தந்தங்களை உடையவர்.

834. द्वीपरक्षक: த்வீபரக்ஷக:

தனது பக்தனை ஏழு தீவுகளுக்குத் தலைவனுகச் செய்து அவை-களைக் காப்பாற்றுகின்றவர்.

835. द्वैमातुर: த்வைமாதுர:

பார்வதீ தேவி, கங்கா தேவி இருவர்களையும் அன்னைகளாக அடைந்தவர்.

836. द्विवदनः த்விவதன:

அடியார்களால் தன்னை உத்தேசித்து ஹோமம் செய்யப்படும் பொருளை அக்நியின் வாயிலாக ஏற்றுக் கொள்வதால் அக்நி முகத்துடன் சேர்த்து இரண்டு முகங்களை உடையவர்

837. द्वन्द्वातीतः த்வந்த்வாதீத:

மழை, வெயில், பசி, தாகம், சோகம், மோகம், பிறப்பு, இறப்பு ஆகிய இரட்டைத் துன்பங்களால் தீண்டப்படாதவர்.

838. द्वयातिगः த்வயாதிக:

ஆசைக்கும், சினத்திற்கும் இருப்பிடமான ரஜோ குணத்தையும், கவனக்குறைவு, சோம்பல், தூக்கம், அறியாமை இவைகளுக்குக் காரணமாக இருக்கும் தமோ குணத்தையும் கடந்து சென்றவர். (எப்பொழுதும் அறிவு, ஆனந்தம் இவைகளுக்கு இருப்பிடமான தூய்மையான ஸத்வ குணத்தில் இருப்பவர் என்பது கருத்து)

839. त्रिधामा த்ரிதாமா

(உலகிற்குப் பலவிதமான நன்மைகளைத் தருகின்ற) சூர்யன், சந்திரன், அக்நி என்ற மூன்று ஜ்யோதிகளாக இருப்பவர்.

840. त्रिकरः த்ரிகர:

மூன்று உலகங்களையும் படைத்தவர்.

841. त्रेतात्रिवर्गफलदायकः த்ரேதாத்ரிவர்கபலதாயக:

ஆஹவநீயம், கார்ஹபத்யம், தக்ஷிணாக்நி என்று வேதத்தில் கூறிய மூன்று அக்நிகளை உபாஸனை செய்வதன் மூலம், அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் அடைவதற்கு விரும்புகின்ற அடியார்களுக்கு அவைகளை அளிப்பவர்.

842. त्रिगुणात्मा த்ரிகுணாத்மா

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுடன் கூடிய மூலப்ரக்ருதியையும் தாங்கி நிற்பவர்.

843. त्रिलोकादिः த்ரிலோகாதி:

மூன்று உலகங்களுக்கும் காரணமாக இருப்பவர்.

844. त्रिशक्तीशः த்ரிசக்தீச:

'ஸ்ரீம்', 'ஹ்ரீம்', 'க்லீம்' என்ற மூன்று சக்திகள் சேர்ந்த மந்திரத்தின் தலைவனாக இருப்பவர். அல்லது அரசு புரிவதற்குத் தேவையான ப்ரபுசக்தி, உத்ஸாஹசக்தி, மந்திர சக்தி என்ற மூன்று சக்திகளுடன் கூடிய வேந்தனாக இருப்பவர்.

845. त्रिलोचनः த்ரிலோசன:

மூன்று கண்களை உடையவர்.

846. चतुर्बाहुः சதுர்பாஹு:

நான்கு கைகளை உடையவர்.

847. चतुर्दन्तः சதுர்தந்த:

நான்கு தந்தங்களை உடையவர்.

848. चतुरात्मा சதுராத்மா

"ஆத்மோபநிஷத்தில்" ஆத்மா, அந்தராத்மா, ஞானத்மா, பரமாத்மா என்று நான்கு விதமாகப் பிரித்துக் கூறப்பட்ட ஆத்ம ஸ்வரூபமாக இருப்பவர்.

849. चतुर्मुखः சதுர்முக:

முகத்தில் நான்கு விதமான வேதங்களைத் தாங்கி இருப்பவர்.

850. चतुर्विधोपायमयः சதுர்விதோபாயமய:

நான்கு விதமான உபாயத்தின் வடிவமாக இருப்பவர். பகைவர்களால் ஏற்படும் துன்பங்களைத் தவிர்ப்பதற்கு ஏற்ற உபாயம் நான்கு வகைப்படும். ஸாம (நட்பு நிறைந்த உரையாடல்), தானம் (விரும்பிய செல்வத்தை அளித்தல், பேதம் (பகைவர்களுள் பரஸ்பரம் பகைமையைத் தோற்றி வைத்தல்), தண்டம் (போர் புரிந்து போரில் அவர்களை அழித்தல்) இத்தகைய நான்கு வித உபாய வடிவமாக இருப்பவர்.

851. चतुर्वर्णाश्रमाश्रयः சதுர்வர்ணாச்ரமாச்ரய:

ப்ராஹ்மணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் என்ற நான்கு வர்ணத்தினராலும், ப்ரஹ்மசாரி, க்ருஹஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்யாஸி என்ற நான்கு ஆச்ரமத்தில் இருப்பவர்களாலும் அவரவர்களுக்கு மறைகளால் விதிக்கப்பட்ட தர்மங்களை முறைப்படி அனுஷ்டித்து அடையத் தகுந்தவர்.

852. चतुर्विधवचोवृत्तिपरिवृत्तिप्रवर्तक:

சதுர்விதவசோவ்ருத்திபரிவ்ருத்தி ப்ரவர்தக:

நான்கு விதமான நிலையில் உள்ள வாக்கை நன்கு இயங்கும்படி செய்பவர்.

ஒரு பொருளைக் குறிப்பதும், பிறரால் கேட்கப்படுவதும், தெளிவாக மானிடர்களால் நாவால் உச்சரிக்கப்படுவதுமான சொல்லிற்கு நான்கு நிலைகள் உள்ளன. உடலினுள் நாபிப் பிரதேசத்திலிருந்து புறப்படும் சப்தம் கழுத்து வரை பரா, பச்யந்தீ, மத்யமா என்ற மூன்று நிலைகளை அடைகின்றது. இந்நிலை பிறருக்கு விளங்கமாட்டா. கழுத்துப் பிரதேசத்திலிருந்து நாவின் வழியாக வெளிவரும்போது வைகரீ என்ற நிலை ஏற்படுகின்றது. நான்காவதான வைகரீ நிலையில் உள்ள சொல்லையே மனிதர் பேசுகின்றனர். तुरीयां वाचं मनुष्या वदन्ति (துரீயாம் வாசம் மனுஷ்யா வதந்தி) என்று வேதமும் கூறுகின்றது.

கணேசரின் அருளால் மனிதன் நன்கு பேசுகின்றான் என்பது கருத்து.

853. चतुर्थीपूजनप्रीत: சதுர்தீபூஜனப்ரீத:

ஒவ்வொரு மாதத்திலும் சுக்ல பக்ஷத்தில் சதுர்த்தி திதியன்று (வளர்பிறையில் நான்காவது நாளன்று) தன்னை முறைப்படி வழிபடுகின்றவர்களிடம் அன்பு கொண்டவர்.

[சதுர்தீ திதியின் பெருமையை கணேச புராணத்தில் காண்க.]

854. चतुर्थीतिथिसंभव: சதுர்தீதிதிஸம்பவ:

இவ்வுலகத்தின் நன்மைக்காகப் புரட்டாசி மாதம் சுக்ல பக்ஷம் (வளர்பிறை) சதுர்த்தி (நான்காவது நாள்) அன்று அவதாரம் செய்தவர்.

[ஸ்ரீ கணேசரின் அவதார மஹிமையை கணேச புராணத்தில் காண்க]

855. पञ्चाक्षरात्मा பஞ்சாக்ஷராத்மா

நாதம், பிந்து, மகாரம், உகாரம், அகாரம் என்ற ஐந்து எழுத்துகளை உடைய ப்ரணவ (ஓங்கார) வடிவமாய் இருப்பவர்.

856. पञ्चात्मा பஞ்சாத்மா

இவ்வுலகின் நன்மைக்காகப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்ரஹித்தல் எனப்படும் ஐந்து செயல்கள் புரிந்துவரும் நான்முகன், நாராயணன், ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவன் என்ற ஐந்து தெய்வங்களின் வடிவமானவர்.

857. पञ्चास्यः பஞ்சாஸ்ய:

பதினான்கு லோகங்களை உட்கொண்ட ப்ரும்மாண்டத்தையே விழுங்கும் அளவிற்கு விஸ்தாரமான பரந்திருக்கும் முகத்தை உடையவர். '(பஞ்ச' (पञ्च) என்ற வடமொழிச் சொல்லிற்கு ஐந்து என்ற பொருளைத்தவிர விஸ்தாரம் என்று ஒரு பொருளும் உண்டு என்பது கவனத்திற்குரியது)

858. पञ्चकृत्यकृत् பஞ்சக்ருத்யக்ருத்

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருள் புரிதல் என்ற ஐந்து விதமான தொழில்களை, பிரும்மா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவன் என்ற தெய்வங்களின் வடிவனாக இருந்து கொண்டு செய்பவர்.

859. पञ्चाधारः பஞ்சாதார:

ஆகாயம், வாயு, அக்நி, நீர், நிலம் என்ற ஐந்து பூதங்களையும் தாங்கி நிற்பவர்.

860. पञ्चवर्णः பஞ்சவர்ண:

ஐந்து நிறங்களை உடையவர்.

ஸ்ரீ கணேசர் எப்பொழுதும் இயற்கையாகவே கோடிக் கதிரவர்களைப் போன்ற நிறத்தவர். க்ருத யுகத்தில் திங்களைப் போன்ற நிறம் உடையவர். த்ரேதாயுகத்தில் அர்ஜுன மரத்தின் நிறத்தைப் போன்ற நிறத்தை உடையவர். த்வாபரயுகத்தில் பத்மராகத்தைப் போன்றும், பட்டுப்பூச்சியைப் போன்றும் சிவந்த நிறம் உள்ளவர். கலியுகத்தில் புகை நிறம் உடை யவர். எனவே ஐந்து நிறம் உடையவர் ஆகின்றார்.

861. पञ्चाक्षरपरायणः பஞ்சாக்ஷரபராயண:

ந, ம:, சி, வா, ய என்ற ஐந்து எழுத்துக்கள் கொண்ட சிவ மந்திரத்தை எப்போதும் ஜபம் செய்து கொண்டிருப்பவர்.

862. पञ्चताल: பஞ்சதால:

நன்கு பிரித்து வைத்திருக்கும் கையிலுள்ள நடுவிரலின் நுனியிலிருந்து கட்டை விரல் வரை உள்ள இடைவெளி அளவிற்குத் தாலம் எனப் பெயர். ஐந்து தாலத்தின் அளவு கொண்ட உடலை உடையவர், குள்ளமாக இருப்பவர் என்பது கருத்து)

863. पञ्चकर: பஞ்சகர:

ஏதேனும் ஒரு ஸமயத்தில் குள்ளமாக இருப்பவர் ஆனாலும் ஸ்ரீ கணேசர் ஐந்து கை அளவுள்ள சரீரத்தில் இருப்பவர். (உயரமாகவும் இருப்பவர் என்பது கருத்து)

864. पञ्चप्रणवभावित: பஞ்சப்ரணவபாவித:

மந்திர சாஸ்திரத்தில் ஐந்து பிரணவங்கள் என வழங்கப்படும் ஓம், ஐம், ஹ்ரீம், க்லீம், ஸௌ: என்ற ஐந்து அக்ஷரங்களின் (எழுத்துக்களின்) பொருளாக இருப்பவர்.

865. पञ्चब्रह्ममयस्फूर्ति: பஞ்சப்ரஹ்மமயஸ்பூர்தி:

வேதங்களால் ஐந்து ப்ரஹ்மங்கள் எனப் புகழப்படுகின்ற ஸத்யோஜாதர், வாமதேவர், அகோரர், தத்புருஷர், ஈசானர் என்ற பரமசிவ மூர்த்திகளாகப் பிரகாசிப்பவர்.

866. पञ्चावरणवारित: பஞ்சாவரணவாரித:

ஐந்து ஆவரணங்களுடன் ஸ்ரீ கணேசரை வழிபடுவதற்கான முறையைக் கூறும் நூலில் வருணிக்கப்பட்ட ஐந்து விதமான அங்க தேவதைகளால் சூழப்பட்டவர்.

(லக்ஷ்மீ நாராயணர், பார்வதீ பரமேச்வரர், ரதி மன்மதன், பூமிதேவி ஸ்ரீ வராஹர், என்ற நான்கு தேவதா தம்பதிகளால் முதல் ஆவரணத்திலும், ஆமோதன், ப்ரமோதன், ஸுமுகன், துர்முகன், விக்னன், விக்னகர்தா, சங்கநிதி, பத்மநிதி என்ற தேவதைகள் தங்கள் மனைவியருடன் இரண்டாவது ஆவரணத்திலும், ஹ்ருதயம் சிரஸ், சிகை, கவசம், நேத்ரம், அஸ்த்ரம், எனப்படும் அங்கதேவதைகளால் மூன்றாவது ஆவரணத்திலும், ப்ராஹ்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹி, மாஹேந்த்ரீ, நாரஸிம்ஹீ, மஹாலக்ஷ்மீ

ஆகிய மாத்ரு தேவதைகளால் நான்காவது ஆவரணத்திலும், இந்திரன், அக்நி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, சந்திரன், ஈசானன் என்ற திக் தேவதைகளால் ஐந்தாவது ஆவரணத்திலும் சூழப்பட்டு பூஜிக்கப்படுகின்றவர்.)

அல்லது, அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்தமயம், என்ற ஐந்து (ஆவரணங்களால்) கோசங்களால் உறையில் கத்தி போன்று மறைக்கப்பட்டு இருப்பவர்.

(ஐந்து கோசங்களை விசாரணை செய்து, அதனுள் இருக்கும் ஸ்ரீ கணேச ஸ்வரூபம், அறிந்து அடையத் தகுந்தது என்பது கருத்து)

867. पञ्चभक्ष्यप्रियः பஞ்சபக்ஷயப்ரிய:

லட்டு, மோதகம், பூரி, பேணீ, அப்பம் என்ற ஐந்து விதமான பணியாரங்களில் மிகவும் ப்ரீதி உள்ளவர்.

868. पञ्चबाणः பஞ்சபாண:

பஞ்சபாணேச்வரீ அம்பாளுடைய द्रां, द्रीं, क्लीं, ब्लूं, सः த்ராம், த்ரீம், க்லீம், ப்லூம், ஸ: என்ற ஐந்துவிதமான பீஜாக்ஷரங்களின் வடிவமாக இருப்பவர்.

(ஸ்ரீ வித்யோபாஸகர்களால் செய்யப்படும் ஸ்ரீ சக்ரபூஜையில், பிந்து சக்ரத்தில் பஞ்ச பஞ்சிகா பூஜையில் பஞ்சபாணேச்வரீ அம்பாள் பீஜாக்ஷரங்களுடன் ஆராதிக்கப்படுகின்றாள் என்ற விஷயம் இங்கு கவனத்திற்கு உரியதாகும்).

869. पञ्चशिवात्मकः பஞ்சசிவாத்மக:

காமேச்வர ரூபனான பரமேச்வரனுடைய ஐந்து பீஜாக்ஷரங்களின் ஸ்வரூபமாக இருப்பவர்.

870. षट्कोणपीठः ஷட்கோணபீட:

ஆறு கோணங்கள், ஆறு மூன்று முனைகள் கொண்ட பீடத்தில் தங்கம், வெள்ளி, செம்பு ஆகியவற்றால் செய்யப்பட்ட யந்திர ரூப-மான தகட்டில், செய்யப்படும் பக்தர்களின் பூஜையை ஏற்றுக் கொள்வதற்கும், அவர்களை அனுக்ரஹிப்பதற்கும் இருப்பவர்.

871. षट्चक्रधामा ஷட்சக்ரதாமா

மனித உடலினுள் இருக்கும் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணி பூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு சக்ரங்களில் வாஸம் செய்பவர்.

872. षट्ग्रन्थिभेदकः ஷட்க்ரந்திபேதக:

மூலாதாரத்தில் இருக்கும் ப்ருஹ்ம க்ரந்திகள் (கட்டுகள்) இரண்டையும், மணிபூரகத்தில் இருக்கும் விஷ்ணு க்ரந்திகள்(கட்டுகள்) இரண்டையும் அக்ஞாசக்ரத்திலிருக்கும் ருத்ர க்ரந்திகள் (கட்டுகள்) இரண்டையும் குண்டலினீ சக்தியின் உருவம் தாங்கி அவிழ்த்து விடுபவர். (அங்குள்ள தடைகளைத் தகர்த்து எறிபவர் என்பது கருத்து )

873. षडध्वध्वान्तविध्वंसी ஷடத்வத்வாந்தவித்வம்ஸீ

பதம், புவனம், வர்ணம், தத்வம், கலை, மந்திரம் என்று மந்திர சாஸ்தரங்களில் கூறப்பட்ட ஆறுவிதமான மார்கங்களிலும் (வழி-களிலும்) உள்ள இருளை ஆகற்றி அவ்வழிகளில் ஸ்ரீ கணேசரை வழிபடும் உபாஸகர்களுக்குப் பிரகாசத்தை (நல்லறிவை) நல்கி நன்மை புரிகின்றவர்.

874. षडङ्गुलमहाह्रदः ஷடங்குலமஹாஹ்ரத:

ஆழமுள்ள பெரிய குளம் போன்று ஆறு அங்குல ஆழமுள்ள ஞாபிளை (தொப்புளை) உடையவர்.

875. षण्मुखः ஷண்முக:

எப்பொழுதும் தன் முகத்தில் (வாயில்) ஆறுவித சாஸ்திரங்களை, வேண்டுகின்ற அடியார்களுக்கு உபதேசிப்பதற்காக, இருக்கும்படி செய்பவர்.

876. षण्मुखभ्राता ஷண்முகப்ராதா

ஆறுமுகனும், தேவர் படைத்தலைவனுமான கந்தப் பெருமானை தம்பியாக அடைந்திருப்பவர்.

877. षट्शक्तिपरिवारित: ஷட்சக்திபரிவாரித:

ஹ்ருதயம், சிரஸ், சிகை, கவசம், நேத்ரத்ரயம், அஸ்திரம் என்று ஆறுவிதமான சக்திகளால் சூழப்பட்டவர்.

(மந்திர ஜபம் செய்பவர்கள் அனைவரும், ஜபத்திற்கு முன்னதாக அங்கந்யாஸம் செய்யும்போது அந்தந்த மந்திரத்திற்கு உரிய பீஜாக்ஷரங்களைக் கூறி மார்பு, தலை, தலையின் பின்புறம் உள்ள முடியப்பட்ட முடி, இரண்டு புஜங்கள், புருவத்தின் நடுபாகத்தைச் சேர்த்து மூன்று கண்கள், இரண்டு உள்ளங்கைகள் இவைகளைத் தொட வேண்டும். அப்பொழுது அந்த ஆறுவித சக்திகள் ஜபம் செய்பவனைக் காப்பாற்றுகின்றன என்று மந்திர சாஸ்திரத்தில் கூறியிருப்பது கவனத்திற்குரியதாகும்.

878. षड्वैरिवर्गविध्वंसी ஷட்வைரிவர்கவித்வம்ஸீ

பிறவி முதலே மாந்தர்கள் அனைவருக்கும் தீங்கு இழைக்கும் பகைவர்கள் ஆறு போகள் ஆகும். அவர்கள், காமம் (ஒரு பொருளை அடைந்தே தீர வேண்டும் என்ற உள்ளத் துடிப்பு), க்ரோதம் (விரும்பிய பொருள் கிடைக்காதபடி தடை செய்பவர்களிடம் சினம்) மாத்ஸர்யம் (தன்னிடம் இல்லாததும் நல்லோர்களிடம் காணப்படுவதுமான நற்குணத்தைக்கண்டு பொருமையின்மை) லோபம் (மேலும் மேலும் பொருளைத் திட்டுவதில் பேராசை), மோஹம் (பகுத்தறிவின்மை), மதம் (தகாத விஷயத்தில் உள்ளத்தையோ, நாக்கையோ, உடலையோ செயல்படும்படித் தூண்டிவிடும் கொழுப்பு) எனப்படுகின்றனர். தன்னை வழிபடும் அடியார்களுக்கு, அததகைய பகைவர்கள் மூலம் ஏற்படும் துன்பம் தோன்றாமலிருக்க அத்தகைய பகைவர்கள் ஆறு பேரையும் நாசம் செய்பவர்.

879. षडूर्मिभयभञ्जन: ஷடூர்மிபயபஞ்ஜன:

பிறப்பு இறப்பு ஆகிற ஸம்ஸாரக் கடலில் விழுந்து கரையேறும் வழி தெரியாமல் தவிப்பவர்களும், பசி, தாகம், சோகம், மோகம், மூப்பு, இறப்பு ஆகிய ஆறு விதமான அலைகளால் அலைக்கழிக்கப்பட்டு அச்சமுற்றிருப்பவர்களுமான தனது அடியார்களின் அவ்வச்சத்தை அறவே அகற்றுபவர்.

880. षट्तर्कदूर: ஷட்தர்கதூர:

கணாதர், கௌதமர், கபிலர், பதஞ்ஜலி, ஜெமினி, வ்யாஸா ஆகிய முனிவர்களால் தோற்றுவிக்கப்பட்ட ஆறுவித தர்சனங்களால் நிரூபிக்கப்படும் யுக்திகளுக்கும் எட்டாதவர்.

(இவ்வுலகில் சொல்லானது ஜாதியையோ, குணத்தையோ, தொழிலையோ, உறவு முதலிய ஸம்பந்தத்தையோ முன்னிட்டுத்தான் ஒரு பொருளைக் கூறுகின்றது. உதாரணமாக மரம், மான், மனிதன் இந்த சொற்கள் ஜாதியை முன்னிட்டவை கருப்பு, சிவப்பு, உவர்ப்பு இவைகள் குணத்தை முன்னிட்வை; ஆடுகிறுன், பாடுகிறுன், ஓடு-கிறுன் இவைகள் தொழிலை முன்னிட்டவை; அன்னை, தந்தை, புதல்வன் இவை உறவு முறைகளை முன்னிட்டவை பரம்பொருளான ஸ்ரீ கணேசருக்கு பிறவியே இல்லாததால் ஜாதி இல்லை; உருவமே இல்லாததால் குணமோ, தோஷமொ ஒன்றுமே இல்லை; உறுப்புகள் இல்லாததால் ஒரு தொழிலும் இல்லை; அவரின்றி வேருென்றும் இல்லாததால் ஒருவித ஸம்பந்தமும் இல்லை எனவே சொற்களால் கூற இயலாது. என்ற முக்கியமான வேதாந்த ஸித்தாந்தத்தைத் தழுவி இந்நாமம் தோன்றியுள்ளது.

881. षट्कर्मनिरत: ஷட்கர்மநிரத:

ஆறு விதமான செயல்களைத் தவருமல் ச்ரத்தையுடன் புரிகின்ற அந்தணராக இருப்பவர்.

மறைகளை முறைப்படி ஓதுதல், மாணவர்களுக்கு ஓதுவித்தல், வேள்விகளை விதிப்படி செய்து முடித்தல், வேள்விகளைச் செய்து முடிப்பதற்கு உதவியை நாடும் தகுதியுள்ள மூன்று வர்ணத்தாருக்கும் உதவி புரிதல், தன்ருல் இயன்ற அளவிற்குத் தானம் செய்தல், விரும்பி அழைத்து ஆதரித்துத் தானம் செய்பவர்களிடமிருந்து தானத்தைப் பெற்றுக் கொள்ளுதல் ஆகிய ஆறுவிதமான தர்மங்களை ஒழுங்காகச் செய்து முடிக்கும் அந்தணருடைய வடிவமானவர்.

882. **षड्रसाश्रय:** ஷட்ரஸாச்ரய;

இனிப்பு, புளிப்பு, கைப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, உரைப்பு எனப்படும ஆறு விதமான ரஸங்களுக்கு இருப்பிடமானவர்.

883. **सप्तपातालचरण:** ஸப்தபாதாலசரண:

விராட்ரூபத்தை அடைந்த தன்னுடைய திருவடியில் அதலம், விதலம், ஸுதலம், தலாதலம், மஹாதலம், ரஸாதலம், பாதாளம் என்ற ஏழு விதமான பாதாளலோகங்களை வைத்திருப்பவர்.

884. **सप्तद्वीपोरुमण्डल:** ஸப்தத்வீபோருமண்டல:

விராட்ரூபத்துடன் கூடிய தனது துடைகளைச் சுற்றிலும் ஜம்பு, ப்லக்ஷம், சால்மலி:, குசம், க்ரௌஞ்சம், சாகம், புஷ்கரம் என்ற ஏழு தீவுகளுடன் கூடிய பூலோகத்தை உடையவா.

885. सप्तस्वर्लोकमुकुट: ஸப்தஸ்வர்லோகமுகுட:

விராட் ரூபியான தன் தலைமீது, புவ:, ஸுவ:, மஹ:, ஜன:, தப:, ஸத்யம், கோலோகம் என்ற ஏழு லோகங்களை வைத்திருப்பவர்

886. सप्तसप्तिवरप्रद: ஸப்தஸப்திவரப்ரத:

ஏழு ஜடைகளுடன் கூடிய பரமசிவன், மணி மல்லனுடன் போர் புரியும்போது அவருக்குச் சிறந்த குதிரையைப் போருககு உதவியாக அளித்தவர். அல்லது, ஏழு குதிரைகள் பூட்டிய தேருடன் இவ் வுலகத்தைச் சுற்றிவரும் ஸூர்யனுக்கு அவர் விரும்பிய வரஊ அளித்தவர்.

887. सप्ताङ्गराज्यसुखद ஸப்தாங்கராஜ்யஸுகத:

தன் திருவடியை வழிபடுகின்றவர்களுக்கு ஸ்வாமி (அரசன்), அமாத்யன் (அமைச்சர்), ஸுஹ்ருத் (நண்பன்), கோச: (கஜானு), ராஷ்ட்ரம் (நாடு), துர்கம் (மலைகள், காடுகள், அகழிகள் இவைக-ளாலான பாதுகாப்பு), பலம் (படை) என்ற ஏழு அங்கங்களுடன் நிறைந்த ராஜ்யத்தால் ஏற்படும் இன்பத்தைத் தருபவர்.

888. सप्तर्षिगणमण्डित: ஸப்தர்ஷிகணமண்டித:

கச்யபர், அத்ரி:, வஸிஷ்டர், விச்வாமித்ரர், கௌதமர், ஜமதக்னி, பாரத்வாஜர் என்ற ஏழு மஹர்ஷிகளாலும், கண தேவர்களாலும் பூஜிக்கப்பட்டவர்.

(ஸப்த ரிஷிகளைப் பற்றி பாகவத புராணம் 8 வது ஸ்கந்தம் 13 வது அத்யாயத்தில் காண்க)

889. सप्तच्छन्दोनिधि: ஸப்தச்சந்தோநிதி:

காயத்ரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி:, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தஸ்களுக்கு, (விருத்தங்களுக்கு) இருப்பிட-மானவர்.

890. सप्तहोता ஸப்தஹோதா

ஸோமயாகத்தில் செயல்படுகின்றவர்களான ஹோதா முதல் ஸ்தாவகர் முடிய ஏழு ஹோதாக்களின் வடிவமானவர். அல்லது 'ஸப்தஹோதா' என்ற பெயர் கொண்ட மஹர்ஷியாக இருப்பவர்.

891. सप्तस्वराश्रयः ஸப்தஸ்வராச்ரய:

ஷட்ஜம் (ஸ), ரிஷபம் (ரி), காந்தாரம் (க), மத்யமம் (ம), பஞ்சமம் (ப), தைவதம் (த), நிஷாதம் (நி) என்ற ஏழு ஸ்வரங்களுடன் கூடிய நாதத்திற்கிருப்பிடமானவர்.

892. सप्ताब्धिकेलिकासारः ஸப்தாப்திகேலிகாஸார:

உப்புக்கடல், கரும்புச் சார்க் கடல், கள் நிறைந்த கடல், நெய்க் கடல், பாற்கடல், தயிர்க் கடல், தூய்மையான நீர் நிறைந்த கடல் என்ற ஏழு கடல்களிலும் சிறிய குளத்தில் போன்று குளித்துக் கேளிக்கைகள் புரிகின்றவர்.

893. सप्तमातृनिषेवितः ஸப்தமாத்ருநிஷேவித:

ப்ராஹ்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, நாரஸிம்ஹீ, மாஹேந்த்ரீ என்ற ஏழு மாதாக்களால் ஆராதிக்கப் படுகின்றவர்.

894. सप्तच्छन्दोमोदमदः ஸப்தச்சந்தோமோதமத:

காயத்ரீ முதலிய ஏழு சந்தஸ்ஸின் ஒலிகளைக் கேட்ட மாத்திரத்திலேயே உண்டான ஆனந்தத்தால் தன்னையே மறந்திருப்பவர்.

895. सप्तच्छन्दोमखप्रभुः ஸப்தச்சந்தோமகப்ரபு:

காயத்ரீ முதலிய ஏழு சந்தஸ்களால் வேள்விகளில் நன்கு பூஜிக்கப் படுகின்ற இணையற்ற தலைவர்.

896. अष्टमूर्तिध्येयमूर्तिः அஷ்டமூர்த்தித்யேயமூர்த்தி:

ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள், ஸூர்யன், சந்திரன், புருஷன் என எட்டு விதமான உடல்களை உடைய பரமசிவனுல் தனது உள்ளத்தில் எப்பொழுதும் உபாஸிக்கப்படுகின்ற திருமேனியை, உடையவர்.

அல்லது, ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள், ஸூர்யன், சந்திான் புருஷன் ஆகிய எட்டு உருவங்களிலும் தியானம் செய்யத் தகுந்தவர்.

897. अष्टप्रकृतिकारणम् அஷ்டப்ரக்ருதிகாரணம்

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து தன்மாத்திரைகள், அஹங்காரம், மஹத்தத்வம், மூலப்ரக்ருதி எனப்படும் இவ்வுலகின் எட்டு காரணங்களுக்கும் காரணமாக இருப்பவர்.

898. अष्टाङ्गयोगफलभुः அஷ்டாங்கயோக பலபூ:

யமம், நியமம், ஆஸனம், ப்ராணுயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம், ஸமாதி என்ற எட்டு அங்கங்கள் கொண்ட யோகத்தின் பயனை அளிப்பவர்.

பிறரைத் துன்புறுத்தாதிருத்தல், உண்மை பேசுதல், திருடாமல் இருத்தல், எட்டுவிதமான புணர்ச்சியை ஒழித்தல், உயிருடன் வாழ்வதற்கு தேவையான பொருள்களுக்கு அதிகமான பொருளை அடையாதிருத்தல் இந்த ஐந்தும் யமம் எனப்படும். நீராலும் மண்ணுலும் உடலையும், விருப்பு, வெறுப்பு முதலிய குற்றங்களைத் தவிர்ப்பதனுல் உள்ளத்தையும், மாசுபடியாமல் செய்தல், எதிர்பாராமல் கிட்டிய பொருள்களைக் கொண்டு ஸந்தோஷத்துடன் இருத்தல், குளிர், சூடு, பசி, தாஹம் இவைகளைப் பொறுத்துக் கொள்ளுதல், ஒரு தெய்வத்தைக் குறிக்கும் மந்திரத்தை முறைப்படி ஜபித்தல், அம்மந்திரத்தின் பொருளான தெய்வத்தை உள்ளத்தில் உபாஸனை செய்தல் எனப்படும் இந்த ஐந்தும் நியமம் எனப்படும். அடிக்கடி உடலின் இருப்பை கலைக்காமலும், சிறிதும் சிரமத்தை அடையாமலும், தனது இஷ்டப்படி ஒரு இடத்தில் எதாவது ஒரு முறையில் உடலை இருக்கச் செய்வது ஆஸனம் எனப்படும். நாசித்வாரத்தின் வழியே வெளியிலுள்ள காற்றை உறிஞ்சுவது, உள்ளிருக்கும் காற்றை வெளியே தள்ளுவது என்ற முறையில் பயிற்சி பெற்று இயற்கையாக உடலினுள் காற்று அடக்கப் பட்டிருப்பதே ப்ராணுயாமம் எனப்படும். சப்தம், ஸ்பர்சம் முதலிய விஷயங்களுக்கு அலையாமல் புலன்களைத் தடுத்து உள்ளத்தில் இருக்கச் செய்வது ப்ரத்யாஹாரம் எனப்படும் வெளியிலுள்ள பொருளிலோ, உள்ளேயுள்ள பொருளிலோ திடமாக உள்ளத்தை இருத்தல் தாரணை எனப்படும். தீயில் தொடர்ச்சியாக ஹோமம் செய்யப்படுகின்ற நெய்யைப் போன்று ஒரு தெய்வத்தைப் பற்றிய உள்ளத்தின் நிலையானது, தொடர்ச்சியாக ஆவர்த்திக்கப்படுவது. தியானம் எனப்படும். அத்தெய்வத்தின் வடிவமாகவே உள்ளம் நிலைபெற்று உலகத்தையும் உடலையும் உணராது இருப்பதே ஸமாதி எனப்படும். இத்தகைய எட்டு விதமான யோகத்தினங்கங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு ஒப்புயர்வற்ற ஆனந்த ரூபமான பெரும் பயனை அளிப்பவர் என்பது கருத்து.

899. अष्टपत्राम्बुजासन: அஷ்டபத்ராம்புஜாஸன:
எட்டிதழ் தாமரைப் பூவில் அமர்ந்திருப்பவர்.

900. अष्टशक्तिसमृद्धश्री: அஷ்டசக்திஸம்ருத்தஸ்ரீ:
தான் வீற்றிருக்கும் தாமரை மலரிலுள்ள எட்டு இதழ்களிலும் இருப்பவர்களான தீவ்ரா, ஜ்வாலினீ' நந்தா, போகதா, காமதாயினீ உக்ரா, தேஜோவதீ, ஸத்யா என்ற எட்டு பீடசக்திகளால் சூழ்ந்திருந்து கொண்டு ஸேவிக்கப்படுகின்றவர்.

901. अष्टैश्वर्यप्रदायक: அஷ்டைச்வர்யப்ரதாயக:
போக வழியில் தன்னை வழிபடும் அடியார்களுக்கு அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம் என்ற எட்டு விதமான ஐச்வர்யங்களை அளிப்பவர்.

(அணிமா முதலியவைகளின் இலக்கணத்தை, 575 வது "भूतिद:" என்ற நாமாவின் உறையில் காண்க)

902. अष्टपीठोपपीठश्री: அஷ்டபீடோபபீடஸ்ரீ:
எட்டுவிதமான பெரிய பீடங்களையும், எட்டு விதமான சிறிய பீடங்களையும் தன்னுடைய திருவடியின் சேர்க்கையால் சோபை உள்ளதாகச் செய்பவர். (ஸ்ரீ கணேசருக்கு எண்ணிறந்ததும், பெரியதும், சிறியதுமான பீடங்கள் புராணங்களில் வருணிக்கப் பட்டிருக்கின்றன. அத்தகைய பீடங்களுள் எட்டு எண்ணங்கள் கொண்ட பீடம் ஸ்ரீ மஹாகணபதிக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதாகும் என்பது கருத்து)

903. अष्टमातृसमावृत: அஷ்டமாத்ருஸமாவ்ருத:
மஹாலக்ஷ்மியுடன் சேர்ந்து, ப்ராஹ்மீ முதலிய ஏழு மாதாக்கள் எட்டு மாதாக்களாகின்றனர். அத்தகைய எட்டு மாதாக்களால் சூழப் பட்டு பூஜிக்கப்படுகின்றவர்.

(ப்ராஹ்மீ முதலிய ஏழு மாதாக்களின் இலக்கணத்தை 893 வது सप्तमातृनिषेवित: என்ற நாமத்தின் உரையில் காண்க)

904. अष्टभैरवसेव्य: அஷ்டபைரவஸேவ்ய:
அஸிதாங்கன், ருரு, சண்டன், க்ரோதன், உன்மத்த பைரவன்,

பீஷணன், காபாலி, ஸம்ஹாரன் எனப்படும் எட்டுவிதமான பைரவா-களால் ஆதரவுடன் ஆராதனை செய்யப்படுகின்றவர்.

905. अष्टवसुवन्द्यः அஷ்டவஸுவந்த்ய:

தரன், த்ருவன், ஸோமன், அஹஸ், அநிலன், நலன், ப்ரத்யூஷன், ப்ரபாஸன் என்ற எட்டு வஸுக்களால் வணங்கப்படுகின்றவர்.

(வஸுக்களைப் பற்றி மஹாபாரதம் ஆதிபர்வம் காண்க.)

906. अष्टमूर्तिभृत् அஷ்டமூர்த்திப்ருத்

ஆகாயம் முதலிய ஐந்து பூதங்கள், ஸூர்யன், சந்திரன், புருஷன் என்ற எட்டு உருவங்களைத் தாங்கியிருப்பவர்.

907. अष्टचक्रस्फुरन्मूर्तिः அஷ்டசக்ரஸ்புரன்மூர்தி:

மனித உடலினுள் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை, ஸஹஸ்ராரம், குலாகுலம் என்ற எட்டு சக்ரங்களிலும் இருந்து கொண்டு ப்ரகாசிப்பவர்.

(अष्टचक्रा नवद्वारा देवानां पूः அஷ்டசக்ரா நவத்வாரா தேவாநாம் பூ என்ற வேதவசனம் இதற்குப் ப்ரமாணமாகும்)

908. अष्टद्रव्यहविःप्रियः அஷ்டத்ரவ்யஹவி:ப்ரிய:

தன்னை உத்தேசித்து நெய்யால் தூய்மைப் படுத்தி அக்நியில் ஹோமம் செய்யப்படும் நெல்பொரி, கரும்பு, அவல், மாவு, வாழைப் பழம், மோதகம், எள், தேங்காய் எனப்படும் எட்டு பொருள்களை மிகவும் ஸந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்பவர். [लाजेक्षु-सक्तु-चिपिट कदलयो मोदकास्तिलाः । नालिकेरा घृताक्ता इत्यष्टद्रव्यहविःप्रियः ॥ என்ற கத்யோதம் காண்க.]

909. नवनागासनाध्यासी நவநாகாஸநாத்யாஸீ

கார்கோடகம் முதலிய ஒன்பது பாம்புகளின், தலைகளால் தாங்கப் படும் எட்டிதழ் தாமரைப் பூவில் வீற்றிருப்பவர்.

910. नवनिध्यनुशासिता நவநித்யனுசாஸிதா

பத்மம், மஹாபத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், நீலம், கர்வம் என்ற ஒன்பது விதமான நிதிகளையும், அவைகளின் தலைவர்-களையும் அடக்கி ஆள்பவர்.

911. नवद्वारपुराधार: நவத்வாரபுராதார:

மனித உடலில் மேல் பாகத்தில், இரு கண்கள், இரு நாசிகள் இரு செவிகள், முகம் (வாய்) என்ற ஏழு த்வாரங்களும், கீழே உள்ள பாகத்தில் மலத்வாரம், மூத்திரத்வாரம் என்ற இரண்டு த்வாரங்களும் சேர்ந்து ஒன்பது த்வாரங்கள் இருக்கின்றன. ஒன்பது த்வாரங்கள் கொண்ட பட்டணம் போன்று இருக்கும் மனித உடலில் ஸ்ரீ கணேசர் ஜீவாத்மாவின் வடிவமாகப் பிரவேசித்து அதனை உயிர்வாழும்படி செய்து தாங்கிக் கொண்டிருக்கின்றார்,

912. नवाधारनिकेतन: நவாதாரநிகேதன:

மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா, ஸஹஸ்ராரம், குலாகுலம், லம்பிகா என்ற ஒன்பது இடங்களில் எப்பொழுதும் வஸிப்பவர்.

913. नवनारायणस्तुत्य: நவநாராயணஸ்துத்ய:

தர்மநாராயணர், ஞான நாராயணர், வைராக்ய நாராயணர், அனந்த நாராயணர், பத்ரீ நாராயணர், சங்கர நாராயணர், ஸுந்தர நாராயணர், லக்ஷ்மீ நாராயணர், ஸாத்ய நாராயணர் என்ற ஒன்பது நாராயணர்களால் துதி செய்யப்படுகின்றவர்.

914: नवदुर्गानिषेवित: நவதுர்காநிஷேவித:

சைலபுத்ரீ, பிரும்மசாரிணீ, சந்திரகண்டா, கூஷ்மாண்டா, ஸ்கந்தமாதா, காத்யாயனீ, காளராத்ரீ, மஹாகௌரீ, ஸித்திதா, என்று தேவீகவசத்தில் கூறப்படும் ஒன்பது துர்கைகளாலும் ஜயா, விஜயா, பத்ரா, பத்ரகாளீ, ஸுமுகீ, துர்முகீ, ப்ரஞா, வியாக்ரமுகீ, ஸிம்ஹமுகீ என்று மந்திர மஹார்ணவத்தில் கூறப்படும் ஒன்பது துர்கைகளாலும் பூஜித்து ஸேவிக்கப்படுகின்றவர்.

915. नवनाथमहानाथ: நவநாதமஹாநாத:

ஸ்ரீ கணேசரின் வழிபாட்டிற்கு வழிகாட்டிகளாக இருப்பவர்களான ஞானநந்தர், ப்ரகாசானந்தர், ஸத்யானந்தர், ஆனந்தானந்தர், விமர்சானந்தர், ஸ்வபாவானந்தர், ஸுபகாநந்தர், ப்ரதீபானந்தர், பூர்ணனந்தர் எனப்படும் ஒன்பது குருநாதர்களுக்கும் குருவாக இருப்பவர்.

916. नवनागविभूषण: நவநாகவிபூஷண:

கர்கோடகன் முதலான ஒன்பது ஸர்பங்களை ஆபரணங்களாக உடலில் அணிந்திருப்பவர்.

917. नवरत्नविचित्राङ्ग: நவரத்னவிசித்ராங்க:

வைடூரியம், முத்து, பவழம் முதலான ஒன்பது ரத்தினங்களால் செய்யப்பட்ட அணிகளால் அலங்கரிக்கப்பட்டவர்.

918. नवशक्तिशिरोधृत: நவசக்திசிரோத்ருத:

'தீவ்ரா' முதல் 'விக்னநாசினீ' முடிய ஒன்பது பீடசக்திகளால் பக்தியுடன் தங்கள் தலைகளால், ஸ்ரீ கணேசரின் திருவடிகளைத் தாங்கும் பீடத்தைச் சுமந்து ஸேவிக்கப்படுகின்றவர். (தீவ்ரை முதலிய சக்திகளைப் பற்றி 195 முதல் 203 முடிய ஒன்பது நாமாக்களின் உரையில் காண்க.)

919. दशात्मक: தசாத்மக:

பத்து திக்குகளையும் வியாபித்துக் கொண்டிருப்பதால் பத்து திசைகளின் வடிவமானவர்.

920. दशभुज: தசபுஜ:

பத்து கைகளை உடையவர். தன்னைக்குறித்துப் பத்து ஆண்டுகள் கடுந்தவம் புரிந்த பரமசிவனுடைய முகத்திலிருந்து ஸ்ரீ கணேசர் பத்து கைகளுடன் தோன்றினர் என்று கணேச புராணத்தில் உபாஸனா காண்டத்தில் 45 வது அத்யாயத்தில் கூறியிருப்பது கவனத்திற்குரியதாகும்.

921. दशदिक्पतिवन्दित: தசதிக்பதிவந்தித:

கிழக்கு முதலிய நான்கு திக்குகள், தென்கிழக்கு முதலிய நான்கு உபதிக்குகள், மேல், கீழ் என்ற பத்து திக்குகளுக்கு தலைவர்களான இந்திரன், அக்னி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், அனந்தன், நான்முகன் ஆகிய பத்து தேவர்களால் வணங்கப்படுபவர்.

922. दशाध्याय: தசாத்யாய:

ருக், யஜுஸ், ஸாம, அதர்வம் என்ற நான்கு வேதங்கள், சிக்ஷை, கல்பம், வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம் என்று

ஆறு அங்க சாஸ்திரங்கள் ஆகிய பத்து பிரமாண நூல்களையும் முறைப்படி படித்தறிந்திருப்பவர்.

923. दशप्राण: தசப்ராண:

ப்ராணன் (உயிர் வாழும்படி செய்யும் வாயு), அபானன் (ஜலமலங்களை வெளியில் தள்ளும் வாயு), வ்யானன் (ரத்தங்களை எல்லா நரம்புகளிலும் பரவும்படி செய்யும் வாயு), உதானன் (மரண வேளையில் ஜீவனை உயரே இழுத்துச் செல்லும் வாயு), ஸமானன் (உட்கொண்ட உணவை பாகம் செய்யும் வாயு) என்ற ஐந்து ப்ராணங்கள், நாகன் (ஏப்பத்தை ஏற்படுத்தும் வாயு), கூர்மன் (இமைக் கொட்டலைச் செய்யும் வாயு), க்ருகரன் (தும்மலையும் கொட்டாவியையும் தரும் வாயு), தேவதத்தன் (குறட்டையுடன் கூடிய தூக்கத்தையும், உடலை முறிக்கும் சோம்பலையும் கொடுக்கும் வாயு, தனஞ்ஜயன் (இறந்த உடலைப் பருமனாகச் செய்யும் வாயு என்ற ஐந்து உபப்ராணங்கள் எனப்படும் பத்து ப்ராணங்களின் வடிவமானவர்.

924. दशेन्द्रियनियामक: தசேந்த்ரியநியாமக:

கண், காது, மூக்கு, நாக்கு, த்வக் (தோலில் இருக்கும் ஸ்பர்சத்தை உணரும் சக்தி), என்ற ஞானேந்திரியங்கள் ஐந்து, வாக், கை, கால், பாயு (மலத்வாரத்தில் உள்ள இந்திரியம்), உபஸ்தம் (ரஹஸ்யேந்திரியம்) என்ற கர்மேந்திரியங்கள் ஐந்து எனப் பத்து புலன்களையும், பார்த்தல், கேட்டல், முதலான தத்தம் புலனுக்கு உரிய செயல்களைச் சரிவரச் செய்யும்படிக் கவனித்துக் கொள்பவர்.

925. दशाक्षरमहामन्त्र: தசாக்ஷரமஹாமந்த்ர:

**ओं हस्तिपिशाचिलिखे स्वाहा** ஓம், ஹ, ஸ்தி, பி, சா, சி, லி, கே, ஸ்வா, ஹா, என்ற பத்து எழுத்து கொண்டதும், பெருமை வாய்ந்ததும் ஆன மந்திரத்தின் பொருளாகவும் தெய்வமாகவும் இருப்பவர்.

926. दशाशाव्यापिविग्रह: தசாசாவ்யாபிவிக்ரஹ:

பத்து திக்குகளிலும் நிறைந்திருக்கும் விராட்ரூபத்தை (உலகங்களின் வடிவமாக இருக்கும் உடலை) அடைந்தவர்.

927. एकादशादिभि: रुद्रै: स्तुत: ஏகாதசாதிபி: ருத்ரை: ஸ்துத:

மிகவும் பிரதானமாய் இருப்பவர்களான ஹர:, பஹுரூப,: த்ரியம்பக:, அபராஜித:, வ்ருஷாகபி:, சம்பு:, கபர்தீ, ரைவத:,

ம்ருகவ்யாத:, சர்வ:, கபாலி என்ற பதினொன்று ருத்ரர்களை முன்னிட்ட கோடிக்கணக்கான ருத்ரர்களால் புகழ்ந்து பாடப்பட்டவர்.

928. एकादशाक्षर: ஏகாதசாக்ஷர:

ओं ह्लीं, गं ह्लीं वशमानय स्वाहा ஓம் ஹ்ரீம் கம் ஹ்ரீம் வசமானய ஸ்வாஹா என்ற பதினொன்று எழுத்துக்கள் கொண்ட மந்திரத்தின் வடிவனாகவும், அதன் தேவதையாகவும் இருப்பவர்.

929. द्वादशोद्दण्डदोर्दण्ड: த்வாதசோத்தண்டதோர்தண்ட:

நீண்டு, உருண்டு, பருத்து, நெருக்கமாக உள்ள பன்னிரண்டு கைகளை உடையவர்.

930. द्वादशान्तनिकेतन: த்வாதசாந்தநிகேதன:

மனித உடலினுள் நெற்றிப்பிரதேசத்திற்கு மேல் தலையின் நடுவே இருக்கும் ப்ருஹ்மரந்த்ரம் வரை உள்ள இடத்தில் த்வாதசாந்தத்தில் யோகிகளுக்குத் தரிசனம் அளித்துக் கொண்டு இருப்பவர்

931. त्रयोदशाभिधाभिन्नविश्वेदेवाधिदैवतम्

த்ரயோதசாபிதாபிந்நவிச்வேதேவாதிதைவதம்

புரூரவஸ், ஆர்த்ரவஸ், துரிருசி, க்ரது, தக்ஷ:, ச்ரவ:, ஸத்ய:, கால:, காம:, துனி:, குருவான், ப்ரபவான், ரோசமான:, என்ற வெவ்வேறான பெயர் கொண்ட பதிமூன்று விச்வே தேவர்கள் எனப் படும் தேவர்களாலும் பூஜிக்கப்படுகின்றவர்.

(விச்வேதேவர்கள், கச்யபமுனிவருக்கு விச்வை என்பவளிடம் புதல்வர்களாகத் தோன்றியவர்கள், இவர்களுக்கு மக்கட்பேறு இல்லை. மறைகள் வகுத்த முறைப்படி வாழ்க்கை நடத்தும் அந்தணர்-களால் நாள்தோறும் 'வைச்வதேவம்' என்ற சடங்கிலும், ச்ராத்தங்க-ளிலும் இவர்கள் பூஜிக்கப்படுகின்றார்கள். விச்வேதேவர்களைப் பற்றி வாயு புராணம், விஷ்ணு புராணம், பாகவதம் இவைகளில் காண்க.)

932. चतुर्दशेन्द्रवरद: சதுர்தசேந்த்ரவரத:

பிரம்மதேவருடைய ஒவ்வொரு நாளிலும் பகலில் அவரால் படைக்கப்பட்ட மூன்று உலகங்களையும் காப்பாற்றுவதற்கு யக்ஞ:, ரோசன:, ஸ்த்யஜித், த்ரிசிக:, விபு:, மந்த்ரத்ரும:, புரந்தர:, பலி:, அத்புத:, சம்பு:, வைத்ருத:, ருததாமா, ஸுத்ராமா, சுசி: என்ற

பதினன்கு இந்த்ரர்கள் தோன்றுகிறுர்கள். அவ்விந்திராகளுக்கு அவரவர்களுடைய தொழிலில் திறம்படச் செயல் புரிவதற்கான வேண்டிய வரங்களை அளிப்பவர். (பதினன்கு இந்த்ரர்களைப் பற்றி பாகவதம் 4 வதும் 8 வதும் ஸ்கந்தங்களைப் பார்க்க]

933. चतुर्दशमनुप्रभुः சதுர்தசமனுப்ரபு:

பிரும்ம தேவனுடைய ஒவ்வொரு நாளிலும் பகலில் உலகங்கள் அனைத்தையும் காப்பாற்றுவதற்காக ஸ்வாயம்புவர், ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர், ரைவதர், சாக்ஷுஷர், வைவஸ்வதர், ஸாவர்ணி, தக்ஷஸாவர்ணி, ப்ருஹ்மஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ருத்ரஸாவர்ணி, தேவ ஸாவர்ணி, இந்த்ரஸாவர்ணி என்ற பதினன்கு மனுக்கள் தோன்றுகின்றனர். இந்த மனுக்களுக்குத் தலைவராக இருப்பவர். (ஒரு மனு எழுபத்து ஒன்று சதுர்யுகங்கள் காலம் உலகத்தைக் காப்பாற்றுகின்றுர்) மனுக்களைப் பற்றி பாகவத புராணம் பார்க்க.)

934. चतुर्दशादिविद्याढ्यः சதுர்தசாதிவித்யாட்ய:

ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் என்ற நான்கு வேதங்கள், சிக்ஷை, கல்பம், வ்யாகரணம், சந்தஸ், ஜ்யோதிஷம், நிருக்தம் எனப்படும் ஆறு அங்க சாஸ்திரங்கள், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்த சாஸ்திரம் என்ற நான்கு உபவேதங்கள் எனப் பதினன்கு வித்தைகளுடனும், இத்துடன் தர்ம சாஸ்திரம், ந்யாய சாஸ்திரம், மீமாம்ஸை, இதிஹாஸ புராணம் என்ற நான்கும் சேர்ந்து ஏற்பட்ட பதினெட்டு வித்யை-களுடனும் எப்பொழுதும் சேர்ந்திருப்பவர்.

935. चतुर्दशजगत्प्रभुः சதுர்தசஜகத்ப்ரபு:

ஸத்யம், தபஸ், ஜன:, மஹ:, ஸுவ:, புவ:, பூ:, அதலம், விதலம், ஸுதலம், மஹாதலம், தலாதலம், ரஸாதலம், பாதாளம் என்ற பதினன்கு உலகங்களுக்கும் இணையற்ற ஒரே தலைவனுக இருப்பவர்.

936. सामपञ्चदशः ஸாமபஞ்சதச:

யாகங்களில் ஹோமம் செய்யப்படும் பொருட்களுள் மிகவும் ஒப்புயர்வற்றதாகக் கருதப்படும் நெய் என்ற பொருளைத் துதி செய்பவைகளும், 'ஸ்தோத்ர சதுஷ்டயம்', 'பஞ்சதச ஸ்தோத்ரம்' என்று வழங்கப்படுபவைகளுமான நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட பதினைந்து ஸாம மந்திரங்களாக இருப்பவர்.

937. पञ्चदशीशीतांशुनिर्मल: பஞ்சதசீசீதாம்சுநிர்மல:

வளர்பிறையில் பதினைந்தாவது திதியான ராகா எனப்படும் பௌர்ணமியில் பூர்ணமாக பிரகாசிக்கும் சந்திரனைப் போன்று மாசற்ற சோபையுடன் விளங்குபவர்.

938. षोडशाधारनिलय: ஷோடசாதாரநிலய:

யோகவழியில் ஸ்ரீ கணேசரை வழிபடும் சிறந்த பக்தர்களுக்குப் பதினாறு சக்ரங்களில் இருந்து கொண்டு தரிசனம் அளித்து அவர்களை அனுக்ரஹிப்பவர்.

(பதினாறு ஆதாரம், ஆறு ஆதாரம், ஒன்பது ஆதாரம் இவைகளின் இலக்கணங்களை முறைப்படி குருமுகமாகக் கேட்டுத் தெளிவு பெற வேண்டும் என்று தந்திர நூலில் சிவபெருமானால் எச்சரிக்கப் பட்டிருப்பது கவனத்திற்குரியதாகும்.)

939. षोडशस्वरमातृक: ஷோடசஸ்வரமாத்ருக:

அ முதல் அ: என்ற விஸர்கம் முடிய பதினாறு உயிரெழுத்துக்களின் இலக்கணத்தையும், பெருமையையும் ப்ரமாணங்களைக் கொண்டு நன்கு அளவிட்டு அறிந்திருப்பவர்.

940. षोडशान्तपदावास: ஷோடசாந்தபதாவாஸ:

மனிதனுடைய உடலில் தலையில் ப்ரும்ஹரந்த்ரத்தில் இருக்கும் ஆயிரம் இதழ் கொண்ட ஸஹஸ்ரார தாமரைப் பூவிற்கு மேலே உள்ள இடம் ஷோடசாந்தம் எனப்படும். ஸ்ரீ கணேசர் அத்தகைய ஷோடசாந்தஸ்தானத்தில் யோகிகளான உபாஸகர்களை அனுக்ரஹித்துக் கொண்டு விளங்குகிறார்.

941. षोडशेन्दुकलात्मक: ஷோடசேந்துகலாத்மக:

அம்ருதா, மானதா, பூஷா, துஷ்டி, புஷ்டி, ரதி, த்ருதி, சசினீ, சந்த்ரிகா, காந்தி, ஜ்யோத்ஸ்னா, ஸ்ரீ, ப்ரீதி, அங்கதா, பூர்ணா, பூர்ணாம்ருதா, என்ற பதினாறு சந்திர கலைகளின் வடிவமாக இருப்பவர்.

942. कलासप्तदशी கலாஸப்ததசீ

"ஸப்ததசீ (பதினேழாவது) கலை" எனப்படும் பதினேழு எழுத்துக்கள், கொண்ட துர்ய வித்யையின் வடிவமாக இருப்பவர்.

(த்ரிபுராகமம் என்ற நூலில் துர்யவித்யை எனப்படும் பதிமூன்று அக்ஷரங்கள் கொண்ட தேவீ மந்திரம், 'ஸப்ததசீ கலா' என்று புகழ்ந்து கூறப்பட்டிருக்கின்றது. அத்தகைய ஸப்ததசீ கலா வடிவமாய் இருப்பவர். [कला सप्तदशी नाम प्रसिद्धा त्रिपुरागमे । त्रयोदशाक्षरी तुर्यविद्याख्या त्वं तदात्मकः ॥ खद्योतम् பார்க்கவும்.]

943. सप्तदशः ஸப்ததச:

நான்கு பிரிவுகளை உடைய ப்ருஷ்டஸ்தோத்திரத்தைச் சார்ந்த ஸப்ததச ஸ்த்தோத்ரம் எனப்படும் பதினேழு ஸாம மந்திரங்களாக இருப்பவர்.

944. सप्तदशाक्षरः ஸப்ததசாக்ஷர:

யாகங்கள் நடைபெறும்போது ருத்விக்குகளால் உரைக்கப்படும் वौषट् வௌ,ஷட், आश्रावय ஆ, ச்ரா, வ, ய, यज ய, ஜ, अस्तु அ,ஸ்து, श्रौषट् ச்ரௌ, ஷட், येयजामहे யே, ய, ஜா, ம, ஹே, என்ற பதினேழு எழுத்துக்களைச் செவியுற்றவுடனேயே யாகங்களில் ப்ரஸன்னமாகி விடுகின்றவர்.

945. अष्टादशद्वीपपतिः அஷ்டாதசத்வீபபதி:

ஜம்பு, ப்லக்ஷம், சால்மலீ, குசம், க்ரௌஞ்சம், சாகம், புஷ்கரம், என்ற ஏழு பெரிய தீவுகள், லங்கை, ஸிம்ஹளம் முதலான பதினொன்று சிறிய தீவுகள் எனப் பதினெட்டு தீவுகளுக்குத் தலைவனாக இருந்து அவைகளைக் காப்பாற்றுகின்றவர்.

946. अष्टादशपुराणकृत् அஷ்டாதசபுராணக்ருத்

ப்ராஹ்மம், பாத்மம், வைஷ்ணவம், சைவம், பாகவதம்; நாரதம், மார்கண்டேயம், ஆக்நேயம், பவிஷ்யம், ப்ரஹ்மவைவர்தம், லிங்கம், வராஹம், ஸ்காந்தம், வாமனம், கௌர்மம், மத்ஸ்யம், காருடம், ப்ரஹ்மாண்டம் என்ற பதினெட்டு மஹாபுராணங்களை இயற்றியவர்.

947. अष्टादशौषधीसृष्टिः அஷ்டாதசௌஷதீஸ்ருஷ்டி:

பதினெட்டு விதமான நெல், கோதுமை, உளுந்து, பயரு முதலிய தான்யங்களைக் கொடுக்கும் ஓஷதிகளைப் (மரம், செடி, முதலியவைகளை) படைத்தவர்

(இவ்வுலகில் உயிரினங்களுக்கு வாழ்வதற்குத் தேவைப்படும் தான்யங்களுள் மிகவும் முக்கியமான தான்யங்கள் பன்னிரண்டு விதமாக இருக்கின்றன. உபதானியங்கள் ஆறு விதமாய் உள்ளன என்று முனிவர்கள் கூறுகின்றனர். இந்த பதினெட்டுவிதமான தான்யங்களைத் தரும் ஓஷதிகளை ஸ்ரீ கணேசர் படைத்துள்ளார் என்று இங்கு கூறப்பட்டிருக்கிறது. பலனை அளித்தவுடன் மடிந்து-விடும் செடி, மரம் முதலியவை ஓஷதி எனப்படும். உதாரணமாக நெல், பயிர், வாழை போன்றவை ஓஷதிகளாகும்.)

948. अष्टादशविधिःस्मृतः அஷ்டாதசவிதி: ஸ்ம்ருத:

மாந்தர்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் நலத்தை அளிக்கின்ற பலவிதமான தர்மங்களைச் செய்வதற்கு வேதத்தால் கூறப்படும் பதினெட்டு விதமான விதியின் (ஆணையின்) ஸ்வரூப-மாக இருப்பவர்.

வேதத்தால் அன்றி வேறு முறையில் அறிவதற்கு முடியாத ஒரு காரியத்தைச் செய்யும்படி கூறும் சொல் அபூர்வ விதி எனப்படும் உதாரணமாக ஜ்யோதிஷ்டோம யாகத்தை ஸ்வர்க்கத்தில் விருப்பம் உள்ளவன் செய்யவேண்டும். "ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत ஜ்யோ-திஷ்டோமேன ஸ்வர்ககாமோ யஜேத". என்று வேதத்தில் கூறி-யிருக்கிறது. ஜ்யோதிஷ்டோம யாகம் ஸ்வர்கத்திற்குக் காரணம் என்பது வேதமின்றி வேறு ப்ரமாணத்தால் அறிய முடியாததாகும்.

ஒரு கார்யத்தை இரண்டு விதமாகச் செய்ய முடியும் என்று இருப்பினும் அதை ஏதேனும் ஒரு முறையில் செய்யும்படி வற்புறுத்தும் சொல் நியமவிதி எனப்படும். உதாரணமாக, ஹோமத்திற்கான அரிசியை நகத்தால் நெல்லின் தோலியை அகற்றியும் பெறலாம்; உரலில் நெல்லை இட்டு உலக்கையால் குத்தித் தோலியை அகற்றியும் பெறலாம் என்று இருப்பினும் உரலில் நெல்லை இட்டு உலக்கையால் குத்தி தோலியை அகற்றி அரிசியைப் பெறவேண்டும். व्रीहीनवहन्ति வ்ரீஹீநவஹந்தி என்று வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இது நியமவிதியாகும்.

எண்ணிறந்த கார்யங்களைச் செய்யலாம், செய்யமுடியும் என்ற நிலையில் வரம்பு மீறிச் செயல் புரிய முற்படும்போது எண்ணங்களைத்

திட்டப்படுத்திச் செய்யும்படி கூறும் சொல் பரிஸங்க்யாவிதி எனப்படும். உதாரணமாக, த்ரேதாயுகத்தில் புலாலை உட்கொள்ளும் ப்ராம்ஹணன், அரசன் இவர்களுக்கு ஐந்து நகங்கள் உள்ள விலங்குகள் அனைத்தினுடையவும் புலாலை புசிக்கலாமெனினும் சல்யகம், ச்வாவிதம், உடும்பு, முயல், ஆமை என்ற ஐந்து நகம் உள்ள இந்த ஐந்து விலங்குகளின் புலாலையே புசித்தல் வேண்டும் என்று கூறுவது பரிஸங்க்யா விதியாகும்.

पञ्च पञ्चनखा भक्ष्या ब्रह्मक्षत्रेण राघव ।
शल्यकः श्वाविधः गोधा शशः कूर्मश्च पञ्चमः ॥

பஞ்ச பஞ்சநகா பக்ஷ்யா ப்ரஹ்மக்ஷத்ரேண ராகவ ।
சல்யக: ச்வாவித: கோதா சச: கூர்மச்ச பஞ்சம: ।

என்ற வால்மீகி ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம் 17 வது ஸர்கத்திலுள்ள வசனம் இதற்குப் பிரமாணமாகும்.

இங்ஙனம் அபூர்வவிதி, நியமவிதி, பரிஸங்க்யாவிதி என்று மூன்று விதிகள் உள்ளன. இவைகள் ஒவ்வொன்றும் தனித்தனியே ப்ரயோக விதி, விநியோக விதி, நாமதேய விதி என்ற மூன்று உட்பிரிவுகளுடன் சேர்ந்து ஒன்பது விதிகளாகின்றன. அத்தகைய ஒன்பது விதிகளும், ஒவ்வொன்றிற்கும் தனித் தனியாக, முக்கியம் (ப்ரதானம்), அமுக்யம் (குணம்) என்ற இரண்டு பிரிவுகளை அடைந்து பதினெட்டு விதிகளாகின்றன. அத்தகைய விதிகளாக இருக்கின்றவர். (விதிகளின் விவரத்தை மீமாம்ஸா ந்யாயப்ரகாசத்தில் காண்க.)

949. अष्टादशलिपिव्यष्टिसमष्टि ज्ञान कोविदः

அஷ்டாதசலிபிவ்யஷ்டிஸமஷ்டிஞானகோவித:

தேவநாகரம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மராட்டி, குஜராத்தி, வங்காளி, ஹிந்துஸ்தானி, மலையாளம் முதலிய மொழிகளை எழுதுவதற்கான பதினெட்டு முக்கியமான எழுத்துக்களையும், நாடுகளின் வேறுபாட்டால் பலவித உட்பிரிவுகளுடன் கூடிய வெவ்வேறான எழுத்துக்களையும் நேர்மையாக அறிந்திருப்பவா.

950. एकविंशः पुमान् ஏகவிம்ச: புமான்

ஐதரேய ஆரண்யகத்தில் கூறியபடி இருபத்து ஒன்றாவது புருஷராக இருப்பவர்.

மனித உடலில் இரண்டு கைகளில் உள்ள விரல்கள் பத்தும், இரண்டு கால்களில் உள்ள விரல்கள் பத்தும், ஆத்மாவையும் சேர்த்து புருஷன் இருபத்து ஓராவது ஆவான். 'दश हस्त्या अङ्गुलयः दश पद्या आत्मैकविंशः தச ஹஸ்த்யா அங்குலய: தச பத்யா ஆத்மைகவிம்ச; என்று ஐதரேயாரண்யகம் முதலாவது அத்யாயம், நான்காவது கண்டம் கூறுகின்றது.

951. एकविंशत्यङ्गुलिपल्लवः ஏகவிம்சத்யங்குலிபல்லவ:
தளிர்போன்ற இருபத்து ஒன்று விரல்களை உடையவர்.

கைகால்களில் உள்ள விரல்கள் ஒன்று சேர்ந்து இருபதாகும். துகிக்கையின் நுனியையும் ஒரு விரலாகச் சேர்த்து இருபத்து ஒன்று விரல்கள் என்று கூறப்பட்டிருக்கின்றது.

952. चतुर्विंशतितत्त्वात्मा சதுர்விம்சதிதத்வாத்மா
மூலப்பிரக்ருதி, மஹத்தத்வம், அஹங்காரம், தன்மாத்திரைகள் ஐந்து, ஆகாயம் முதலான பூதங்கள் ஐந்து, கண் முதலான ஞானேந்திரியங்கள் ஐந்து, கை முதலிய கர்மேந்திரியங்கள் ஐந்து, மனம் ஒன்று ஆகிய இருபத்து நான்கு தத்வங்களின் வடிவமாக இருப்பவர்

953. पञ्चविंशाख्यपुरुषः பஞ்சவிம்சாக்யபுருஷ:
ஸாங்க்யர்களால் இருபத்தைந்தாவது தத்வமாகக் கூறப்பட்ட புருஷனுகவும் இருப்பவர்.

954. सप्तविंशतितारेशः ஸப்தவிம்சதிதாரேச:
அச்வினி, பரணி, கார்த்திகை, ரோஹிணி, மிருகசீர்ஷம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்தரம், ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்தராடம், திருவோணம், அவிட்டம், சதயம், புரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி என்ற இருபத்தேழு நக்ஷத்திரங்களுக்குத் தலைவராக இருப்பவர்.

955. सप्तविंशतियोगकृत् ஸப்தவிம்சதியோகக்ருத்
விஷ்கம்பம், ப்ரீதி, ஆயுஷ்மான், ஸௌபாக்யம், சோபனம், அதிகண்டம், சுகர்மம், திருதி, சூலம், கண்டம், விருத்தி, துருவம்,

வ்யாகாதம், ஹர்ஷணம், வஜ்ரம், ஸித்தி, வ்யதீபாதம், வரீயான், பரிகம், சிவம், சித்தம், சாத்யம், சுபம், சுப்ரம், ப்ராம்யம், மகேந்த்ரம், வைதிருதி எனப்படும் இருபத்து ஏழு யோகங்களைப் படைத்தவர்.

956. द्वात्रिंशद्भैरवाधीश: த்வாத்ரிம்சத்பைரவாதீச:

எட்டு எட்டாகப் பிரிந்து நான்கு கூட்டங்களாக இருக்கும் அஸிதாங்கன் முதலான முப்பத்திரண்டு பைரவர்களுக்குத் தலைவராக இருப்பவர்.

957. चतुस्त्रिंशन्महाह्रद: சதுஸ்த்ரிம்சன்மஹாஹ்ரத:

காண்பவர்களுக்கும், நீர்த்துளிகளை உடலில் தெளித்துக் கொள்பவர்களுக்கும், நீராடுபவர்களுக்கும் பாவத்தைப் போக்கிப் புண்ணியத்தைத் தருபவைகளும், தெய்வங்களால் கொண்டாடப் பட்டவைகளுமான புஷ்கரம் முதலான முப்பத்து நான்கு புண்ணிய தீர்த்தங்களின் உருவமாக இருப்பவர்.

958. षट्त्रिंशत्तत्वसम्भूति: ஷட்த்ரிம்சத்தத்வஸம்பூதி:

சிவன் முதல் பூமி வரை முப்பத்தி ஆறு தத்வங்கள் என்று சைவாகம நூலால் கணக்கிடப்பட்ட தத்வங்களுக்குக் காரணமாக இருப்பவர்.

959. अष्टात्रिंशत्कलातनु: அஷ்டாத்ரிம்சத்கலாதனு:

தூம்ரார்சீ, ஊஷ்மா, ஜ்வலினீ, ஜ்வாலினீ, விஸ்புலிங்கினீ, ஸுஸ்ரீகலா, ஸுரூபா, கபிலா, ஹவ்யவாஹினீ, கவ்யவாஹினீ என்று அக்நிக்கு பத்து கலைகள் இருக்கின்றன. தாபினீ, தூம்ரா, மரீசி, ஜ்வாலினீ, ருசி, ஸுஷும்ந, போகதா, விச்வா, போதினீ, தாரிணீ, க்ஷமா என்று ஸூர்யனுக்குப் பன்னிரண்டு கலைகள் இருக்கின்றன. அம்ருதா, மானதா, பூஷா, துஷ்டி, புஷ்டி, ரதி, த்ருதி, சசினீ, சந்த்ரிகா, காந்தி, ஜ்யோத்ஸ்ந, ஸ்ரீ, ப்ரீதி, அங்கதா, பூர்ண, பூர்ணம்ருதா என்று சந்திரனுக்குப் பதினாறு கலைகள் இருக்கின்றன. இத்தகைய முப்பத்தெட்டு கலைகளின் வடிவமானவர்.

960. नमदेकोनपञ्चाशन्मरुद्वर्गनिरर्गल:

நமதேகோநபஞ்சாசந்மருத்வர்கநிரர்கல:

ஸத்வஜ்யோதி, ஆதித்ய:, ஸத்யஜ்யோதி, திர்யக்ஜ்யோதி, ஸஜயோதி, ஜ்யோதிஷ்மான், ஹரித:, ருதஜித், ஸத்யஜித், ஸுஷேண:,

ஸேனஜித், ஸத்யமித்ர:, அபிமித்ர:, ஹரிமுத்ர:, க்ருத:, ஸத்ய:, த்ருவ:, தர்தா, விதர்தா, விதாரய,: த்வாந்த, துனி, உக்ர:, பீம:, அபீயு, ஸாக்ஷிப, ஈத்ருக், அந்யாத்ருக், யாத்ருக், ப்ரதிக்ருத், ருக், ஸமித:, ஸம்ரம்ப:, ஈத்ருக்ஷ:, புருஷ:, அந்யாத்ருக்ஷ:, சேதஸ:, ஸமிதா, ஸமித்ருக்ஷ:, ப்ரதித்ருக்ஷ:, மாருதி:, ஸரத:, தேவ:, திச், யஜுஸ், அநுத்ருக், ஸாம, மானுஷ, விச் என்ற நாற்பத்து ஒன்பது மருத்துகள் எனப்படும் காற்று வடிவர்களான தேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டவர். அத்தகைய காற்றுக்களால் யாதொரு தடையும் இன்றி எங்கும் செல்பவர். (மருத்துக்களைப்பற்றி வாயு புராணம் காண்க.)

961. पञ्चाशदक्षरश्रेणी பஞ்சாசதக்ஷரச்ரேணீ

அ முதல் க்ஷ வரை உள்ள ஐம்பது அக்ஷரங்களின் வரிசை வடிவமானவர்.

962. पञ्चाशद्रुद्रविग्रह: பஞ்சாசத்ருத்ரவிக்ரஹ:

ஸ்ரீ கண்டன் முதல் சிவன் வரை கணக்கிடப்பட்ட ஐம்பது ருத்ரர்களின் உருவமானவர்.

963. पञ्चाशद्विष्णुशक्तीश: பஞ்சாசத்விஷ்ணுசக்தீச:

கீர்தி முதலான சக்திகளுடன் சேர்ந்தவர்களான கேசவன் முதலிய ஐம்பது விஷ்ணுக்களுக்கு ப்ரபுவாக (தலைவனாக) இருப்பவர்.

964. पञ्चाशन्मातृकालय: பஞ்சாசன்மாத்ருகாலய:

அ முதல் க்ஷ வரையுள்ள ஐம்பது மாத்ருகாக்ஷரங்களுடைய தோற்றத்திற்கும், இருப்பிற்கும், மறைவிற்கும், நாதரூபமான தன்னை இருப்பிடமாகச் செய்து கொண்டவர்.

965. द्विपञ्चाशद्वपु:श्रेणी த்விபஞ்சாசத்வபு:ச்ரேணீ

லிங்க புராணத்தில், பசுபதியின் திருவருளால், ஸம்ஸாரமாகிய தளைகளிலிருந்து பசுக்களான ஜீவர்களை விடுதலை செய்யும் திறமை வாய்ந்தவைகளாக வருணிக்கப்படும் ஐம்பத்திரண்டு பாசங்களிலிருந்து தோன்றிய ஐம்பத்திரண்டு விதமான உடல்களின் வரிசையாக இருப்பவர்.

966. त्रिषष्ट्यक्षरसंश्रयः த்ரிஷஷ்ட்யக்ஷரஸம்ச்ரய:

பாசுபத மதத்தில் வர்ணிக்கப்படும் அறுபத்து மூன்று அக்ஷரங்களுக்கு இருப்பிடமானவர்

967. चतुःषष्ट्यर्णनिर्णेता சதுःஷஷ்டயர்ணநிர்ணேதா

பாசுபதமதத்தில் அக்ஷரங்கள் அறுபத்து நான்கு என்று தீர்மானித்தவர்.

பாசுபத மதத்தில் அக்ஷரங்கள் அறுபத்து மூன்று, அறுபத்து நான்கு என்ற இரண்டு கொள்கைகள் கூறப்படுகின்றன. இரண்டு விதமான கொள்கையிலும், ஸ்ரீ கணேசர் அந்தந்த அக்ஷரங்களின் வடிவமானவர் என்பது கருத்து.

968. चतुःषष्टिकलानिधिः சதுःஷஷ்டிகலாநிதி:

பாசுபத மதத்தில் மிகவும் புகழ்பெற்றவைகளான அறுபத்து-நான்கு கலைகளுக்கு இருப்பிடமானவர். பாசுபதமதத்தில் கூறப்பட்டிருக்கும் அறுபத்து நான்கு கலைகள் பின்வருமாறு:—

(1) गीतम् கீதம் (வாய்ப்பாட்டு), (2) वाद्यम् வாத்யம் (வீணை, புல்லாங்குழல், கோட்டு வாத்யம், மிருதங்கம் முதலியவற்றை வாசித்தல்) (3) नृत्यम् ந்ருத்யம் (பெண்களின் அபிநயம்) (4) नाट्यम् நாட்யம் (ஆண்களின் அபிநயம்) (5) आलेख्यम् ஆலேக்யம் (தெய்வம் முதலிய உருவங்களை எழுதுதல்) (6) विशेषकच्छेद्यम् விசேஷகச்சேத்யம் (யானை, மாடு முதலிய விலங்கினத்தின் கொம்புகளிலும் மரத்திலும் தெய்வம் முதலியவைகளின் உருவங்களை செதுக்கி எடுத்தல் (7) तण्डुलकुसुमबलिविकाराः தண்டுலகுஸுமபலிவிகாரா; (அரிசி, பூக்கள் இவைகளால் பலி, பூஜை செய்வதில் பலவிதமான விநோதமான முறைகள்) (8) पुष्पास्तरणम् புஷ்பாஸ்தரணம் (பலநிறமுள்ள மலர்களைப் பலவிதமான உருவங்களில் அமைத்துக் கோலமிடுதல்) (9) दशनवसनाङ्गरागाः தசனவஸநாங்கராகா: (உதடுகளுக்குப் பலவிதமான வர்ணக்குழம்புகளின் பூச்சால் அழகு படுத்தல்) (10) मणिभूमिकाकर्म மணிபூமிகாகர்ம (இரத்தினங்களை இழைத்து மாளிகையை நிர்மித்தல்) (11) शयनरचनम् சயனரசனம் (எண்ணிறந்த முறைகளில், படுப்பதற்கான தந்தம் மரம் இவைகளாலான கட்டில்கள், கோரை முதலிய

புற்களாலான பாய் வகைகள், இலவம் பஞ்சு அடைத்த திண்டு, தலையணை, மெத்தை, மேல்விரிப்பு முதலியவைகளைச் செய்தல்) (12) उदकवाद्यमुदकघात: உதகவாத்யமுதககாத: (ஜலதரங்கவாத்யம் வாசித்தல், உயர்ந்த இடத்திலிருந்து ஆற்றிலோ, குளத்திலோ குதித்து அங்குள்ள நீரை உயரே கிளம்பும்படி செய்தல் (13) चित्रयोगा: சித்ரயோகா: (பலவகையான பொருள்கள் நிறைந்த கடல், காடு, மலை, நகரம், கடைவீதி, ஸபை போன்றவைகளை நாடகத்திற்குத் தேவையான திரைகளின் துணிகளில் சித்திரமாக வரைதல் (14) माल्यग्रथनविकल्पा: மால்யகரதனவிகல்பா: (விதவிதமான நிறமும் மணமும் சேர்ந்த மலர்களைக் கொண்டு எண்ணிறந்த வடிவமுள்ள மாலைகளைக் கட்டுதல்) (15) शेखरापीडयोजनम् சேகராபீடயோஜனம் (தலைக்கு அழகு செய்ய முடிகளையும், அதனில் சேர்க்கப்படும் ஆபரணங்களையும், மலர்களையும் பல்வேறான முறைகளில் அமைத்து அலங்கரித்தல்) (16) नेपथ्ययोगा: நேபத்யயோகா: (நாடகங்களில் அரசன், மந்திரி, விதூஷகன், ராணி, முனிவர் முதலிய பாத்திரங்களுக்குத் தகுந்த ஆடை, அணி முதலியவற்றால் வேஷங்களைப் போட்டு விடுதல் (17) कर्णपत्रभङ्गा: கர்ணபத்ரபங்கா: (பலவிதமான அழகுள்ள ஆபரணங்களால் காதுகளை அழகுபடுத்துதல் (18) सुगन्धयुक्तिः ஸுகந்தயுக்தி; (பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ, அத்தர், ஜவ்வாது முதலிய வாஸனைப் பொருள்களுடன் மணமுள்ள சந்தனத்தைத் தயாரித்தல் (19) भूषणयोजनम् பூஷணயோஜனம் (உடலுக்கும், உறுப்புகளுக்கும் ஏற்றவிதத்தில் நகைகளை அணிவித்து அழகு படுத்துதல்) (20) ऐन्द्रजालम् ஐந்த்ரஜாலம் (கட்டாந்தரையில் நொடிப் பொழுதில் மாம்பழங்களுடன் மாமரத்தைத் தோற்றுவித்தல், ஒரு மனிதனை பெட்டியில் பூட்டி வைத்தபின் வெளியிடத்திலிருந்து அவனைத் தருவித்தல் போன்ற உலக வழக்கில் பொருத்தமில்லாத ஸம்பவங்களை நிகழ்த்திப் பார்ப்பவர்களை ஆச்சரியத்தை அடையும்படி செய்தல் (21) कौचुमारयोगा: கௌதுமாரயோகா: (மணந்து கொண்ட இளம் பெண்களுடன் இன்பமுற்றிருக்க அவர்களை ஸந்தோஷப் படுத்துவதற்கான கேளிகள் புரியும் முறைகள் (22) हस्तलाघवम् ஹஸ்தலாகவம் (கம்புச்சண்டை புரிவதில் நூற்றுக்கணக்கான எதிரிகளையும் அணுக முடியாதபடி கையால் கம்பைச் சுழலும்படி

செய்வதற்கான முறைகள் (23) चित्रशाकापूपभक्ष्यविकारक्रिया: சித்ர-சாகாபூபபக்ஷ்யவிகாரக்ரியா: (பலவிதமான நற்சுவையுள்ள, காய்கறி, பணியாரம், அன்னவகைகளைத் தயாரிக்கும் முறை) (24) पानकरस-राग स योजनम् பானகரஸராகாஸவயோஜனம் (சர்க்கரை, எலுமிச்சம்-பழங்கள், சுக்கு, தண்ணீர் இவைகளைச் சேர்த்த பானகம், பூக்களி-லிருந்தும், பழங்களிலிருந்தும், சர்க்கரை சேர்ந்த மாவிலிருந்தும் சுவையும் நிறமும் உள்ள மத்யவர்க்கங்களைத் தயாரித்தல், (25) सूचीवायकर्म ஸூசீவாயகர்ம (ஊசியால் தைக்கும் முறை. அழகுள்ள மெல்லிய உடைகளைத் தயாரிக்கும் நெசவுத் தொழில் (26) . सूत्रक्रीडा ஸூத்ரக்ரீடா (உயர்ந்த இடத்தில் கட்டப்பட்ட கயிற்றின்மீது நடப்பது, ஓடுவது முதலிய கயிற்றுட்டம் (27) वीणाडमरुकवाद्यानि வீணாடமருகவாத்யானி (வீணை, டமருகம் (ஒடுக்கை) முதலிய பல வாத்யங்களை வாசித்தல் (28) प्रहेलिका ப்ரஹேலிகா (முரண்பாடுள்ள பொருளை முதலில் தோற்றுவித்து பின்னர் நன்கு ஆழ்ந்த சிந்தனையின் பயனுய் பொருத்தம் உள்ள பொருளையும் அறிவிக்கும் பதினாறு விதமான இலக்கியங்களை அவையில் எளிதில் வெளியிடுதல் (29) प्रतिमालापः ப்ரதிமாலாப: (பதுமைகளைப் பேச வைத்தல்) (30) दुर्वचकयोगाः துர்வசகயோகா: (வசை மொழிகளைப் பல முறைகளில் வரிசைப்படுத்தி ஸபையில் அடுக்கடுக்காக வழங்குதல்) (31) पुस्तकवाचनम् புஸ்தகவாசனம் (தடையின்றி பிழையின்றி நடுத்தரமான குரலில் வேகமின்றி, தாமதமின்றி, ஸபாயார்கள் கேட்டுப் பொருளைப் புரிந்துகொள்ளும்படி நூல்களைப் படித்தல் (32) नाटकाख्यायिकादर्शनम् நாடகாக்யாயிகா-தர்சனம் (கண்டுகளிக்கத்தகுந்த நாடகங்கள் எனப்படும் இலக்கியங்க-ளையும், கேட்டு ஆனந்திக்கத் தகுந்த ஆக்யாயிகை எனப்படும் கத்ய இலக்கியங்களையும் ஆராய்ந்து குறைகளைச் சுட்டிக் காண்பித்தல் (33) काव्यसमस्यापूरणम् காவ்யஸமஸ்யாபூரணம் (கவிகளுடைய கூட்டத்தில் ஒருவர் ஒரு செய்யுளின் மூன்று அடிகளைப் பாடியவுடன் அதற்குப் பொருத்தமான நான்காவது அடியைப்பாடி செய்யுளை முழுமையாக்குதல்) (34) पट्टिकावेत्रबाणविकल्पाः பட்டிகாவேத்ர-பாணவிகல்பா: (பிரம்புகளால் பீடங்கள், நான்கு கால், ஆறு கால், இருக்கைகள், கட்டில்கள், வில்; அம்பு முதலியவைகளைச் செய்தல்.

(35) तर्ककर्माणि தர்ககர்மாணி (ஒன்றினைப் பார்த்து ஊஹத்தால் பல்வேறு கார்யங்களைச் செய்தல்) (36) तक्षणम् தக்ஷணம் (மரவேலைகள் புரிதல்) (37) वास्तुविद्या வாஸ்துவித்யா (பலவகையான இல்லங்கள், மாளிகைகள், கோயில்கள் முதலியவைகளைச் செய்யும் முறை) (38) रूप्यरत्नपरीक्षा ரூப்யரத்னபரீக்ஷா (வெள்ளி, தங்கம் இரத்தினங்களை நோக்கி குற்றங்குறைகளை அறிதல் (39) धातुवादः தாதுவாத: (இரும்பு முதலிய உலோஹங்களைத் தங்கம் ஆக்குதல்) (40) मणिरागज्ञानम् மணிராகஞானம் (இரத்தினங்களில் நீரோட்டத்தை உணர்ந்து நல்லது, கெட்டது என்பதை ஆய்வு செய்தல் (41) आकरज्ञानम् ஆகரஞானம் (புதையல் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்தல்) (42) वृक्षायुर्वेदाः வ்ருக்ஷாயுர்வேதா: (மரங்களின் இனபேதம், வயது, வளர்ச்சி முதலியவற்றைப் பற்றிய அறிவு) (43) मेषकुक्कुटलावयुद्धविधिः மேஷகுக்குடலாவயுத்தவிதி: (ஆடுகளையும், கோழிகளையும் போர் புரியும்படி செய்தல், அவைகளைக் கொல்வதற்கான முறைகளைப் பற்றிய அறிவு) (44) शुकसारिकाप्रलापनम् சுகஸாரிகாப்ரலாபனம் (ஆண் பெண் கிளிகளை மனிதர்களைப் போன்று பேசப் பழக்குதல்) (45) उत्सादनम् உத்ஸாதனம் (கிணறு, குளம் முதலியவற்றை வெட்டுவதற்கு முன் நீர் ஊற்று உள்ள இடத்தைக் கண்டுபிடித்தல்) (46) केशमार्जनकौशलम् கேசமார்ஜனகௌசலம் (பெண்களுடைய தலைமுடிகளை வளர்த்தல், தைலம் தேய்த்தல், அதைப் போக்குவதற்கு ஸ்நாநம் செய்வித்தல், வாஸனைப் புகை போட்டு உலர்த்துதல், அழகாகப் பின்னல், முடியிடுதல் ஆகியவகைகளைப் பற்றிய அறிவு) (47) अक्षरमुष्टिकाकथनम् அக்ஷரமுஷ்டிகாகதனம் (ஏதேனும் ஒரு எழுத்தைக் கூறச் சொல்லி முஷ்டியில் (கைப்பிடியில்) மூடியிருக்கும் பொருளைக் கண்டுபிடித்துக் கூறுதல், அங்ஙனமே, தான்யக் குவியலில் உள்ள பிடிகளைக் கணக்கிட்டுக் கூறுதல் முதலியன. (48) म्लेच्छितकुतर्कविकल्पाः ம்லேச்சிதகுதர்கவிகல்பா: (நாஸ்திகர்களின் ப்ராக்ருத மொழியில் கூறப்படும் குயுக்திகளின் பிரிவுகளை உணர்ந்து தகுந்த யுக்திகளால் அவைகளைத் தூஷித்தல் (49) देशभाषाज्ञानम् தேசபாஷாஞானம் (பல்வேறு

நாட்டினரின் மொழிகளை உணர்தல்) (50) पुष्पशकटिकानिर्मितिज्ञानम् புஷ்பசகடிகாநிர்மிதிஞானம் (மலர்களைக் கொண்டு சிறிய வண்டிகள்; தொட்டில், ஊஞ்சல், பல்லக்கு, குடைகள் முதலானவைகளை அழகிய முறையில் அமைக்கும் அறிவு) (51) यन्त्रमातृका धारणमातृका யந்த்ர-மாத்ருகா தாரணமாத்ருகா (விவசாயம் முதலியவைகளுக்கோ, குடிப்பதற்கோ வேண்டிய இடங்களுக்குக் கொண்டு செல்வதற்கும், நீரைத் தேக்கி வைப்பதற்கும் இரும்பாலான குழல், இயந்திரங்கள் இவைகளைப் பலவகைகளில் படைத்தல் (52) संवाच्यम् ஸம்வாச்யம் (நொடிப்பொழுதில் தன்னைச் சுற்றிலும் ஒரே ஸமயத்தில் நிகழ்ந்தவை-களான வெவ்வேறான பத்து, ஐம்பது, நூறு என்ற செயல்களைக் கூறுதல்) (53) मानसी काव्यक्रिया மானஸீ காவ்யக்ரியா (நிமிஷத்தில் ஒரு இலக்கியத்தை இயற்றும் ஆற்றல்). (54) अभिधानकोश: அபிதான-கோச: (எண்ணிறந்த அகராதிகளைப் பற்றிய அறிவு (55) छंदोज्ञानम् சந்தோஞானம் (பலவிதமான வ்ருத்தங்களை இயற்றும் ஆற்றல்) (56) क्रियाविकल्पा: க்ரியாவிகல்பா: (ஒரே ஸமயத்தில் உடலாலும் புலன்களாலும் செய்வதற்கு மிகவும் கடினமான அனேகம் செயல்-களைப் புரிதல்) (57) छलितकयोगा: சலிதகயோகா: (ஒரே எழுத்தை ஆவர்த்தி செய்து இயற்றிய செய்யுள், தேர், பாம்பு, குடம், தாமரைப்பூ போன்ற ஆக்ருதியில் படைத்த செய்யுள் இவைகளைக் கொண்ட இலக்கியங்களால் கற்றோர்களுடைய உள்ளங்களையும் எளிதில் பொருளைப் புரிந்துகொள்ள முடியாதபடி கலக்கமுறச் செய்தல். (58) वस्त्रगोपनानि வஸ்த்ரகோபனானி (அளவில் மிகப் பெரிய பொரு-ளையும் துணியால் மறைத்து அப்பொருள் துலங்காதபடி பார்ப்பவர்-களை ஆச்சரியத்தில் மூழ்குமபடி செய்தல்) (59) द्यूतविशेष: த்யூதவிசேஷ: (சூதாட்டத்தைப் பற்றிய அறிவு) (60) आकर्षक्रीडा ஆகர்ஷக்ரீடா (காந்தத்தால், இரும்பாலான வாஹனம் வீடு முதலியவற்றை இழுத்துவரச் செய்தல்) (61) बालक्रीडनकानि பாலக்ரீடனகானி (குழந்தைகளின் விளையாட்டுகளின் வகைகளைப் பற்றிய அறிவு). (62) वैनायिकी विद्या வைநாயிகீ வித்யா (பகைவர்களின் பெரிய காரியங்களையும் இடையூறுகளால் தடை செய்தல்) (63) वैजयिकीविद्या வைஜயிகீவித்யா (எதிரிகளால் தோற்றுவிக்கப்படும் பெரிய இடையூறுகளையும் தகர்த்து வெற்றி பெறுவதற்கான அறிவு)

(64) वैतालिकीविद्या வைதாலிகீவித்யா (வேந்தர்களை விதவிதமாக துதிபாடும் அறிவு). இத்தகைய அறுபத்து நான்கு கலைகளுக்கு இருப்பிடமானவர். [ஸ்ரீமத் பாகவதம் 10 வது ஸ்கந்தம் 45 வது அத்யாயம் 36 வது சுலோகத்தின் உரையில் ஸ்ரீதரஸ்வாமிகள் கூறியிருப்பதைத் தழுவி அறுபத்து நான்கு கலைகள் இங்கு விளக்கப்பட்டுள்ளன ]

969. चतुःषष्टिमहासिद्धयोगिनीबृन्दवन्दितः

சதுஃஷஷ்டிமஹாஸித்தயோகினீப்ருந்தவந்திதஃ

கணவர்களுடன் கூடியவர்களான அக்ஷோப்யா முதலான அறுபத்து நான்கு யோகினீ தேவதைகளின் கூட்டத்தால் நமஸ்கரிக்கப்பட்டவர்.

970. अष्टषष्टिमहातीर्थक्षेत्रभैरवभावनः

அஷ்டஷஷ்டிமஹாதீர்தக்ஷேத்ரபைரவபாவனஃ

அறுபத்தெட்டு சிவ தீர்திதங்களிலுள்ள திவ்ய க்ஷேத்ரங்களில் எழுந்தருளியிருக்கும் பரமசிவனை உபாஸனை செய்துகொண்டிருப்பவர்.

ஸ்காந்த புராணம் காசீ கண்டத்திலும், பாத்ம புராணத்திலும், புராதனமான பாரதத்தில் பாவத்தை அழித்து புண்ணியத்தை அளிக்கும் அறுபத்து எட்டு சிவ மஹா தீர்த்தங்களும், க்ஷேத்ரங்களும் உள்ளன என்று கூறப்பட்டிருக்கிறது. அத்தகைய சிவ தீர்த்தங்களில் இருக்கும் ஒவ்வொரு க்ஷேத்ரத்திலும் கோயில் கொண்டிருக்கும் பரமசிவனை மிக்க பக்தியுடன் ஸ்ரீ கணேசர் உபாஸனை செய்கின்றார் என்பது கருத்து.

971. चतुर्नवतिमन्त्रात्मा சதுர்நவதிமந்த்ராத்மா

ஸூர்யனுடையவும், சந்திரனுடையவும், அக்நியினுடையவும் கலைகளாகிய மந்திரங்கள் முப்பத்து எட்டும், 'அ' முதல் 'க்ஷ' வரை உள்ள மாத்ருகாக்ஷர ரூபமான மந்திரங்ள் ஐம்பதும், (1) हंसः शुचि ஹம்ஸஃ சுசிஃ (2) प्रतद्विष्णु ப்ரதத்விஷ்ணு, (3) विष्णुर्योनिम् விஷ்ணுர்யோனிம், (4) त्रियम्बकं த்ரியம்பகம், (5) तद्विष्णोः परम् पदम् தத்விஷ்ணோ: பரம் பதம், (6) மூலமந்திரம் என்ற மந்திரங்கள் ஆறும் சேர்ந்த தொண்ணூற்று நான்கு மந்திரங்களின் உருவமாக இருப்பவர்.

972. षण्णवत्यधिकप्रभु: ஷண்ணவத்யதிகப்ரபு:

தொண்ணூற்று ஆறு தேவதைகளுக்கும் அதிகமான தேவதை-களுக்குத் தலைவனாக இருப்பவர்.

தந்த்ர ராஜம் என்ற நூலில் ஸ்ரீ சக்ரத்தில் பூஜிக்கப்படும் தேவதைகள் தொண்ணூற்று ஆறு என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீ வித்யா தேவதைகளுடன், ஸ்ரீ கணேசருடைய பரிவார தேவதைகளும் சேரும்போது தொண்ணூற்று ஆறுக்கும் மேலான தேவதைகள் ஏற்படுவதால் தொண்ணூற்று ஆறுக்கும் மேலான தேவதைகளுக்குத் தலைவன் என்று கூறப்பட்டிருக்கின்றது.

973. शतानन्द: சதாநந்த:

நூற்றுக் கணக்கான ஆனந்த வடிவமானவர்.

மானுஷானந்தம் முதல் ப்ரும்ஹானந்தம் வரை நூறு நூறு மடங்காக தைத்தரீயோபநிஷத்தில் கணக்கிடப்பட்ட ஆனந்தங்கள் அனைத்துமே ஸ்ரீ மஹாகணபதியின் ஸ்வரூபம் என்பது கருத்து.

974. शतधृति: சதத்ருதி:

எண்ணிறந்த பிரும்மாண்டங்களைத் தாங்கி நிற்பவர்.

975. शतपत्रायतेक्षण: சதபத்ராயதேக்ஷண:

நூறு இதழ் கொண்ட தாமரைப் பூவின் இதழ் போன்று அகன்றதும் அழகியதுமான கண்களை உடையவர்.

976. शतानीक: சதாநீக:

நூற்றுக்கணக்கான (எண்ணிறந்த) போர் புரிவதற்குத் திறமை உள்ள படைகளை உடையவர்.

977. शतमख: சதமக:

நூறு அச்வமேதம் செய்த இந்திரனாக இருப்பவர்: அல்லது, அடியார்களால் செய்யப்படும் நூற்றுக்கணக்கான பலவிதமான முறைகளைத் தழுவிய பூஜைகளை அடைந்தவர்.

978. शतधारावरायुध: சததாராவராயுத:

மிகவும் கூர்மையான நூறு முனைகளுடன் கூடிய ஆயுதத்தை உடையவர். அல்லது, இந்திரனுடைய வஜ்ராயுதத்தைக் காட்டிலும் சிறந்த ஆயுதத்தை உடையவர்.

979. सहस्रपत्रनिलय: ஸஹஸ்ரபத்ரநிலய:
மனித உடலில் தலையின் நடுவே இருக்கும் பிரும்மரந்தரத்தி-லுள்ள ஆயிரம் இதழ் தாமரைப் பூவை இருப்பிடமாகக் கொண்டவர்.

980. सहस्रफणभूषण: ஸஹஸ்ரபணபூஷண:
அரவரசனான ஆயிரம் பத்திகளுடன் கூடிய ஆதிசேஷனை ஆபரணமாக அணிந்திருப்பவர்.

981. सहस्रशीर्षापुरुष: ஸஹஸ்ரசீர்ஷாபுருஷ:
ஆயிரம் தலைகளை உடைய மஹாபுருஷனாக இருப்பவர். (எல்லா உடல்களிலும் இருப்பவர் என்பது கருத்து)

982. सहस्राक्ष: ஸஹஸ்ராக்ஷ:
ஆயிரக்கணக்கான (எண்ணிறந்த) கண்களை உடையவர்.

983. सहस्रपात् ஸஹஸ்ரபாத்
ஆயிரக்கணக்கான (எண்ணிறந்த) கால்களை உடையவர்.

984. सहस्रनामसंस्तुत्य: ஸஹஸ்ரநாமஸம்ஸ்துத்ய:
ஆயிரக்கணக்கான (எண்ணிறந்த) நாமாக்களால் துதிக்கத் தகுந்தவர், இதையே "எல்லா நாமாக்களும் பரமாத்மாவையே வந்து அடைகின்றன" "यमाविशन्ति नामानि सर्वाणि" "யமாவிசந்தி நாமானி ஸர்வாணி" என்று மறையும் பறைசாற்றுகின்றது.

985. सहस्राक्षबलापह: ஸஹஸ்ராக்ஷபலாபஹ:
போரில் இந்திரனுடைய பராக்ரமத்தை நாசம் செய்தவர்.

(கச்யபருக்கும் அதிதிக்கும் புதல்வனாக மஹாகணபதி அவதரித்தார். பிரும்மா முதலிய தேவர்கள் தாமரைப்பூ முதலிய வெகுமதிகளை அளித்து பல பெயர்களைச் சூட்டி விநாயகரைப் பூஜித்தனர். இந்திரன் பூஜிப்பதற்கு மறுத்து, வாயுவையும், அக்கினியையும் கணேசரைத் துன்புறுத்தும்படி தூண்டினான். கணேசர் வாயுவையும், அக்கினியையும் அடக்கி, இந்திரனை தன் விச்வரூபத்தில் மறைத்து வெளிவருவதற்கு வழி தெரியாமல் தவிக்கும்படி செய்து அவன் கர்வத்தை அடக்கினார். பின்னர், இந்திரன் அங்குசம், கல்பவிருக்ஷம் இரண்டையும் காணிக்கையாகக் கொடுத்து கணேசரை வணங்கி

விநாயகர் என்ற திருநாமத்தை அவருக்குச் சூட்டி மன்னிப்புக் கோரினன் என்ற விபரத்தைக் கணேச புராணம் உத்தரபாகம் 11 வது அத்யாயத்தில் காண்க)

986. दशसाहस्रफणभृत्फणिराजकृतासन:

தசஸாஹஸ்ரபணப்ருத்பணிராஜக்ருதாஸன:

பத்தாயிரம் பத்திகளுடன் (படங்களுடன்) கூடிய அரவரசனுன ஆதிசேஷன் மீது வீற்றிருப்பவர். எல்லாம் வல்ல முழு முதற்கடவுளான ஸ்ரீ கணேசரால் முடியாத கார்யம் ஒன்றும் இல்லை என்பது கருத்து.

987. अष्टाशीतिसहस्राद्यमहर्षिस्तोत्रयन्त्रित:

அஷ்டாசீதிஸஹஸ்ராத்யமஹர்ஷிஸ்தோத்ரயந்த்ரித:

இவ்வுலகின் படைப்புக் காலத்தின் தொடக்கத்திலேயே தோன்றியவர்களான எண்பத்தெட்டு ஆயிரம் மஹர்ஷிகளால் துதிக்கப்பட்டவராய் அவர்களிடமிருந்து அகலாதிருப்பவர்.

விஷ்ணு புராணத்தில், ஸ்ரீமந்நாராயணன் இவ்வுலகில் வேதம் முதலான ஸகல வித்யைகளையும் அறுபத்து நான்கு கலைகளையும் அழிந்து போகாமல் காப்பாற்றுவதற்காக ஸ்ருஷ்டிகாலத்தின் ஆரம்பத்திலேயே எண்பத்து எட்டாயிரம் கிருஹஸ்தர்களான மஹர்ஷிகளை ஹிமய மலையின் தாழ்வரைகளில் வஸிக்கும்படி செய்திருக்கிறுர் என்று கூறப்பட்டிருக்கின்றது. அத்தகைய முனிவர்களின் துதிக்குக் கட்டுப்பட்டவராய் கணேசர் அவர்களைக் காப்பாற்றுகின்றுர் என்பது கருத்து.

988. लक्षाधीशप्रियाधार: லக்ஷாதீசப்ரியாதார:

மேலும் மேலும் செல்வச் செழிப்பிற்காக லக்ஷக்கணக்கான செல்வங்களுக்குத் தலைவர்களான குபேரன் முதலியவர்களால் இணையற்ற பக்தியுடன் ஆச்ரயிக்கப்பட்டவர்.

989. लक्षाधारमनोमय: லக்ஷாதாரமனேமய:

திடமான ஒருமைப்பாட்டிற்கு (அசைவற்ற நிலையை அடைவதற்கு) குறிப்பிட்ட ஒரு லக்ஷ்யத்தை (ஆச்ரயத்தை) நாடியிருக்கும் உள்ளத்தின் உருவமாக இருப்பவர். உபாஸனை செய்பவரின் உள்ளம் ஸ்ரீ கணேசரின் வடிவமாகும் என்பது கருத்து.

990. चतुर्लक्षजपप्रीत: சதுர்லக்ஷஜபப்ரீத:

நான்கு லக்ஷம் தடவைகள் தனது மந்திரத்தை ஜபம் செய்யும் அடியார்களிடம் மிகுந்த ஸந்தோஷம் அடைபவர். (அவர்கள் விரும்பியவற்றைத் தந்து அருளுகின்றார் என்பது கருத்து)

991. चतुर्लक्षप्रकाशित: சதுர்லக்ஷப்ரகாசித:

பதினெட்டு புராணங்களிலுள்ள நான்கு லக்ஷம் க்ரந்தங்களால் விளக்கப்பட்ட மஹிமையால் விளங்குபவர். (குறிப்பு: க்ரந்தம் என்பது முப்பத்திரண்டு எழுத்துக்கள் கொண்டதாகும்)

[குறிப்பு: 992வது முதல் 994வது முடிய மூன்று நாமாக்கள் "ஸ்ரீ கணேசர் ஜீவராசிகள் இருக்கும் இடம் எல்லாம் இருப்பினும், அஃவிட முடியாதவர்; அங்குள்ள குற்றங்களால் தீண்டப்படாதவர்; ஸூர்யனைப் போன்று பிரகாசிப்பவராயினும் அடியார்களுக்குத் தாபத்தை அளிக்காதவர்; சந்திரனைப் போன்று ஸகல ஜீவராசிகளையும் ஆனந்தப்படுத்துபவர் ஆனாலும் களங்கமற்றவர்" என்று அறிவிக்கின்றன].

992. चतुरशीतिलक्षाणां जीवानां देहसंस्थित:

சதுரசீதிலக்ஷாணாம் ஜீவானாம் தேஹஸம்ஸ்தித:

எண்பத்துநான்கு லக்ஷம் ஜீவர்களுடன் எண்பத்து நான்கு லக்ஷம் உடல்களில் இருப்பவர்.

993. कोटिसूर्यप्रतीकाश: கோடிஸூர்யப்ரதீகாச:

கோடிக்கணக்கான கதிரவர்கள் போன்று துலங்குபவா.

994. कोटिचन्द्रांशुनिर्मल: கோடிசந்த்ராம்சுநிர்மல:

கோடிக்கணக்கான குளிர்ந்த கிரணங்களை உடைய சந்திரர்கள் போன்று பிரகாசிப்பவராயினும் சிறிதும் களங்கம் அற்றவர்.

995. शिवाभवाध्युष्टकोटिविनायकधुरन्धर:

சிவாபவாத்யுஷ்டகோடிவிநாயகதுரந்தர:

அன்னை பார்வதீதேவிக்குப் பணிபுரியும் மூன்றரை கோடி விநாயகர்களையும், தந்தை பரமசிவனுக்குப் பணிபுரியும் மூன்றரை கோடி விநாயகர்களையும் ஆக ஏழு கோடி விநாயகர்களையும் அடக்கி ஆளும் பொருப்பை வஹிப்பவர்.

996. सप्तकोटिमहामन्त्रमन्त्रितावयवद्युतिः
ஸப்தகோடி மஹாமந்த்ரமந்த்ரிதா வயவத்யுதி:
நிகரற்றதும், புகழ் பெற்றதும், எல்லாவிதமான நன்மைகளை அளிப்பதுமான ஏழு கோடி மஹாமந்திரங்களால் அறிவிக்கப்படும் பெருமை பொருந்திய தனது உறுப்புகளால் விளங்குபவர்.

(தேவதைகள் அனைவரும், ப்ரம்மாண்டத்தையே தனது உடலாகக் கொண்ட ஸ்ரீ கணேசரின் உறுப்புகளாக இருக்கின்றனர். எனவே, எல்லா தெய்வங்களைக் குறிக்கும் மந்திரங்களும் விநாயகப் பெருமானைப் புகழ்ந்து பேசுகின்றன என்பது கருத்து)

997. त्रयस्त्रिंशत्कोटिसुरश्रेणीप्रणतपादुकः
த்ரயஸ்த்ரிம்சத்கோடிஸுரச்ரேணீப்ரணதபாதுக:
முப்பத்து மூன்று கோடி தேவர்களின் வரிசையால் நன்கு வணங்கப்படும், தனது (திருவடித் தாமரையைத் தாங்கி நிற்கும்) மணிபாதுகைகளை உடையவர்.

998. अनन्तनामा அனந்தநாமா
எல்லா சப்தங்களையும் தன்னுடைய திருநாமங்களாகக் கொண்டவர். ''பரம்பொருள் வியாபித்து இருக்கும் இடம் எல்லாம் சப்தமும் (சொல்லும்) வியாபித்து இருக்கிறது''

'यावत्प्रतिष्ठितं ब्रह्म तावती वाक्''

''யாவத்ப்ரதிஷ்டிதம் ப்ரஹ்ம தாவதீ வாக்''

என்ற வேத வசனம் இதற்கு மூலப்ரமாணமாகும்.

999. अनन्तश्रीः அனந்தஸ்ரீ:
(தன்னை வழிபடும் அடியார்களுக்கு வாரி வழங்குவதற்காக) அழியாததும், குறையாததுமான கல்வி, செல்வம், புகழ் இவைகளை உடையவர்.

1000. अनन्तानन्दसौख्यदः அனந்தானந்தஸௌக்யத:
நாவால் கூற இயலாத மஹிமை உள்ளதும், அளவிட முடியாததும், நிலையானதுமான அத்வைத ப்ருஹ்மானந்தம் எனப்படும் பேரின்பத்தை அளிப்பவர்.

குறிப்பு:

உரை ஆசிரியரான பாஸ்கராசார்யர் நாமாக்களின் எண்ணிக்கையை ஆயிரத்திற்குக் கூட்டவோ, குறைக்கவோ செய்யாமலிருக்க ஆயிரத்தில் அடங்கியிருக்கும், பத்து நூறுகளில் ஒவ்வொரு நூற்றினுடையவும் முதல் நாமாவைக் குறிப்பிட்டு நாமாக்கள் ஆயிரமே என்று திட்டப்படுத்தியிருப்பது கவனத்திற்குரியது. அவையாவன:—

| | | |
|---|---|---|
| (1) | गणेश्वर: | கணேச்வர: |
| (2) | सर्वनेत्राधिवासक: | ஸர்வநேத்ராதிவாஸக: |
| (3) | तेजोवतीशिरोरत्नम् | தேஜோவதீசிரோரத்னம் |
| (4) | भोगदाकान्तिमण्डित: | போகதாகாந்திமண்டித: |
| (5) | उडुभृन्मौलि: | உடுப்ருன்மௌலி: |
| (6) | ढुंढिविनायक: | டுண்டிவிநாயக: |
| (7) | रसप्रिय: | ரஸப்ரிய: |
| (8) | अहर्निशम् | அஹர்நிசம் |
| (9) | मोक्ष: | மோக்ஷ: |
| (10) | अष्टैश्वर्यप्रदायक: | அஷ்டைச்வர்யப்ரதாயக: |

'आदौ गणेश्वर : पश्चात्सर्वनेत्राधिवासक: ।
तेजोवतीशिरोरत्नं भोगदाकान्तिमण्डित: ।।
उडुभृन्मौलिरथ च प्रोक्तो ढुंढिविनायक: ।
रसप्रियो ऽहर्निशं च मोक्षो ऽष्टैश्वर्यप्रदायक : ।।
इमानि शतकादीनि नामानि क्रमतो दश ।
संख्ययाऽक्रमनिरासाय न विस्मर्याणि सूरिभि: ।।"

என்ற கத்யோதத்தில் உள்ள வசனங்கள் இங்கு பிரமாணமாகும்

सहस्रनामफलश्रुति: ।।

ஸஹஸ்ரநாம பலச்ருதி: ॥

[ஸ்ரீ கணேச ஸஹஸ்ரநாமத்தைப் படிப்பவர்களுக்குப் பொதுவான பயன் கூறப்படுகின்றது].

इति वैनायकं नाम्नां सहस्रमिदमीरितम् ।
इदं ब्राह्मे मुहूर्ते यः पठति प्रत्यहं नरः
करस्थं तस्य सकलमैहिकामुष्मिकं सुखम्

இதி வைநாயகம் நாம்நாம் ஸஹஸ்ரமிதமீரிதம் ।
இதம் ப்ராஹ்மே முஹுர்தே ய: படதி ப்ரத்யஹம் நர:
கரஸ்தம் தஸ்ய ஸகல-மைஹிகா-முஷ்மிகம் ஸுகம்.

இவ்விதம் விநாயகப் பெருமனுடைய ஆயிரம் திருநாமாக்கள் என்னுல் (மஹாகணபதியால்) கூறப்பட்டுள்ளன. இந்த ஆயிரம் நாமாக்களை எவனொருவன் தினந்தோறும் அதிகாலையில் கதிரவன் உதிப்பதற்கு முன் ப்ராஹ்ம முஹுர்த்தவேளையில் (பின் இரவு 4 மணி முதல் 6 மணி வரை) படிக்கின்ருனோ அந்த பக்தன் இம்மையிலும் மறுமையிலும் அவனுல் விரும்பப்படும் எல்லாவிதமான ஸௌக்யங்களையும் அடைகின்ருன்.

(இம்மையில் ஏற்படும் பயன்களை மட்டுமே அடைவதற்கு விரும்பி ஸஹஸ்ரநாம பாராயணம் செய்கின்ற 'ஐஹிக காமனுக்கு' பயன்களை கீழ்க்கண்ட பதினுறரை சுலோகங்களும் கூறுகின்றன).

आयुरारोग्यमैश्वर्यं धैर्यं शौर्यं बलं यशः ।
मेधा प्रज्ञा धृतिः कान्तिः सौभाग्यमतिरूपता ॥

ஆயுராரோக்யமைச்வர்யம் தைர்யம் சௌர்யம் பலம் யச:
மேதா ப்ரஞா த்ருதி: காந்தி: ஸௌபாக்யமதிருபதா.

सत्यं दया क्षमा क्षान्तिः दाक्षिण्यं धर्मशीलता
जगत्संयमनं विश्वसंवादो वादपाटवम्

ஸத்யம் தயா க்ஷமா க்ஷாந்தி:, தாக்ஷிண்யம் தர்மசீலதா
ஜகத்ஸம்யமனம் விச்வஸம்வாதோ வாதபாடவம்

सभापाण्डित्यमौदार्यं गाम्भीर्यं ब्रह्मवर्चसम्
औन्नत्यं च कुलं शीलं प्रतापो वीर्यमार्यता

ஸபாபாண்டித்யமௌதார்யம் காம்பீர்யம் ப்ரஹ்மவர்சஸம்
ஔனந்நத்யம் ச குலம் சீலம் ப்ரதாபோ வீர்யமார்யதா

जा [illegible] वज [illegible]नम स्ति[illegible]य स्थैर्यं विश्वा[illegible] शा[illegible]ना ।
[illegible] – [illegible] यभिवृ [illegible]श्च [illegible]कृ स [illegible]ना[illegible]भवे

ஞானம் விஞானம் ஆஸ்திக்யம் ஸ்தைர்யம் விச்வாதிசாயிதா
தன-தான்யாபிவ்ருத்திச்ச ஸக்ருதஸ்ய ஜபாத்பவேத் ||

நீண்ட ஆயுள், பிணியின்மை, எல்லாவிதமான செல்வச் சிறப்பு, உறுதியான உள்ளம், நிகரற்ற பராக்ரமம், புலன்களின் வலிமை, புகழ், அறிந்தவற்றை மறக்காமல் வைத்திருக்கும் புத்தியின் ஆற்றல், கடினமான விஷயத்தையும் எளிதில் புரிந்துகொள்ளும் புத்தி, கஷ்டத்தில் கலங்காத உள்ளம், முகத்தில் அறிவால் ஏற்படும் ஒளி, மங்களங்கள் அனைத்தையும் தரும் பாக்யம், மிக மிகச் சிறந்த உடலழகு, உண்மை பேசுதல், இரக்கமுள்ள உள்ளம், பெருந்தீங்கு இழைப்பவனிடம் தீங்கு இழைக்காது இருத்தல், தீங்கு இழைத்தவனிடம் கோபம் கொள்ளாது இருத்தல், எதையும் செய்து முடிக்கும் திறன், நற்செயல் புரியும் இயல்பு, உலகத்தினரைத் தன் இஷ்டப்படி அடக்கி வைத்தல், உலகத்தார் பாராட்டும்படி செயல் புரிதல், சொல்திறன், அவையில் உள்ள அறிஞர்களைக் கவரும் அறிவு ஆற்றல், கொடையாளியாக இருத்தல், ஆழ்ந்த உள்ளம், ப்ரஹ்மஞானத்தால் ஏற்படும் ஒளி, நல்லோர் கூட்டத்தில் முன்னணியில் இருத்தல், நற்குடி, நல்ல ஒழுக்கம், எளிதில் துஷ்டர்களால் அணுகமுடியாத ஸாமர்த்யம், வீரனாக இருத்தல், பகுத்தறிவு, ஆத்ம ஸ்வரூப ஞானம், சில்பம், சாஸ்திரம் இவைகளைப் பற்றிய அறிவு, அழிவில்லாத வேத நூலே நிலையான ப்ரமாணமாகும் என்ற நம்பிக்கை, எத்தகைய சூழ்நிலையிலும் சலிக்காமல் இருத்தல், இவ்வுலகில் அனைவருக்கும் மேலான நிலையில் இருத்தல், தங்கம், வெள்ளி, இரத்தினம், முத்து, பவழம் முதலிய செல்வத்தினுடையவும், நெல், கோதுமை, உளுந்து, பயறு, கடலை முதலிய தான்யங்களுடையவும் செழிப்பு என்ற பயன்கள் ஸ்ரீ கணேச ஸஹஸ்ரநாமத்தை ஒரு முறை ஜபிப்பதனாலேயே ஏற்படுகின்றது.

वश[illegible] च वि[illegible] नृ[illegible]ां [illegible]ादस्य प्र[illegible]ा[illegible]ते
[illegible]ज्ञो रा[illegible]क त्रस्य रा[illegible]पुत्रस्य [illegible]न्त्रिण:

வச்யம் சதுர்விதம் ந்ருணும் ஜபாதஸ்ய ப்ரஜாயதே
ராஜ்ஞோ ராஜகலத்ரஸ்ய ராஜபுத்ரஸ்ய மந்த்ரிண:

जप्यते यस्य वश्यार्थं स दासस्तस्य जायते
धर्मार्थकाममोक्षाणामनायासेन साधनम्

ஜப்யதே யஸ்ய வச்யார்தம் ஸ தாஸஸ்தஸ்ய ஜாயதே
தர்மார்தகாமமோக்ஷாணும் அுயாஸேன ஸாதனம்

शाकिनीडाकिनी–रक्षो–यक्षोरगभयापहम्
साम्राज सुखदं चैव समस्तरिपुमर्दनम्

சாகினீடாகினீ-ரக்ஷா-யக்ஷாரகபயாபஹம்
ஸாம்ராஜ்யஸுகதம் சைவ ஸமஸ்தரிபுமர்தனம்

समस्तकलहध्वंसि दग्धबीजप्ररोहणम्
दुःस्वप्नशमनं क्रुद्धस्वामिचित्तप्रसादनम्

ஸமஸ்தகலஹத்வம்ஸி தக்தபீஜப்ரரோஹணம்
து: ஸ்வப்னநாசனம் க்ருத்தஸ்வாமிசித்தப்ரஸாதனம்

षट्कर्माष्टमहासिद्धि त्रिकालज्ञानसाधनम्
परकृत्याप्रशमनं परचक्रविमर्दनम्

ஷட்கர்மாஷ்டமஹாஸித்தி த்ரிகாலஞான ஸாதனம
பாக்ருத்யாப்ரசமனம் பரசக்ரவிமர்தனம்

सग्रामरङ्गे सर्वेषामिदमेकं जयावहम्
सर्ववन्ध्यत्वदोषघ्नं गर्भरक्षैककारणम्

ஸம்க்ராமரங்கே ஸர்வேஷாமிதமேகம் ஜயாவஹம்
ஸர்வவந்த்யாத்வதோஷக்னம் கர்பரக்ஷைக காரணம்

पठ्यते प्रत्यहं यत्र स्तोत्रं गणपतेरिदम्
देशे तत्र न दुर्भिक्षमीतयो दुरितानि च

படீயதே ப்ரத்யஹம் யத்ர ஸ்தோத்ரம், கணபதேரிதம்
தேசே,தத்ர ந துர்பிக்ஷமீதயோ துரிதானி ச ।

ஸஹஸ்ரநாமத்தைப் பக்தியுடன் பாராயணம் செய்பவனுக்கு நான்கு விதமான வச்யங்கள் ஏற்படுகின்றன. அதாவது, தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், கொடிசெடிகள் என்ற நான்கும், நாம பாராயணம் செய்பவனுடைய இஷ்டத்தை அனுஸரித்து அவனுக்கு

அனுகூலம் ஆகின்றன. அரசனோ, அவன் மனைவியோ, மகனோ அல்லது மந்திரியோ தனக்கு அனுகூலர்களாக வேண்டும் என்று நாம பாராயணம் செய்தால் அவ்விதமே அவர்கள் பக்தனுக்கு அனுகூலமாக ஆகின்றனர் தனக்கு வசமாக வேண்டும் என்று பக்தன் எந்த நபரை விரும்பி ஜபம் செய்கின்றானோ அந்த நபர் அந்த பக்தனுக்கு பணியாளைப் போன்று பணி புரியக் காத்திருப்பார் அறம், பொருள், இன்பம், வீடு இவைகளை சிரமம் இன்றியே நாம-பாராயணம் அளிக்கின்றது. சாகினீ, டாகினீ, ராக்ஷஸர்கள், யக்ஷர்கள், பாம்புகள் இவைகள் மூலம் ஏற்படுகின்ற அச்சத்தை அறவே அகற்றி விடுகிறது. மேலும், இந்த நாம பாராயணமாவது சக்கரவரத்தி ஸுகத்தைத் தருவதாகும். பகைவர் அனைவரையும் நாசம் செய்வதாகும். பிணிகள் மூலம் உண்டான உஷ்ணத்தினால் குழந்தை பிறப்பதற்குரிய சக்தியை அழிக்கும் புருஷனுடைய சுக்லத்திற்கு ஏற்படும் குற்றத்தை அகற்றி சக்தியை அளிப்பதாகும். கெட்ட ஸ்வப்னத்தைக் காண்பதனால் வரவிருக்கும் தீமைகளை வராதிருக்கச் செய்வதாகும். சினங்கொண்ட தன் தலைவனுடைய கோபத்தை அகற்றி அவனுக்கு ஸந்தோஷத்தைத் தருவதாகும். பொறுக்க முடியாத துன்பங்களைத் தொடர்ச்சியாகத் தந்து கொண்டிருக்கும் பகைவர்கள், பக்தனுடைய உயிரையே அழிக்க முற்படும்போது அப்பகைவர்களின் துன்பங்களைத் தவிர்ப்பதற்கான மோஹனம், ஆகர்ஷணம் ஸ்தம்பனம், வித்வேஷணம், உச்சாடனம், மாரணம் என்ற ஆறு விதமான கர்ர்யங்களைச் செய்வதற்கான அறிவைத் தருவதாகும். அணிமா முதலிய எட்டு விதமான ஐச்வர்யங்களையும் மூன்று காலங்களிலும் (இறந்த காலத்திலும், நிகழ் காலத்திலும், வருங்காலத்திலும்) நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பற்றிய அறிவை அளிக்கும். பகைவர்களால் அபிசார கர்மாவின்மூலம் ஏவி விடப்பட்ட ராக்ஷஸியை நாசம் செய்வதாகும். பகைவர்களால் பக்தனை நாசம் செய்-வதற்காகத் தயாரிக்கப்பட்டு, பூஜிக்கப்பட்டு, புதைக்கப்பட்ட சக்கரத்தை (யந்திரத்தை) நிர்மூலமாகச் செய்வதாகும். அரசர்கள் அனைவருக்கும். போரில் வெற்றியைத் தருவதாகும். பெணகளுக்கு உள்ள எல்லா விதமான மலடித் தன்மையைப் போக்கடிப்பதாகும். இந்த நாமபாராயணம் கர்பத்திற்குக் கேடு வராமல் நன்கு காப்பாறு-தற்கு முக்கிய காரணமாகும். இந்த மஹாகணபதி ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம் எந்த தேசத்தில் தினந்தோறும் படிக்கப்படுகின்றதோ அந்த தேசத்தில் உயிரினங்களுககு உணவு முதலியவை செழிப்பாக கிடைப்பதாகும். உணவுக் குறைவு ஒரு பொழுதும் ஏற்படுவதில்லை.

பயிர்களுக்கும் மழையின்மை, அதிக மழை முதலிய இடையூறுகளால் கெடுதி ஏற்படுவதில்லை. மாந்தர்கள் பாவச் செயல்களில் ஈடுபடுவதில்லை.

न तद्गृह जहाति श्रीर्यत्राय पठ्यते स्तव:
क्षय–कुष्ठ–प्रमेहार्शो–भगन्तर–विषूचिका:

ந தத்க்ருஹம் ஜஹாதி ஸ்ரீர்யத்ராயம் பட்யதே ஸ்தவ:
க்ஷய குஷ்ட ப்ரமேஹார்சோ பகந்தர விஷூசிகா:

गुल्म प्लीह नमश ानमतिसार महोद म्
कास श्वा मृदावर्त शू शोफादिस वम

குல்மம் ப்லீஹாநமச்மானமதிஸாரம் மஹோதரம்
காஸம் ச்வாஸ முதாவர்தம் சூல சோபாதிஸம்பவம்.

शिरो ोगं वमिं हि ां गण्ड ाला मरोच म्
वात ित्तकफ द्वंद्वत्रिदोष–ज ि तज्वरम्

சிரோரோகம் வமிம் ஹிக்காம் கண்டமாலாமரோசகம்
வாதபித்தகபத்வந்த்வத்ரிதோஷ ஜனிதஜ்வரம்

आ न्तुं विषमं शीतमुष्ण नैकाह्निकादिकम्
इत ाद्युक्त नुक्त वा रो ं दोषादिस भवम्

ஆகந்தும் விஷமம் சீதமுஷ்ணம் சைகாஹிகாதிகம்
இத்யாத்யுக்தமநுக்தம் வா ரோகம் தோஷாதிஸம்பவம்

र्वं प्रश यत्याशु स्तोत्रस्यास्य कृज प:
कृ ाठेन सं द्ध: स्त्री शूद्र तिर
सहस्रनाममन्त्रोऽय पि : शु प्तये

ஸர்வம் ப்ரசமயத்யாசு ஸ்தோத்ரஸ்யாஸ்ய ஸக்ருஜ்ஜப:
ஸக்ருத்பாடேன ஸம்ஸித்த: ஸ்த்ரீ–சூத்ர பதிதைரபி
ஸஹஸ்ரநாமமந்த்ரோऽயம் ஜபிதவ்ய: சுபாப்தயே

எந்த இல்லத்தில் இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் பாராயணம் செய்யப்படுகின்றதோ அந்த இல்லத்தை விட்டு செல்வத் தலைவியான லக்ஷ்மி தேவியானவள் அகலுவதில்லை. அங்கேயே எப்பொழுதும்

குடிகொண்டிருப்பாள். மேலும் க்ஷயம், பதினெட்டு விதமான குஷ்டம், ப்ரமேஹம் (மூத்திர ரோகம்), அர்சஸ், பகந்தரம் என்ற மலத்வாரத்தினுள் ஏற்படும் பிணிகள், விஷூசிகா (வாந்தியும் வயிற்றுப் போக்கும் சேர்ந்தது) குல்மம் (பெண்களுக்கு கர்பகாலத்தில் ஏற்படும் வயிற்று-வலி), ப்லீஹா (குடல் வீக்கம்), அச்மரீ (மூத்திரத்தில் கல் சேர்க்கை), அதிஸாரம் (தொடர்ச்சியான வயிற்றுப் போக்கு), காஸம் (இழுப்பு), ச்வாஸம் (மூச்சுத்தடை), உதாவர்தம் (வயிற்று வீக்கம்), சூலம் (வயிற்றுவலி), சோபம் (உடல் வீக்கம்), தலைவலி, வாயிலெடுப்பு, ஓயாத விக்கல், கண்டமாலை (கழுத்தைச் சுற்றிலும் மாலை போன்று கொப்புளங்கள் வெடித்தல்), அரோசகம் (ஜாடராக்னியின் சக்திக் குறைவால் நாவிற்கு ருசியின்மை), வாதம், பித்தம், கபம் என்ற இம்மூன்றினுள் இரண்டின் சேர்க்கையாலும், மூன்றின் சேர்க்கை-யாலும் ஏற்படும் ஜ்வரங்கள், அதிகமான உஷ்ணத்தாலும் சைத்யத்தாலும் ஏற்படுகின்ற ரோகங்கள் நிலையானதும், நிலையற்றதுமான எண்ணிறந்த பிணிகள், இங்கு கூறப்பட்டவைகளும், கூறப்படாத–வைகளுமான அனைத்தையும் நாம பாராயணம் ஒரு தடவை செய்த மாத்திரத்தில் போக்கடித்து விடுகின்றது. மேலும், இந்த ஸஹஸ்ர நாம வடிவமான மந்த்ரமானது எல்லாவிதமான மங்களங்களையும் அடைவதற்கு விருப்பமுள்ளவர்களான ஸ்த்ரீகளாலும், சூத்திரர்-களாலும், அந்தணரைக் கொல்லுதல், யாகம் முதலான தர்மத்திற்கு என்று வைத்திருக்கும் ஸ்வர்ணத்தை (தங்கத்தை) திருடுவது, குருவின் மனைவியைப் புணருவது, கள் குடிப்பது, இந்நான்கு கார்யங்களைச் செய்தவர்களுடன் சேர்க்கை என்ற ஐந்து பெரும் பாவங்களையும் புரிந்தவர்களாலும் கூட ஜபம் செய்யப்பட வேண்டிய-தாகும். ஒரு தடவை நாம பாராயணம் செய்வதினாலேயே அவர்களுடைய ஸகல அபீஷ்டங்களும் நிறைவேறுகின்றன.

[குறிப்பு: மறுமையில் ஏற்படும் பயன்களைப் பெரிதும் ஆசைப்பட்டு நாம பாராயணம் செய்யும் ஆமுஷ்மிக காமனுக்கான பயன்களை மேலே வரும் ஐந்தரை ச்லோகங்கள் கூறுகின்றன)

महागणपतेः स्तोत्र सकामः प्रजपन्निदम्
इच्छितान्सकलान्भोगानुपभुज्येह पार्थिवान्

மஹாகணபதே: ஸ்தோத்ரம் ஸகாம: ப்ரஜபந்நிதம்
இச்சிதான் ஸகலான் போகானுபபுஜ்யேஹ பார்திவான்

मनोरथफलैर्दिव्यैर्व्योमयानैर्मनोरमैः
चन्द्रेन्द्रभास्करोपेन्द्रब्रह्मशर्वादिसद्मसु

மனோரதபலைர் திவ்யைர்வ்யோமயானைர் மனோரமை:
சந்த்ரேந்த்ர பாஸ்கரோபேந்த்ரப்ரஹ்மசர்வாதிஸத்மஸு

कामरूपः कामगतिः कामतो विचरन्निह
भुक्त्वा यथेप्सितान्भोगानभीष्टान्सह बन्धुभिः

காமரூப: காமகதி: காமதோ விசரந்நிஹ
புக்த்வா யதேப்ஸிதான்போகாந பீஷ்டாந்ஸஹ பந்துபி:

गणेशानुचरो भूत्वा महागणपतेः प्रियः
नन्दीश्वरादिसानन्दी नन्दितः सकलैर्गणैः

கணேசானுசரோ பூத்வா மஹாகணபதே: ப்ரிய:
நந்தீச்வராதிஸானந்தீ நந்தித: ஸகலைர் கணை:

शिवाभ्यां कृपया पुत्रनिर्विशेषं च लालितः
शिवभक्तः पूर्णकामो गणेश्वरवरात्पुनः
जातिस्मरो धर्मपरः सार्वभौमोऽभिजायते

சிவாப்யாம் க்ருபயா புத்ரநிர்விசேஷம் ச லாலித:
சிவபக்த: பூர்ணகாமோ கணேச்வரவராத்புன:
ஜாதிஸ்மரோ தர்மபர: ஸார்வபௌமோ அபிஜாயதே

மேலுலகங்களுக்குச் சென்று அங்குள்ள ஸௌக்யங்களையும் அனுபவிப்பதற்கு விருப்பம் உள்ளவனாக, மஹாகணபதியின் இந்த ஒப்புயர்வற்ற ஆயிரம் திருநாமங்களைப் படிப்பவன், முதலில் இம்மண்ணுலகில் தனக்கு இஷ்டமான எல்லாவிதமான இன்பங்களையும் அனுபவித்து விடுகிறான். பிறகு, தான் விரும்பியவிதமே, தன் உறவினர்களுடன் கூட பலவிதமான அழகிய மனதைக் கவருகின்ற ஆகாய விமானங்களில் ஏறி அமர்ந்து சந்திரன், இந்திரன், ஸூர்யன், விஷ்ணு, நான்முகன், பரமசிவன் முதலான சிறந்த தேவர்களுடைய உலகங்களை அடைகின்றான். அங்கு சென்றபின் இஷ்டப்பட்ட உருவத்தை அடைந்து தன் விருப்பம் போல் ஸஞ்சரித்து தனக்கு மிகவும் பிடித்தமான எல்லாவிதமான ஸுகபோகங்களையும் அடைகின்றான். பின்னர் அந்த பக்தன், மஹாகணபதிக்கு மிகவும் அந்தரங்கமாகப் பணிபுரிகின்ற கணதேவதையாக மாறுகின்றான்.

மற்ற கணதேவதைகளுடன் சேர்ந்த அந்த பக்தன் அவர்களால் கொண்டாடப்பட்டவனுகவும் நந்திகேச்வரருக்கு இணையான ஸந்தோஷத்தை அடைந்தவனுகவும் இருந்துகொண்டு பார்வதீ பரமேச்வரர்களால் அன்பு கலந்த தயையால் மைந்தன் மஹாகணபதியிடமிருந்து சிறிதும் வேற்றுமை பாராமல் லாலனை செய்யப்படுகின்ருன். முடிவில் மஹாகணபதியின் திருவருளால் அந்த பக்தன் பரமசிவனுக்கும் பக்தனுகித் தனது விருப்பங்கள் அனைத்தும் பூரணமாக நிறைவேறிய பின், இந்த புண்ணிய பாரத பூமியில் முன் பிறவிகளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மறக்காதவனுகவும், அறம் செய்வதில் விருப்பம் உள்ளவனுகவும் இருக்கும் ஒரு சக்ரவர்த்தியாகவே பிறப்பை அடைகின்ருன்.

[குறிப்பு: இம்மையிலும், மறுமையிலும் கிடைக்கக் கூடிய ஸௌக்யங்களைச் சிறிதும் விரும்பாமல் ஸம்ஸாரத் தளையிலிருந்து விடுதலை பெறுவதையே பெரிதும் விரும்பி நாம பாராயணம் செய்கின்ற நிஷ்காம (ஆசையற்ற) பக்தனுக்கான பயன் மேலே வரும் இரண்டரை சுலோகங்களால் மொழியப்படுகின்றது).

निष्कामस्तु जपन्नित्यं भक्त्या विघ्नेशतत्परः
योगसिद्धिं परां प्राप्य ज्ञानवैराग्यसंस्थितः

நிஷ்காமஸ்து ஜபந்நித்யம் பக்த்யா விக்னேசதத்பர:
யோகஸித்திம் பராம் ப்ராப்ய ஞானவைராக்யஸம்ஸ்தித:

निरन्तरोदितानन्दे परमानन्दसंविदि
विश्वोत्तीर्णे परे पारे पुनरावृत्तिवर्जिते

நிரந்தரோதிதானந்தே பரமானந்தஸம்விதி
விச்வோத்தீர்ணே பரே பாரே புனராவ்ருத்திவர்ஜிதே

लीनो वैनायके धाम्नि रमते नित्यनिर्वृतः

லீனோ வைநாயகே தாம்நி ரமதே நித்யநிர்வ்ருத:

இம்மை மறுமைப் பயன்களின் எள்ளளவும் ஆசை இல்லாமல் இடையருமல் எப்பொழுதும் இணையற்ற பத்தி யோகத்தால் எவனொருவன் கணபதியை பஜித்துக் கொண்டு இந்த நாம பாராயணத்தைச் செய்கின்ருனே அத்தகைய பக்தன் விரைவிலேயே ஸ்ரீ மஹாகணபதியின் திருவருளால் உலக விஷயங்கள் அனைத்திலும் திடமான

வைராக்யத்தை (வெறுப்பை) அடைந்து உண்மையான ஆத்ம ஸ்வரூப ஞானத்தைப் பெற்றவனுய், நாம பாராயணத்தின் மூலம் பக்தி-யோகத்தின் பூர்ணமான பயனே அடைந்து விடுகின்ருன். உலகத்திற்கு அப்பால் உள்ளதும் ஸம்ஸாரக் கடலின் கரையாக இருப்பதும், மறு பிறப்பை அறவே இல்லாமல் செய்வதும், ஒப்புயர்வற்ற ஆனந்த-மாகவும் அறிவாகவும் இருப்பதுமான விநாயகப் பெருமானுடைய ஒளிமயமான உடலில் இரண்டறக்கலந்து உறைந்து விடுகின்ருன். எப்போதும் ஆனந்தவடிவனுய் இருந்து ஆனந்தத்தைஅனு-பவிக்கின்ருன்.

[குறிப்பு: இந்த ஸஹஸ்ர நாமத்தைக் குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட தடவைகள் பாராயணம் செய்வது, நாமாக்களால் குறிப்பிட்ட பொருட்களைக் கொண்டு தீயில் ஹோமம் செய்வது, மூர்த்திகளில் மலரால் பூஜிப்பது, ஜலத்திஞல் தர்ப்பணம் செய்வது, நாமாக்களைக் கற்றல், கற்பித்தல், ஆராய்ச்சி முதலியன செய்தல், எப்பொழுதுமே நாமாக்களை ஆவர்த்தி செய்தல், நாமாக்களைப் புத்தகத்தில் எழுதி அப்புத்தகத்தை வீட்டில் வைத்துப் பூஜை செய்தல் ஆகியவற்றைச் செய்பவர்களுக்கான பயன் மேலே வரும் பன்னிரண்டு ச்லோகங்களால் உபதேசிக்கப்படுகிறது.

यो नामभिर्हुनेदे रर्चयेत्पू ये रा:
राजानो वश्य ाम् य न्ति रिपवो या ति दास ाम्

யோ நாமபிர்ஹுனேதேதைரர்சயேத்பூஜயேந்நர:
ராஜானே வச்யதாம் யாந்தி ரிபவோ யாந்தி தாஸதாம்

मन्त्रा सिद्ध न्ति सर्वेऽपि भास्तस्य िद्धय:
मूल न्त्रादा स्तोत्र म ि तरं मम

மந்த்ரா: ஸித்யந்தி ஸர்வேऽபி ஸுலபாஸ்தஸ்ய ஸ்த்தய:
மூலமந்த்ராதபி ஸ்தோத்ரமிதம் ப்ரியதரம் மம

न स्ये मासि शुक्लायां च र्थ्यां म न
दूर्वाभि: ना भि: पूजां र्पण िधिवच्चरेत्

நபஸ்யே மாஸி சுக்லாயாம் சதுர்த்யாம் மம ஜன்மநி
நூர்வாபி: நாமபி: பூஜாம் தர்பணம் விதிவச்சரேத்

अष्टद्रव्यैर्विशेषेण जुहुयाद्भक्तिसंयुतः
तस्येप्सितानि सर्वाणि सिद्ध्यन्त्यत्र न संशयः

அஷ்டத்ரவ்யைர் விசேஷேண ஜுஹுயாத்பக்திஸம்யுத:
தஸ்யேப்ஸிதானி ஸர்வாணி ஸித்யந்த்யத்ர ந ஸம்சய:

इदं प्रजप्तं पठितं पाठितं श्रावितं श्रुतम्
व्याकृतं चर्चितं ध्यातं विमृष्टमभिनन्दितम्

இதம் ப்ரஜப்தம் படிதம் பாடிதம் ச்ராவிதம் ச்ருதம்
வ்யாக்ருதம் சர்சிதம் த்யாதம் விம்ருஷ்டமபிநந்திதம்

इहामुत्र च सर्वेषां विश्वैश्वर्यप्रदायकम्
स्वच्छन्दचारिणाप्येष येनायं धार्यते स्तवः

இஹாமுத்ர ச ஸர்வேஷாம் விச்வைச்வர்ய ப்ரதாயகம்
ஸ்வச்சந்த சாரிணாப்யேஷ யேநாயம் தார்யதே ஸ்தவ:

स रक्ष्यते शिवोद्भूतैर्गणैरध्युष्टकोटिभिः
पुस्तके लिखितं यत्र गृहे स्तोत्रं प्रपूजयेत्
तत्र सर्वोत्तमा लक्ष्मीः सन्निधत्ते निरन्तरम्

ஸ ரக்ஷ்யதே சிவோத்பூதைர்கணைரத்யுஷ்டகோடிபி:
புஸ்தகே லிகிதம் யத்ர க்ருஹே ஸ்தோத்ரம் ப்ரபூஜயேத்
தத்ர ஸர்வோத்தமா லக்ஷ்மீ: ஸந்நிதத்தே நிரந்தரம்.

எந்த பக்தன் கணபதியின் ஆயிரம் திருநாமங்களை நான்காவது வேற்றுமையுடன் சேர்த்து அத்துடன் ஸ்வாஹா என்ற சொல்லையும் சொல்லி அக்கியில் நெய் முதலான பொருட்களை ஹோமம் செய்து கணபதியை வழிபடுகிறானே, அத்தகைய பக்தனுக்கு அரசர்கள் அடிமை ஆகின்றனர். பகைவர்கள் பணியாட்களாக மாறுகின்றனர். அந்த பக்தனால் ஜபம் செய்யப்படும் பல தேவதைகளைக் குறிக்கும் மந்திரங்கள் அனைத்துமே எளிதாகவே அந்த பக்தனுக்கு அதனதன் பயன்களை அளித்து விடுகின்றன. இந்த நாம பாராயணமானது இருபத்து எட்டு எழுத்துக்கள் கொண்ட வரமஹாகணபதி மந்திரத்தின் ஜபத்தைக் காட்டிலும் மிகுந்த ஸந்தோஷத்தை எனக்குக் கொடுக்கின்றது. நான் திருவவதாரம் செய்த நன்னாளான புரட்டாசி மாதம் சுக்ல பக்ஷம் சதுர்த்தீ திதி அன்று என் நாமங்களைக் கூறி

அருகம் புற்களால் முறைபபடி என் மூர்த்தியில் அர்ச்சனையையும் ஜலத்தினுல் தர்பணத்தையும், எனக்கு மிகவும் பிடித்த எட்டு பொருட்-களால் அக்நியில் பக்தியுடன் ஹோமத்தையும் எந்த பக்தன் செய்து முடிக்கிருனே, அத்தகைய பக்தனுக்கு அவனுல் விரும்பப்படும் அனைத்தும் அவனிடம் வந்து சேருகின்றன. இதில் ஸம்சயம் வேண்டாம். இந்த எனது நாமாக்களை, பிறர் காதில் விழாதவாறு மெதுவாக ஜபிப்பது, உரக்கக் கூறுவது, கற்பிப்பது, செவியுற்றி-ருப்பது, பிறர் காதில் விழும்படி சொல்வது, உரை செய்வது, ஆராய்ச்சி செய்வது, சர்ச்சை செய்வது, உள்ளத்தில் பாவனை செய்வது, போற்றுவது ஆகியவைகளைச் செய்யும் அடியார்கள் அனைவருக்கும் இம்மையிலும், மறுமையிலும் எல்லாவிதமான ஐச்வர்யமும் ஏற்படு-கின்றது. உலக வரம்புகளை மீறி நடப்பவனுக இருப்பினும் எவனெரு-வன் இந்த நாம ஸஹஸ்ரத்தை எப்பொழுதும் ஜபித்துக் கொண்டே இருக்கின்ருனே அவனுக்கு ஒரு தீங்கும் வராதபடி பார்வதியுடையவும், பரமசிவனுடையவும் கண தேவதைகளான ஏழு கோடி விநாயகர்களும் அவனைக் காப்பாற்றுகிருர்கள். இந்த ஆயிரம் திரு நாமங்களும் ஒரு புத்தகத்தில் எழுதப்பட்டு அப்புத்தகம் எந்த வீட்டில் வைக்கப்பட்டு நன்கு பூஜனை செய்யப்படுகிறதோ அந்த வீட்டில், அனைவராலும் பூஜிக்கப்படுகின்ற லக்ஷ்மீ தேவி எப்பொழுதும் வாஸம் செய்கின்ருள்.

दानैरशेषैरखिलैर्व्रतैश्च
तीर्थैरशेषैरखिलैर्मखैश्च ।
न तत्फलं विन्दति यद्गणेश–
सहस्रनाम्नां स्मरणेन सद्यः ।।

தானைரசேஷைரகிலைர்வ்ரதைசச
தீர்தைரசேஷைரகிலைர்மகைச்ச ।
ந தத்பலம் விந்ததி யத்கணேச-
ஸஹஸ்ர நாம்னும் ஸ்மரணேன ஸத்ய: ।।

एतन्नाम्नां सहस्रं पठति दिनमणौ प्रत्यहं प्रोज्जिहाने
सायं मध्यंदिने वा त्रिषवणमथवा संततं वा जनो यः ।
सः स्यादैश्वर्यधुर्यः प्रभवति च सतां कीर्तिमुच्चैस्तनोति
प्रत्यूहं हन्ति विश्वं वशयति सुचिरं वर्धते पुत्रपौत्रैः ।।

ஏதந்நாம்நாம் ஸஹஸ்ரம் படதி தினமணௌ ப்ரத்யஹம்
ப்ரோஜ்ஜிஹானே
ஸாயம் மத்யம்தினே வா த்ரிஷவணமதவா ஸந்ததம் வா ஜனோ ய:
ஸ: ஸ்யாதைச்வர்யதுர்ய: ப்ரபவதி ச ஸதாம்
கீர்திமுச்சைஸ்தனோதி
ப்ரத்யூஹம் ஹந்தி விச்வம் வசயதி ஸுசிரம் வர்ததே
புத்ரபௌத்ரை:

अकिञ्चनोऽपि मत्प्राप्तिचिन्तको नियताशनः
जपेत्तु चतुरो मासान् गणेशार्चनतत्परः

அகிஞ்சனோ ऽபி மத்ப்ராப்திசிந்தகோ நியதாசன:
ஜபேத்து சதுரோ மாஸான் கணேசார்சனதத்பர:

दरिद्रतां समुन्मूल्य सप्तजन्मानुगामपि
लभते महतीं लक्ष्मीमित्याज्ञा पारमेश्वरी

தரித்ரதாம் ஸமுன்மூல்ய ஸப்தஜன்மானுகாமபி
லபதே மஹதீம் லக்ஷ்மீமித்யாஜ்ஞா பாரமேச்வரீ

आयुष्यं वीतरोगं कुलमतिविमलं संपदश्चार्तदानाः
कीर्तिर्नित्यावदाता भणितिरभिनवा कान्तिरव्याधिभव्या।
पुत्राः सन्तः कलत्रं गुणवदभिमतं यद्यदेतच्च सत्यम्
नित्यं यः स्तोत्रमेतत्पठति गणपतेस्तस्य हस्ते समस्तम् ॥

ஆயுஷ்யம் வீதரோகம் குலமதிவிமலம் ஸம்பதச்சார்ததானு:
கீர்திர்நித்யாவதாதா பணிதிரபிநவா காந்திரவ்யாதிபவ்யா
புத்ரா: ஸந்த: களத்ரம் குணவதபிமதம் யத்யதேதச்ச ஸத்யம்
நித்யம் ய: ஸ்தோத்ரமேதத்படதி கணபதே ஸ்தஸ்ய
ஹஸ்தே ஸமஸ்தம்.

ஸ்ரீ மஹாகணபதியின் ஆயிரம் திருநாமங்களை நன்கு உள்ளத்தால் பாவனை செய்வதால் எத்தகைய பயன் ஏற்படுகின்றதோ அத்தகைய பயனை கணக்கிலடங்காத தானங்களைச் செய்வதனாலும், எண்ணிறந்த வ்ரதங்களைப் பட்டினி, தூக்கமின்மை முதலிய கடுமையான நியமங்களுடனும் அனுஷ்டிப்பதனாலும் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் அனைத்திலும் முறைபபடி நீராடுதலாலும் ஜ்யோதிஷ்டோமம் முதலிய அனேகம் வேள்விகளைச் செய்து முடிப்பதனாலும்

அடைய முடியாது. இந்த ஆயிரம் திருநாமாக்களை எவனொருவன் தினந்தோறும் ஸூர்யன் உதயமாகும் காலை வேளையிலோ, நடுப் பகலிலோ, மாலையிலோ அல்லது மூன்று வேளைகளிலுமோ அல்லது எல்லா காலத்திலுமோ கூறிக் கொண்டிருக்கின்றானோ அந்த பக்தன் தான் வஸிக்கும் நாட்டிற்கே தலைவன் ஆகிறான். பெரியோர்களுக்கு உள்ள சிறந்த புகழை அடைகிறான். இடையூறுகளைத் தகர்த்து எறிகின்றான். நாட்டினர் அனைவரையுமே தன் இஷ்டப்படி நடப்பவர்களாகச் செய்கிறான். பிணியற்று நீண்ட ஆயுளைப் பெற்று புதல்வர்களுடனும், பேரன்மார்களுடனும் ஸந்தோஷத்துடன் வாழ்க்கையில் மேன்மேலும் வளர்ச்சியை அடைகின்றான்.

எளிய வாழ்க்கையை மேற்கொள்வதற்குக்கூட போதுமான செல்வம் இல்லாத ஏழையாய் இருப்பினும் எவன் ஒருவன், மஹா கணபதியின் திருவருளைப் பெறுவதற்கு உறுதியுடன், மஹாகணபதியை வழிபடுவதற்கு அனுகூலமானதும், தூய்மை வாய்ந்ததும், சிறிய அளவுடன் கூடியதுமான உணவை உட்கொண்டு ஸ்ரீ கணேசப் பெருமானை நறுமணமுள்ள நல்ல மலர்களைக் கொண்டு ஆயிரம் திருநாமங்களால் நான்கு மாத காலம் தொடர்ச்சியாக வழிபடுகின்றானோ அந்த பக்தன் தனக்கு இனி வரவிருக்கும் ஏழு பிறவிகளிலும்,ஏழ்மையை அனுபவித்தே தீர வேண்டும் என்ற விதி இருப்பினும், அந்த விதியை வேருடன் அழிக்கும் வலிமை உள்ள கணேசரின் திருவருளால் அவ் விதியை அழித்துவிட்டு ஏழ்மையிலிருந்து விடுபட்டு மிகச் சிறந்த செல்வச் செழிப்பை அடைந்து விடுகின்றான். இது பரமேச்வரரின் ஆணை. அச்சம் வேண்டாம். மேலும், எப்பொழுதும் இந்த கணபதி ஸஹஸ்ர நாமத்தை மிகுந்த ச்ரத்தையுடன், பாராயணம் செய்யும் புண்ணியம் செய்த மனிதனுக்கு பிணியற்ற நீண்ட ஆயுள், மாசு படியாத குலம் (குடி), எளியவர்களிடம் உள்ள ஏழ்மையை ஒழிக்கும் செல்வம், எப்பொழுதும் களங்கம் இல்லாத கீர்த்தி, எப்போதும் புதுமையுடன் பேசும் திறன், பிணியால் தீண்டப்படாத உடல் வனப்பு, நல்லொழுக்கம் உள்ள புதல்வர்கள், நற்குணம் நிறைந்த அனுகூலமான மனைவி, திட்டமிட்டதெல்லாம் தடையின்றி உண்மையாய் கிடைப்பது இவையாவும் யாதொரு தடையும் இன்றி ஏற்படுகின்றன. இது ஸத்யம்.

# श्रीगणेशैकविंशतिनामावलिः

# ஸ்ரீ கணேசைகவிம்சதிநாமாவலி:

ஸ்ரீ கணேசருடைய ஆயிரம் திரு நாமாக்களை பாராயணம் செய்வதற்குச் சக்தியற்றவர்களுக்காக கருணை கூர்ந்து ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ர நாமத்திற்கு ப்ரதிநிதியாக இருபத்தொன்று நாமாக்களைக் கூறி முழுமுதற்கடவுளான தன்னையே நமஸ்கரித்து மங்களம் செய்துகொண்டு சிவபெருமானைக் குறித்துச் செய்யப்படும் இந்த ஸஹஸ்ரநாம உபதேசத்தைப் பூர்த்தி செய்கின்றார்.

गणञ्जयो गणपतिर्हेरम्बो धरणीधरः
महागणपतिर्लक्षप्रदः क्षिप्रप्रसादनः

கணஞ்ஜயோ கணபதிர்ஹேரம்போ தரணீதர:
மஹாகணபதிர்லக்ஷப்ரத: க்ஷிப்ரப்ரஸாதன:

अमोघसिद्धिरमितो मन्त्रश्चिन्तामणिर्निधिः
सुमङ्गलो बीजमाशापूरको वरदः शिवः

அமோகஸித்திரமிதோ மந்த்ரச்சிந்தாமணிர்நிதி:
ஸுமங்கலோ பீஜமாசாபூரகோ வரத: சிவ:

काश्यपो नन्दनो वाचासिद्धो ढुंढिविनायकः
मोदकैरेभिरत्रैकविंशत्या नामभिः पुमान्

காச்யபோ நந்தனோ வாசாஸித்தோ டும்டிவிநாயக;
மோதகைரேபிரத்ரைகவிச்த்யா நாமபி: புமான்.

यः स्तौति मद्गतमना मदाराधनतत्परः
स्तुतो नाम्नां सहस्रेण तेनाहं नात्र संशयः

ய: ஸ்தௌதி மத்கதமனா மதாராதனதத்பர:
ஸ்துதோ நாம்நாம் ஸஹஸ்ரேண தேநாஹம் நாத்ர ஸம்சய:

கணஞ்ஜய: (गणञ्जयः) கணபதி: (गणपतिः) ஹேரம்ப: (हेरम्बः), தரணீதர: (धरणीधरः), மஹாகணபதி: (महागणपतिः) லக்ஷப்ரத: (लक्षप्रदः), க்ஷிப்ரப்ரஸாதன: (क्षिप्रप्रसादनः), அமோகஸித்தி: (अमोघसिद्धिः), அமித: (अमितः), மந்த்ர: (मन्त्रः),

